

# வள்ளுவர் காட்டும் வாழ்க்கைப் பாதை

திருக்குறளார்

# வள்ளுவர் காட்டும் வாழ்க்கைப் பாதை

'தமிழ்மறைக் காவலர்'
'திருக்குறளார்' வீ. முனிசாமி

திருக்குறளார் பதிப்பகம்
D-4, டர்ன்புல்ஸ் ரோடு, நந்தனம்,
சென்னை–600 035.

முதற் பதிப்பு : டிசம்பர், 1972
திருத்திய இரண்டாம் பதிப்பு : டிசம்பர், 1987



திருக்குறளார் வெளியீடு

விலை ரூ. 15-00

அச்சிட்டோர் :
மூவேந்தர் அச்சகம்,
இராயப்பேட்டை
சென்னை-600 014.

"நடமாடும் பல்கலைக் கழகம்"

நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள்

# பாராட்டுரை

......பழைய உரையாசிரியர்கள் ஆகியோரின் கருத்துக்களின் ஆழத்தையும், அகலத்தையும், உயரத்தையும் நன்கு அறிந்து உள்ளத்தே வைத்துக் கொண்டு, ஒவ்வொரு குறளின் வெளிப் பொருள்—உட் பொருள்—கருப் பொருள்—தெளி பொருள்—உணர் பொருள்—அறிபொருள் ஆகியவற்றையெல்லாம் உணர்ந்து, அவற்றை நடைமுறை உலகியல் வாழ்க்கையின் பழக்க வழக்கங்களோடு ஒப்பிட்டுப் பார்த்துச் சொல்லுக்குச் சொல் சுவையறிந்து, பொருளுக்குப் பொருள் ஒளியுணர்ந்து, ஈடற்ற, எடுப்பான ஒரு தனி சிறந்த உரை விளக்கத்தை, உலகப் பொது மறையாம் திருக்குறளுக்கு இன்றைய நிலையில் தந்துள்ள பெருமை திருக்குறளார் வீ. முனிசாமி பெருந்தகையாளரையே சாரும்.

குறட்பாக்களுக்குக் குறிப்புரை தந்து, பொருளுரை பயந்து, கருத்துரை வழங்கித், தெளி பொருள் விளக்கம் தந்து, பண்டிதர் மட்டுமல்லாமல் பாமர மக்களும் புரிந்து கொள்ளும்படி நகைச்சுவையோடு சொல்லி, அவர்களைச் சிரிக்க வைத்து, நயப்பாடுகள் கூறிச் சிந்திக்க வைத்துத்,

திருக்குறளை முழுமையாகக் கொண்டு வந்து நிறுத்தும் வல்லமை பெற்றவர் ஒருவராகத்தான் இருக்கிறார்; ஒரே ஒருவராகத்தான் இன்றைய நிலையில் இருக்க முடிகிறது. அந்த ஒரே ஒருவராகக் காட்சியளிப்பவர்தாம் பெரு மதிப்பிற்குரிய **திருக்குறளார்** ஆவார்கள்.

திருவள்ளுவர் சிறு குறட்பாவினுள் பெருங் கருத்துச் செறிவுகளைப் புகுத்தினார். திருக்குறளார் அப்படிப் புகுத்தப்பட்ட கருத்துச் செறிவுகளை ஒவ்வொரு குறட்பாவி னின்றும் பிழிந்தெடுத்து வெளிப்படுத்திக் காட்டும் பணியை, அரங்கச் சொற்பொழிவுகளின் மூலமாகவும், திருக்குறள் வகுப்பின் வாயிலாகவும், கட்டுரைகள் மூலமாகவும் நிறைவேற்றியுள்ளார்.

**திருக்குறளார் அவர்கள் 1935-ஆம் ஆண்டு தொடங்கிய குறள் நெறிபரப்பும் பெரும்பணி** இன்றளவும் தொடர்ந்து பல்வேறு வகைகளில், பல்வேறு வழிகளில், பல்வேறு இடங் களில், பல்வேறு மக்களிடையே, பல்வேறு விதங்களில், பல்வேறு சுவைகளுடன் வீறுநடை போட்டுக் கொண்டு வருகிறது.

அரண்மனைகளில் மட்டுமே மன்னர்கள் முன்னிலையில் தவழ்ந்து கொண்டிருந்த திருக்குறளை, ஆலமரத்தடிக்குக் கொண்டு வந்து பாமர மக்களின் முன்னிலையில் நடமாடச் செய்தவர் **திருக்குறளார்** ஆவார்கள்.

பண்டிதர்களின் அரங்கிலே மட்டும் இடம் பெற்றிருந்த திருக்குறளை பாமரர்களிடத்தில் கொண்டு வந்து சேர்த்த வரும் அவரே ஆவார்கள். பண்டிதர்கள், அரைகுறையாகப் படித்தவர்கள், பாமரர்கள் ஆகிய அனைவர் முன்னிலையில் நின்று குறள்நெறியின் பேருண்மையையும், பெருஞ்சிறப்பை யும், பெரும் பயனையும் எளிமையாக எடுத்துச் சொல்லி, அவர்களையெல்லாம் செவிமடுக்க வைத்தார். நகைச்சுவை படச் சொல்லி எல்லோரையும் சிரிக்க வைத்தார்; நயம்படச்

சொல்லி எல்லோரையும் சிந்திக்க வைத்தார்; நன்மைபடச் சொல்லி எல்லோரையும் செயலாற்ற வைத்தார்.

சென்ற நாற்பது ஆண்டுக் காலத்திற்கு மேலாகக் குறள் நெறிக் கருத்துக்களைத் தமிழகத்தின் நாடு நகரங்களிலும், சிற்றூர் பேரூர்களிலும், பட்டி தொட்டிகளிலும், பரப்பிய தோடல்லாமல், இந்தியத் துணைக் கண்டத்தின் பெரு நகரங்களிலும் அறிமுகப்படுத்திச் சிறந்த தமிழ்ப் பண்பாட்டை வளர்க்க, அரும்பாடுபட்ட திருக்குறளார் அவர்கள், என்றென்றும் போற்றுதலுக்கும் பாராட்டுத லுக்கும், வாழ்த்துதலுக்கும், வரவேற்றலுக்கும் உரியவர் ஆவார்கள்.

நாட்டுக்கு நல்ல தொண்டாற்றிவரும் திருக்குறளா ருக்குத் தமிழக அரசு தன் நன்றிக் கடனை உரிய முறையில் செலுத்த வேண்டும் என்ற விழைவை நானும், மாண்புமிகு செய்தித்துறை அமைச்சர் அருமை நண்பர் இராம. வீரப்பன் அவர்களும் கொண்டிருந்தோம். அந்த விழைவை மாண்புமிகு தமிழக முதல்வர், பொன்மனச் செம்மல் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். அவர்கள் ஏற்று, 1982 செப்டம்பர் 15-ஆம் நாள் நடைபெற்ற பேரறிஞர் அண்ணா அவர்களின் பிறந்த நாள் விழாவில், தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்களின் பெயரால் அமைந்துள்ள விருதையும், பத்தாயிரம் வெண் பொற்காசுகள் அடங்கிய பொற் கிழியினையும் திருக்குறளாருக்கு வழங்க இசைவு அளித்தார் கள். அந்த விருதினையும் பொற்கிழியினையும், பெருந்தகை திருக்குறளாருக்கு வழங்கும் பேறு எனக்குக் கிடைத்தமையை எண்ணி எண்ணி நான் இறும்பூதெய்தினேன்.

> ''நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
> பண்பு பாராட்டும் உலகு''

என்னும் குறட்பாவின் கருத்துக்கு ஏற்ப நிகழ்ச்சி நடை பெற்றது; எம்போன்றோர்க்கு பெருமகிழ்ச்சியை அளித்தது.

**பெருந்தகை வீ. முனிசாமி அவர்கள் 'திருக்குறளார்' குறள் நாவலர், 'திருக்குறள் கேசரி', முப்பால் வித்தகர், திருக்குறள் இரத்தினம்** போன்ற பாராட்டுப் பட்டயங்கள் பலவற்றை, அறிஞர் பெருமக்களிடமிருந்து, அவ்வப்போது பல்வேறு இடங்களிலும் பெற்றிருப்பதே அவரது ஓங்கு புகழுக்கு எடுத்துக்காட்டாகும்.

குறள் நெறியைப் பரப்புவதற்கு என்று **திருக்குறளார்** நடத்தி வந்த 'குறள் மலர்' என்ற இதழும், குறள் நெறிக் கருத்துக்களைப் பற்றி அவ்வப்போது அவர் வெளியிட்டுள்ள சிறுசிறு நூல்களும் அவரது எழுத்தாற்றல் சிறப்புக்கும், அவரது பெருமைமிகு புகழுக்கும் எடுத்துக்காட்டாக விளங்குவனவாகும்.

**இரா. நெடுஞ்செழியன்**

மாண்புமிகு அமைச்சர் **இராம. வீரப்பன்** அவர்கள்

# பாராட்டுரை

ஒப்புயர்வற்ற திருக்குறளின் சிறப்புக்களை, திருக்குறள் காட்டும் வாழ்க்கை நெறிகளை, எண்ணி எண்ணி மகிழும் இலக்கிய நயங்களை, சாதாரண—எளிய, பாமரரும் உணரும் வகையில் எடுத்து விளக்கிடும் பணியை, கடந்த நாற்பது ஆண்டுகட்கு மேலாகத் தமிழறிஞர் திருக்குறளார் முனிசாமி அவர்கள் மேற்கொண்டு வருகிறார்கள்.

திருக்குறள் என்றால் புலவர்களும் படித்தவர்களும் மட்டுமே தெரிந்துகொள்ள வேண்டிய 'நூல்' என்றிருந்ததை எழுதப் படிக்கத் தெரியாதவரும் புரிந்து கொள்ளும் வகையில், சிரிக்கச் சிரிக்கச் சொல்லி, சிந்தனையைத் தூண்டி, குறளைப் பரப்பும் மகத்தான பணிக்குத் தன்னை ஒப்படைத்துக் கொண்டவர் திரு. முனிசாமி அவர்கள்.

அவருடைய ஆற்றல் மிக்க தமிழறிவும், திருக்குறள் மீது அவர் கொண்ட அளவற்ற பற்றும், நாடெங்கும் திருக்குறளை முழங்கச் செய்த மகத்தான தொண்டும் அவருக்குத் "திருக்குறளார்", "திருக்குறள் முனிசாமி" என்ற சிறப்புப் பட்டங்களை ஈட்டித் தந்தன. 'திருக்குறளார்' என்றாலே திரு. முனிசாமி அவர்களைத்தான் குறிக்கும் என்ற சிறப்பே, தமிழகம் ஏன் இந்தியத் துணைக் கண்டம் அவரைப் பாராட்டிக் கொண்டிருப்பதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

வாழ்நாள் முழுதும் பல்லாயிரக்கணக்கான சொற்பொழிவுகளின் மூலமும், கட்டுரைகளின் மூலமும் எடுத்துரைத்து வந்த ஆராய்ச்சிக் கருத்துக்களை ஒன்றாகத் திரட்டி 'உலகப் பொதுமறை திருக்குறள் உரை விளக்கம்' என்ற பெயரில் நூலொன்று உருவாக்கியுள்ளார்கள்.

திருக்குறளுக்குப் பல அறிஞர்களால் உரை வழங்கப்பட்டிருக்கிறது. ஆனால் திருக்குறளார் தந்துள்ள உரை விளக்கம் அவருக்கே உள்ள சிறப்புமிக்க ஆற்றலின் அடிப்படையில் வழங்கப்பட்டிருப்பது இந்நூலின் சிறப்பாகும்.

புரட்சிக் கவிஞர்

## பாவேந்தர் பாரதிதாசன்

# பாராட்டு

திராவிட நாட்டுளீர் உங்கள் செயற்கெலாம்
அறமே அடிப்படை ஆதல் வேண்டும்!
அறம் எனல் வள்ளுவர் அருளிய திருக்குறள்!
செல்லும் வழிக்குத் திருக்குறள் விளக்கு!
மனமா சறுக்கும் இனிய மருந்து!
கசடறக் கற்க; கற்றிலார் அறிஞர்பால்
கேட்க! கேட்க!! திராவிடம் மீட்க!
ஔவையார் அருளிய ஆத்திசூடியில்

ஒரு தொடர்தன்னை—ஒன்றுக்கான
உரையை—எப்படி ஒருவர் இலேசாய்
நினைவில் நிறுத்தி இனிதுரைப்பாரோ,
அப்படித் திருக்குறள் முனிசாமி அறிஞர்
முப்பால் ஆயிரத்து முன்னூற்று முப்பது
குறளையும் அவற்றிற்குக் கொடுத்த பொருளையும்
நினைவில் நிறுத்தி இனிது விளக்கும் ஓர்
ஆற்றல் உடையவர்! அவர் திருக்குறள் மலர்

வழங்கும் நகைச்சுவை மறச்சுவை பிறசுவை
ஆர்ந்தசொல் அனைத்தும் பெரும்பயன் அளிப்பவை!
அரிசிமா இட்டலி அளிப்பதாய்ச் சொல்லிப்
பாசிப்பயற்றுமி படைப்பார் அல்லர்;
அறிஞரின் பேச்சும் எழுத்தும் அருங்குறள்
தேன்ஆற்றி னின்று செம்பில்மொண் டளிப்பவை!
குறட்பயன் கொள்ள நம்திருக்
குறள்முனி சாமிசொல் கொள்வது போதுமே!

## 'வள்ளுவர் வழியே வாழ்க்கையின் தொண்டு' 'தெள்ளு தமிழ்த்தொண்டும் அதுவே ஆகும்.'

தமிழ் மண்ணில் பிறந்து, தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்டு வாழ்கின்ற வாழ்க்கையே மனித வாழ்க்கையின் தனிச் சிறப்பு என்று கருதுவதுதான் தமிழனுக்கு இருக்கவேண்டிய உயர்ந்த பண்பாகும்.

என்னுடைய இளமை காலம் முதற்கொண்டே உலகப் பொதுமறையாகிய 'திருக்குறள்' நூலினை நன்றாகக் கற்க வேண்டும் என்றும், திருவள்ளுவர் கருத்தினை நாடறியச் செய்யவேண்டும் என்றும் ஆர்வத்துடன் இருந்தேன் என்பதினைப் பெருமையுடன் சொல்லிக் கொள்கின்றேன்.

என்னுடைய உயர் நிலைப் பள்ளி படிப்பினையும், கல்லூரி படிப்பினையும் திருச்சியில் முடித்தேன். 1935ம் ஆண்டிலேயே நல்லமுறையில் குறட்பாக்கள் அனைத்தையும் மனப்பாடம் செய்து நல்ல தமிழ்ப் புலவர்களிடம் உரை பயின்று மகிழ்ந்தேன். பிறகுதான் சட்டக்கல்லூரி படிப்பிற்குச் சென்னைக்கு வந்தேன். நகைச்சுவையுடனும், எளிமை நயத்துடனும் பேசுகின்ற பழக்கத்தினை அந்தக் காலத்திலேயே வளர்த்துக்கொண்டேன்.

திருக்குறள் மக்களிடையே நன்கு பரவுவதற்குச் சொற்பொழிவுகள் நிகழ்த்துவது மட்டும் போதாது என்று கருதி மிகமிக குறைந்த விலையில் 40 நூல்களுக்கு மேலாக எழுதி வெளியிட்டு வந்தேன். இந்தப் பணியினை 1945ம் ஆண்டிலிருந்து செய்து வந்தேன். பேச்சினாலும், எழுத்தினாலும் கடந்த 50 ஆண்டுகளாக அடியேன் செய்து வந்த தொடர்ச்சியான பணியினால்தான் திருக்குறள் சிந்தனை மக்க

ளிடையே நன்கு பரவத் தொடங்கியது என்று கூறுவது மிகையாகிவிடாது.

அந்தக் காலத்தில் நான் எழுதி வெளியிட்ட சிறுசிறு நூல்களை எல்லாம் தொகுத்து வெளியிட வேண்டும் என்று என்னுடைய நண்பர்கள் பெரிதும் ஆர்வத்தினை உண்டாக்கினார்கள். அத்தகைய தொகுப்பு நூல்களில் ஒன்றுதான் இந்த நூலும் ஆகும்.

1952ம் ஆண்டு முதல் 1957 வரையில் டெல்லி பாராளு மன்றத்தில் நான் உறுப்பினராக இருந்த காலத்தில் அந்த சபையில் திருக்குறள் ஒலிக்குமாறு செய்ய முடிந்தது என்பதனைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். பாரத நாட்டின் வடக்கே பல முக்கிய நகரங்களுக்கும் சென்று குறள் மணம் பரப்புகின்ற பணியினைச் செய்யமுடிந்தது. பல முறை கடல் கடந்து மலேசியா, சிங்கப்பூர் நாடுகளுக்குச் சென்று திருக்குறள் தொண்டு செய்வதில் மன நிறைவு பெற்றேன்.

தமிழ்நாட்டில் பிறந்து, தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்டு, வாழ்கின்ற ஒவ்வொரு தமிழனும், திருக்குறள் பயிற்சி பெற்றிராவிட்டால், தமிழன் என்று சொல்லிக் கொள்ளும் பெருமைக்கு உரியவர் ஆகா மாட்டார் என்பது எளியேன் கருத்தாகும்.

அன்புள்ள,

[signature]

# திருக்குறள் உலா வரவேண்டும்!

தமிழ்நாடு எத்தனையோ அறிஞர்களையும் மகான்களையும் உருவாக்கிப் பெருமை பெற்றிருக்கிறது. அதே போல், அந்த அறிஞர்களும் மகான்களும் எண்ணிலடங்காக் கருவூலங்களை — எண்ணங்கள் வாயிலாக — நூல்கள் வாயிலாக அளித்துப் பெருமை பெற்றிருக்கிறார்கள்.

தமிழ்மறை என்றாலே, திருக்குறளும் திருவள்ளுவரும் நினைவில் நிழலாடும். அதுபோல் திருக்குறள் என்றாலே, அப்பா திருக்குறளார் அவர்கள்தான் மக்கள் மன்றத்தில் திருஉலா வருவார்கள்.

அப்பா திருக்குறளார் அவர்கள் கூட்டத்தில் பேசுகிறார் என்றால், வானொலியில் உரையாற்றுகிறார் என்றால், அவர் உரை கேட்க ஆவலோடு காத்திருப்பார்கள். நகைச்சுவையோடு தத்துவங்களை எளிய தமிழில் சொல்லும் பாங்கு அனைவரையும் ஈர்க்கக் கூடியதென்பதை யாவரும் அறிவர்.

பட்டி தொட்டிகளெங்கும் பாமரர்களும், படித்தவர்களும், ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக அப்பா திருக்குறளார் அவர்களின் திருக்குறள் நெறியால் பயன்பட்டவர்கள் ஏராளமானவர் என்றால் மிகையில்லை.

'ஏ, மனிதனே!' என்று, இந்தச் சமுதாயத்தைப் பார்த்து, அறிநெறிகளால் அவர் சாடும் பக்குவத்தை வேறு யார் சொல்ல முடியும்? மனிதன் மனிதனாக வாழ வேண்டும் என்பதை அறிவுறுத்தும் பாங்கே தனி.

அரசியலிலும், அறிவியலிலும், வாழ்வியலிலும், பொருளியலிலும், அவர் எடுத்து வைக்கும் வாதங்கள் எல்லோரையும் வியக்கச் செய்யும். அவர் தமிழகம் செய்த

நல்வினைப் பயனால் நமக்குக் கிடைத்த விலைமதிப்பில்லா கோமேதகமன்றோ!

அப்பா அவர்களுடைய—வள்ளுவர் நெறி வாழ்க்கையைக் கொண்டே — மாண்புமிகு முதல்வர் டாக்டர் எம்.ஜி.ஆர். அவர்கள், திருக்குறள் நெறிபரப்பு மையம் ஒன்றை உருவாக்கி, அதையும் வள்ளுவர் கோட்டத்திலேயே அமைத்து, சீரோடும் சிறப்போடும் நடை போட வைத்துப் பெருமைப்படுத்தியுள்ளார். இது காலத்தால் பாராட்டும் ஒரு பெரும் பேறல்லவா!

எளிமை தோய திருக்குறள் நெறியோடு தம் குடும்ப வாழ்க்கையை அமைத்துக்கொண்டு, அந்த வாழ்க்கையைப் போல் மற்றவர்களும் வாழ வகை செய்துள்ளார். அவர் தொண்டு மக்களின் நல்வாழ்வை மலரச் செய்கிறது.

'வள்ளுவர் காட்டும் வாழ்க்கைப் பாதை' என்னும் இந்நூல், ஒவ்வொருவரும் எப்படி வாழ வேண்டும் என்னும் அறிவியல் வழியைக் காண்பிக்கும் சிறந்த நூல்.

இந்த நூல் தமிழ்மக்கள் விரும்பிப் படித்துப் பயன் பெற்று வாழ்வில் உயருமளவிற்கு உருவாகியுள்ளது.

உலகிற்குப் பொதுமறை ஒரு திருக்குறள் போல, தமிழகத்திற்கு ஒரு திருக்குறளார் விளங்குகிறார்கள். அவர்களுடைய அனைத்து நூல்களும் மக்கள் மத்தியில் பெருவாரியாக உலாவர வேண்டும் என்பதே என் அவா!

நன்றி, வணக்கம்!

அன்புடன்;

**மூவேந்தர் முத்து**

# திருவள்ளுவர் காட்டும் வாழ்க்கைப் பாதை

## நல்லறிவும் புல்லறிவும்

"அறிவுடையார் எல்லாம் உடையார்" என்பது மனிதப் பிறவிக்கே பொருந்தியதாகும். மனிதன் பெற்றிருக்கும் சிறப்பான செல்வம் அறிவுச் செல்வமே யாகும். நல்லறிவு பெற்றிருக்கும் ஒருவன் எல்லா இன்பத்தினையும் தடையின்றிப் பெறுவான்.

எலலா இன்பங்களும் அவனிடம் வந்து சேரும்; செல்வத்தைச் சேர்ப்பதற்கும் அதைப் பாதுகாப் பதற்கும் அவனாலேயே முடியும். எல்லாச் செல்வமும் அவனிடம் உண்டு என்பதற்காகவே 'எல்லாம் உடையார்' என்று கூறப்பட்டது.

அறிவினை, நல்லறிவு—புல்லறிவு என்று பாகு படுத்திக் கூறலாம். புல்லறிவு உடையவன் வாழ்க்கை யினைத் தீமையாக்கிக் கொள்ளுவான். அறிவு பெறாத வனிடத்தில் உலகத்தார் கூறும் ஏனைய பலவகையான செல்வங்கள் இருந்தாலும் அவை அவனுக்குப் பயன் தராமலேயே போகும்.

அறிவினைப் பெற்று அதனை நன்கு பயன்படுத்தி வாழாதவன் மனிதப் பிறவியில் தாழ்ந்தவனாகவே கருதப்படுவான்.

பேதைகள் என்றும், புல்லறிவாளர்கள் என்றும், கயவர்கள் என்றும் இன்னும் இவ்வாறான பல பெயர்களால் அறிவில்லாதவர்கள் குறிக்கப்படுவார்கள்.

நல்லறிவு பெறாத மக்கள் நிறைந்த நாடு முன்னேற்றமடைதல் முடியாததாகும். அறிவில்லாதவர்கள் வேறு பல வகையான செல்வங்களைப் பெற்றிருந்தும் அவற்றை நல்ல முறையில் நுகர முடியாது. ஆனபடியால் அவர்களை 'வறிஞர்கள்' என்று கூறுவது மிகையாகாது.

'அறிவுடையார் எல்லாம் உடையார்' என்று தொடங்கப்பெற்ற குறட்பா, 'அறிவிலார் என்னுடையரேனும் இலர்' என்று முடிகின்றது. இருந்தும் நுகர முடியாதவர்களானபடியால் 'இலர்' என்றே கூறப்பட்டனர்.

மக்களால் மதிக்கப் பெற்ற பெரிய செல்வங்கள் என்று கூறப்பட்டாலும் பயனின்றியேதான் முடியும் என்பதைச் சுட்டிக் காட்ட 'என்னுடையரேனும் இலர்' என்பதாக வலியுறுத்தப்பட்டது.

அறிவு வளரக் கூடியது; வளர்க்கப்பட வேண்டியது; நிலைத்து நிற்பது; அழிவில்லாதது. எனவேதான் "எல்லாம்" என்ற சிறப்புச் சொல்லும் கூறப்பட்டது. அறிவுள்ளவனே தன்னைத்தான் உயர்த்திப் பலருக்கும் பயன்படுவான்.

நல்லறிவினைக் கெடுத்துப் புல்லறிவினைத் துணையாகக் கொண்டு வாழ்பவன் புறக்கணிக்கப்பட

வேண்டியவனாவான். புல்லறிவாளன் பிறர் சொலலும் நற்கருத்துக்களையும் ஏற்கமாட்டான். தானேயும் நற்கருத்துக்களை அறிந்து கொள்ளவும் மாட்டான்.

"அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார், என்னுடைய ரேனும் இலர்' என்று வழங்கும் குறட்பா வில் 'என்' என்னும் சொல் சிந்திக்கத் தக்கதாகும். 'அறிவார்' 'அறிவிலார்' என்று இருவகையில்தான் மக்கள் பிரிக்கப்படுதல் வேண்டும்.

## பகுத்தறிவே மனித அறிவு

உலகில் அறிவிற்குக் கொடுக்கப்பட வேண்டிய இடம் வேறு எப்பொருளுக்கும் கொடுக்க முடியாத தாகும். மனித இயல்பில்—நடைமுறையில் செயற்படும் அத்தனையும் அறிவின் அடிப்படையிலேயே நடத்தல் வேண்டும்.

உலகில் பிறந்து வாழ்கின்ற ஏனைய பிறவி களுக்கெல்லாம் மனிதன் பெற்றிருக்கின்ற அறிவு கிடையாது. பகுத்தறிவு என்றும், மனித அறிவு என்றும், ஆறாவது அறிவு என்றும் சிறப் பித்துப் பேசப்படுவதெல்லாம் 'நல்லறிவு' ஒன்றினையே யாகும்.

அறிவில்லாதவர்கள் அடைகின்ற துன்பங்கள் மிகப் பல. அறிவில்லாத மக்களிலே புல்லறிவாளர்கள் என்பவர் ஒருவகையினராவர்; புல்லறிவாளர்களிடம் மனிதப் பண்பாடு இருக்காது. அறிவில்லாதவர்கள் தமக்குத்தாமே துன்பங்களை வலிய வரவழைத்துக் கொள்ளுவார்கள். கொடிய துன்பத்தினையும் தாமே உண்டாக்கிக் கொள்ளுவார்கள்; குற்றங்களைப் புல்லறி வினால் செய்து விடுபவர்களாவார்கள்.

அவர்கள் தங்களுக்குத் தாமே செய்து கொள்ளும் துன்பத்தினை நினைத்துப்பார்த்தால், அவர்களுடைய கொடிய பகைவர்கள்கூட அத்தகைய தீங்கினை அவர்களுக்குச் செய்ய முடியாது என்றே கூற வேண்டும்.

ஒருவனுக்குப் பகைவன் தீங்கு செய்ய வேண்டுமென்றால், அப்பகைவன் குறிப்பிட்ட ஒரு தீங்கினையே செய்வான்; அதுவும் குறிப்பிட்ட ஒரு காலத்திலேயே செய்வான்.

ஆனால் புல்லறிவுடையவனோ எல்லா காலத்திலேயும் எல்லாவகையான தீமைகளையும் தனக்குத் தானே செய்துகொள்ளுவான்; துன்பத்தினைத் தேடிக் கொள்ளுவான். ஒருவனைத் துன்பப்படுத்துகின்ற துன்பத்தினை, "பீழிக்கும் பீழை" என்று ஆசிரியர் திருவள்ளுவர் குறித்துக் காட்டுகிறார்.

உலக வழக்கத்தில், ஒருவன் நன்மையைத்தான் தேடிக் கொள்ளுவான். இதுதான் இயற்கையுமாகும். ஆனால் புல்லறிவாளனோ அப்படிப்பட்டவனல்ல. "பீழிக்கும் பீழையினைத்" தேடிப் பார்த்து வரவழைத்துக் கொள்ளுவான்.

அப்படி அவன் வரவழைத்துக் கொள்ளும் பீழை அவனுடைய பகைவர்களாலும் செய்யவே முடியாது என்பதைக் குறித்துக்காட்ட "செறுவார்க்கும் செய்தல் அரிது" என்று குறட்பா கூறுகின்றது. "செறுவார்" என்பது கொடிய பகைவர்களைக் குறித்ததாகும். புல்லறிவாளர்களின் செயல் வியப்பிற்குரியதேயாகும். ஏனெனில், பகைவனால் செய்யமுடியாத தீங்கினையும் தாமே உண்டாக்கிக் கொள்ளுகின்றார்கள் அல்லவா?

"அறிவிலார் தாம் தம்மைப பீழிக்கும் பீழை" என்று குறட்பாவின் முதல் அடி சொல்லுகின்றது. அறிவில்லாதவர்கள், அதாவது புல்லறிவாளர்கள், தமக்குத் தாமே வருத்துகின்ற துன்பத்தினைத் தேடிக் கொள்ளுவார்கள் என்பதே பொருளாகும்.

அவ்வாறு அவர்கள் தேடிக் கொள்ளும் துன்பம் அவர்களுடைய பகைவர்களாலும் செய்வதற்கு முடியாததாகும் என்பதனைக் குறிக்க வேண்டியே, "செறுவார்க்கும் செய்தல் அரிது" என்று குறட்பா முடிகிறது

## தீராத துன்ப நோய்

புல்லறிவாளர்களால் நாட்டுக்குக் கெடுதி மிகுதியாகும். எனவே நல்லறிவாளர்களுக்கும், புல்லறிவாளர்களுக்கும் உள்ள வேறுபாட்டினை நன்கு அறிந்து கொள்ளுதல் வேண்டும். புல்லறிவாளர்கள்கூட நல்லறிவாளர்கள் போலக் காட்டிக் கொள்ளுவார்கள்.

உதாரணமாகச் சொல்ல வேண்டுமென்றால், புல்லறிவாளர்கள் தாங்கள் அறிந்திராதவைகளைப் பிறர் சொன்னால் கேட்டுக் கொள்ளமாட்டார்கள், நல்லறிவுள்ளவர்களுக்கு மாறாக நடந்து கொள்ளுவார்கள். குறிப்பாகக் கூற வேண்டுமென்றால், இன்பம் வருவதைத் தடுத்துத் துன்பம் வருவதையே மகிழ்ந்து ஏற்றுச் செயற்படுவர்.

புல்லறிவாளர்களைப்பற்றி நாம் சிந்தித்து நன்கு தெளிவு படுத்திக் கொள்ளுதல் வேண்டும். புல்லறிவாளர்கள் இவ்வாறு நடந்து கொள்வதற்குக் காரணம் யாது? என்பதையும் சிந்திக்க வேண்டும். இப்படிப்பட்ட

குணம் அவரிடத்தில் ஓர் நோயாகவே இருந்து விடுகிறது.

பொதுவாக நோய் என்பது போக்கிக் கொள்வதாகும். இவ்வுண்மையை உலக நடைமுறையில் நாம் கண்கூடாகக் காண்கிறோம். ஆனால் அப்புல்லறிவாளர் பெற்றிருக்கின்ற புல்லறிவு என்கின்ற நோய் அப்படிப்பட்டதன்று; அந்த நோய் அவர் உயிருள்ளளவும் இருந்தே தீரும்.

இன்னும் விளக்கமாகச் சொல்லவேண்டுமென்றால், இவ்வுலகில் வாழுகின்ற காலமெல்லாம் அவர் புல்லறிவாளராகவே வாழ்ந்து மறைவர். புல்லறிவு என்பது எவ்வளவு கொடுமையானது என்பதை நாம் அறிந்து கொள்ள முடிகிறது.

அறிவுள்ளவர்கள் நற்கருத்துகளைப் புல்லறிவாளருக்குச் சொல்லுவார்களேயானால், அதை அவர் செய்ய மாட்டார்; தானே அறிந்து தெரிந்து செயற்படுவார் என்றாலோ அப்படியும் தானாகவும் நல்லவைகளை யறியமாட்டார். இந்த இரண்டும் புல்லறிவாளரிடத்தில் நிலைத்து நிற்கும்.

அவ்வாறு வெறுக்கக் கூடியவைகளான இக்குணங்கள் உயிர் போகும் அளவும் அவரைவிட்டு நீங்காமல் இருப்பவைகளாகும். 'ஏவவும் செய்கலான் தான் தேரான் அவ்வுயிர் போஓம் அளவும் ஓர் நோய்' என்பதாகக் குறட்பா அமைக்கப்பட்டுள்ளது.

குற்றமான குணங்களைப் புல்லறிவாளர் எவ்வளவு பிடிவாதமாகக் கொண்டிருக்கிறார் என்பது தெள்ளத் தெளிய விளக்கப்பட்டது.

## புல்லறிவின் தனித்தன்மை

உலக இயற்கை என்னவென்றால் எல்லாரும் எல்லாவற்றையும் அறிந்து தெரிந்து இருப்பார்கள் என்று கூறமுடியாது. நம்மால் முடிந்ததை நாம் அறிவோம்; நாம் அறிந்திராத கருத்துகளை அறிந்திருக்கும் மற்றவர்கள் கூறக்கேட்டுத் தெளிவடைவோம். கற்பதினாலும் கேள்வியினாலும் உலக நடைமுறைப் பழக்கத்தினாலும் ஒருவர் நல்லறிவை வளர்த்துக் கொள்ளுகின்றார்.

இவ்வுண்மை இவ்வாறிருக்கப் புல்லறிவாளன் என்பவனோ மற்றவர்கள் கூறும் எந்த நற்கருத்தையும் வாங்கிக் கொள்ளமாட்டான். தனக்கு எல்லாம் தெரிந்ததுண்டு என்றே பேசுவார். அவரிடம் இருக்கும் இக்கொடிய எண்ணம் செவிச் செல்வத்தையே அவர் அடையாதபடி செய்துவிடுகின்றது.

தனக்கு எல்லாம் தெரிந்திருக்கின்றது என்ற எண்ணம் அவரிடம் வளர்ந்து நிலையாக இருப்பதாகும். புல்லறிவாளருக்கு நல்லறிவைப் புகட்ட முயற்சித்தால் அது வீணானதாகவே முடியும்.

புல்லறிவாளரிடம் சென்று அவர் கண்டறியாத உண்மையினை அவருக்கு ஒருவர் சொல்லப் புகுந்தால் சொல்ல வந்தவருக்கே தெரியாது என்று புல்லறிவாளர் முடிவு செய்து கூறுவார். ‘காணாதார்க்குக் காட்டுவான் தான் காணான்’ என்று ஒரு குறட்பா புல்லறிவாளரைப் பற்றிக் கூறத் தொடங்குகின்றது.

புல்லறிவாளருக்கு உண்மையினைக் காட்டச் சென்றவர் அவரால் பழிக்கப்பட்டுத்தான் அறியாதவராய் வர நேரிடும். ‘காணாதான்’ என்று அப்புல்லறி

வாளரைக் குறிப்பிட்டார். புல்லறிவாளருக்கு உண்மை சொல்லப் போனவர் அறிவில்லாதவர் என்ற பட்டத்தினை அவரால் பெற நேரிடும்.

அவ்வாறு உண்மையினைக் கண்டறிய முடியாத அப்புல்லறிவாளர் தன்னுடைய பிடிவாதமான புல்லறிவினால் தானே அனைத்தும் அறிந்திருக்கின்றோம் என்று முடிவு கட்டிவிடுவார். நல்லறிவு புகட்டச் சென்றவரிடம் ஒன்றையுமே அவர் தெரிந்து கொள்ள விரும்ப மாட்டார். அவர் தான் தனக்குள் கொண்டிருப்பதையே உண்மை என்றும் நற்கருத்து என்றும் கொள்ளுவார்.

கண்டறியாததை எல்லாம் கண்டதாக நினைத்துப் பேசும் இயல்பு புல்லறிவாளரிடம் இருக்கும். 'கண்டானாம் தான் கண்டவாறு' என்று புல்லறிவாளர்களைக் குறிக்கும் ஒரு குறட்பா முடிகின்றது. புல்லறிவாளர்கள் கூட்டம் மக்களிடையே நிறைந்திருந்தால் நல்லறிவாளர்கள் நன்மையினைச் செய்யவும் முடியாமல் போய்விடும்.

'காணாதான் காட்டுவான் தான் காணான் காணாதான் கண்டானாம் தான் கண்டவாறு' என்று வருகின்ற குறட்பா புல்லறிவாளர்களின் உள்ளப் போக்கினை அப்படியே எடுத்துக் காட்டுகின்றது.

பற்பல கருத்துகளை உணர்ந்து மனித வாழ்க்கையினைப் பண்பு பெற்ற வாழ்க்கையாக அமைத்தல் வேண்டும். அவ்வாறு நற்கருத்துகளை அறியும் வகைகளில் கேள்விச் செல்வம் என்பதும் ஒன்றாகும். இது மிகவும் இன்றியமையாத நற்பண்பாகும் என்றே கொள்ளுதல் வேண்டும். பிறர் சொல்லுவதை நன்றாகக் கேட்டறிந்து கொள்ளுகின்ற பழக்கம் மிகச் சிறந்த, தலைசிறந்த ஒன்றாகும்.

புல்லறிவாளர்கள் பிறரிடமிருந்து அறிந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணமே இல்லாதவர்களாவர். சொல்லுவதும் கேட்பதும் என்பது மனிதப் பிறவிக்கே உரிமையான பண்புகளில் ஒன்றாகும். மற்றவர்களுக்கு நற்கருத்துகளை நாம் சொல்லுகின்ற பழக்கம் இருத்தல் வேண்டும். அவ்வாறே மற்றவர்கள் சொல்லும் கருத்து களையும் நாம் கேட்டு உணர்ந்து அறிதல் வேண்டும்.

## எண்பொருளும் நுண்பொருளும்

நாம் பிறருக்குக் கூறுகின்றபொழுது அருமையான கருத்தைக் கூறினாலும் அதனை எளிமையாகக் கூறக் கற்றுக் கொள்ளவேண்டும். கேட்பவர்கள் புரிந்து கொள்வதற்கு அரிதானதாக இருக்கின்றதே என்று எண்ணித் தயங்குதல் கூடாது. எளிமையாகவே சொல்ல நாம் பழகுதல் வேண்டும்.

இதனை 'எண் பொருளவாகச் சொல்லுதல்' என்று ஆசிரியர் வள்ளுவனார் குறிப்பிடுவார். மிகமிக அருமை யான, நுட்பமான கருத்துகளாக இருந்தாலும் அதனை எளிமையாக, இனிமையாக, நயமாக, எடுத்துக் கூறக் கேட்பவர்கள் புரிந்துகொள்ளவேண்டும். பேசுகின்ற நல்ல முறைகளில் இதுவும் ஒன்று.

பிறருக்குச் சொல்லுதல் என்பதை விளக்கிக் கூறிய ஆசிரியர் பிறர் சொல்லுவதை எவ்வாறு கேட்டறிதல் வேண்டும் என்பதையும் விளக்கமாகக் கூறுகின்றார். மற்றவர்கள் பேசுகின்ற பொழுது சில கருத்துகளை மயங்கும்படியும் கூறுவார்கள். அவர்கள் எந்த முறை யில் கூறினாலும் அவர்கள் சொல்லியவற்றில் நுட்ப மான பொருள்களை நாம் அறிந்து கொள்ளுதல் வேண்டும் இதுதான் அறிவுடையவர்களின் செயலாகும்.

'பிறர் வாய் நுண் பொருள் காண்ப தறிவு' என்று குறட்பா முடிகிறது. நாம் பேசுதல்—பிறர் சொல்லக் கேட்டல் என்கின்ற இரண்டும் இன்றியமையாத மனிதப் பண்பாடுகளாகும். உலகப் பழக்கத்தில் பலர் மற்றவர்கள் கூறுவதைக் கேட்டுப் பழகும் பழக்கம் இல்லாதவர்களாகிவிட்டார்கள்.

இது அறிவுடைமையாகாது. நாம் பேசுவது மற்றவர்களுக்கு மிகவும் எளிமையாக விளங்க வேண்டுமே என்ற முறை அறியாமல் பேசுபவர்களும் இருக்கின்றார்கள். இதுவும் அறிவுடைமையாகாது.

இந்த இரண்டு பண்பாடுகளும் மிகவும் சிறந்தவை என்பது ஆசிரியரின் கருத்தாகும்; 'எண் பொருளவாகச் செலச் சொல்லி தான்பிறர்வாய் நுண் பொருள் காண்ப தறிவு' என்பது குறட்பாவாகும்.

அறிவுடைய மக்களின் செயல்களெல்லாம் எவ்வளவு சிறப்பானதாக இருக்கும் என்பது தெளிவாயிற்று. நுண் பொருள்களை அறிவுடையவர்கள்தான் புரிந்து கொள்வார்கள். புல்லறிவாளர்களோ எதையுமே கேட்டறிய மாட்டார்கள். அந்த எண்ணமும் அவர்களிடம் இருக்காது.

## இறைவன் அறிவன்

உலகமே அறிவிற் சிறந்தவர்களிடம் அமைந்துள்ளது என்று கூறுவது மிகையாகாது. இறைவனையும் அறிவுப் பொருளாகவே, அறிவின் தன்மையாகவே அமைத்துப் பேசுகின்ற கருத்தும் அறிவின் முதன்மையினை உணர்த்துவதாகும். அறிவுள்ள மக்கள் எத்தகைய செயல்களைச் செய்வார்களென்று ஒவ்வொன்

றாகப் பிரித்துக் கூறுதல் இயலாததாகும். பொதுத் தன்மையில் வைத்தே விளக்கிக் கொள்ளுதல் வேண்டும்.

## அறிவின் பெருஞ்சிறப்பு

அதிர்ச்சி தரக்கூடிய துன்பங்கள் அறிவுள்ளவர்களுக்கு வராது. எதிர்பாராத முறையில் திடும் என்று ஏற்படக்கூடிய துன்பங்கள் அதிர்ச்சியினைத் தரும் என்று கூறுதல் உலகப் பழக்கம். இறந்த காலம், நிகழ் காலம், எதிர்காலம் என்ற மூன்று காலங்களின் நிலையினையும் அறிவுடையவர்கள் நன்கு அறிந்து செயற்படுவார்கள்; எதிர்காலத்தினையும் நன்கு அறிந்து அதன்படியே நடந்து கொள்ளுகின்ற ஆற்றல் அறிவுடையவர்களுக்கே உண்டு.

இன்னும் உலக மக்களில் பலர் அறிவு நுட்பத்தை உணராதவர்களாகவே இருக்கின்றனர். மிக மிக நுட்பமானது அறிவாகும்; ஆழ்ந்து, அளந்து அளவிட முடியாதது அறிவாகும்; சிந்திக்க உள்ளத்தில் புதுமைகளைத் தோற்றுவிப்பது அறிவாகும். அறிவுள்ள மக்கள் இல்லாத நாட்டில் ஆட்சியும் நிலைக்காது.

இவ்வாறு பல படிகளில் சொல்லவேண்டிய அருமை நிறைந்தது ஆகும். அந்த அறிவின், மனித ஆற்றலின் ஒரு செயலாகக் கூறப்படுவது பின்னால் வருவதை முன்கூட்டியே அறிந்து கொள்வதாகும்.

இச்செயல் அறிவுடையோர்களாலேயே ஆவதாகும். நுட்ப அறிவு எதிர்காலத்தினை அறியச் செய்யும். எதிர்காலத்தினை அறிய முடியாதவர்களே அதிர்ச்சி தரும் துன்பங்களுக்கு இரையாகிவிடுவார்கள்.

ஒருவன் துன்பம் வந்தபொழுது நடுக்கமுற்றுக் கலங்குவதைக் காணுகின்றோம். எதிர்காலத்தில் தொல்லைகள் வரும் என்பதை பலரால் அறிந்து கொள்ள முடியாது. ஆனால், நல்லறிவு பெற்றவர்கள் அதனையறிந்து அத்துன்பம் வராதபடி முன்கூட்டியே தங்களைக் காத்துக் கொள்வார்கள்.

ஆதலால்தான் அதிர்ச்சி தரக்கூடிய துன்பங்கள் அறிவுடையோர்களுக்கு வருவதில்லை; அப்படிப்பட்டவர்களை 'எதிரதாக் காக்கும் அறிவினர்' என்று ஆசிரியர் பெருமையாகக் குறிப்பிடுகின்றார்.

## முன்னரே அறிவர் அறிவுடையோர்கள்

ஒன்றினை முன்கூட்டியே அறிந்து கொள்வது என்பது எளிதானதல்ல; நுட்பமான அறிவு படைத்தவர்களுக்கே முடியும். அவ்வாறு அறிந்து கொள்கின்ற அறிஞர்களுக்கு 'அதிர வருவதோர் நோய் இல்லை' என்பது சிறப்பான கருத்தாகும்.

மக்களுக்குத் துன்பம் தரக்கூடிய அத்தனைக்கும் 'நோய்' என்றே பெயர். நோய் வருதல் உடம்பிற்கும் உண்டு, உள்ளத்திற்கும் உண்டு; துன்பங்களைப் பொதுப்படக் கூறுகின்றபொழுது இரண்டுவகையாகப் பிரிக்கலாம்; அதிர்ச்சி தரக்கூடிய துன்பம், அதிர்ச்சி தராத துன்பம் என்று கூறப்படும்.

துன்பம் வருவதற்கு முன்னேயே காத்துக் கொள்ளுகின்ற அறிவு படைத்தவர்களுக்கு அதிர்ச்சி தரக்கூடிய நோய் எப்பொழுதுமே வராது என்று குறிப்பிடுகின்றார்; 'எதிரதாக் காக்கும் அறிவினார்க்கில்லைஅதிர

வருவதோர் நோய்' என்பது குறட்பாவாகும்; நல்ல முறையில் அமைந்துள்ள வாழ்க்கையும் அதிர்ச்சி தரக் கூடிய துன்பங்களினால் சிதைந்து விடுவதைக் காண்கிறோம்.

பொதுப்பட துன்பங்கள் வாழ்க்கையைச் சிதைக்கும் என்பது உண்மையே என்றாலும் எதிர்பாராமல் திடும் என்று வருகின்ற துன்பங்களே மிகக் கொடியவை என்பது புலனாயிற்று. ஆதலால் இத்தகைய காலங்களில் அறிவுதான் துணையாக நின்று காப்பாற்றுதல் வேண்டும்.

மனிதவாழ்க்கையில் வருமுன்னர்க் காத்துக்கொள்ளுதல் என்பது மிகமிக ஆழ்ந்து சிந்திக்க வேண்டியதொன்றாகும்; வந்த பிறகு காப்பாற்றிக் கொள்ளுதல் எளிதானதல்ல, இயலாமலும் போய்விடுமென்று கூறுதல் மிகையாகாது.

ஆகையினால் துன்பம் வருவதற்கு முன்பே, அதாவது குற்றம் தன்னைத் தாக்க வருவதற்கு முன்பே காத்துக் கொள்ளுதல் வேண்டும். அவ்வாறு துன்பம் வருவதற்கு முன்னே காப்பாற்றிக் கொள்ளாதவன் வாழ்க்கை அழிந்துவிடும் என்றும் கூறலாம். துன்பம் என்பது குறிப்பிட்டதொரு செயலை வைத்துப் புரிந்து கொள்ள முடியாததாகும்; அது பலதிறப்படும்.

குற்றங்கள் என்று கூறப்படுகின்ற குறைபாடுகளெல்லாம் துன்பத்தினையே தருவதாகும். ஆகையினால் வாழ்க்கையினையே அழித்துவிடுகின்ற துன்பங்களும் உண்டு. அத்தகைய துன்பங்கள் வரும் என்று பலர் எதிர்பார்க்க முடியாது. ஆனால் அறிவுள்ளவர்கள், குற்றம் குறைகள் எனப்படுகின்ற துன்பம்

வந்தபின் பார்த்துக்கொள்வோம் என்று இருக்க மாட்டார்கள்.

'வருமுன்னர்க்காவாதான்' அறிவில்லாதவனாகவே கருதப்படுவான்; அப்படிப்பட்டவன் வாழ்க்கை எந்த நேரத்திலும் தீமைக்குள்ளாக நேரிடும். கொடிய துன்பம் வந்த பிறகு அதனைத் தடுத்தல் பல நேரங்களில் முடியாததாகவே இருக்கும்; ஆதலால்தான் கொடிய குற்றமான துன்பம் வருவதற்கு முன்னேயே அறிவாளிகள் காத்துக் கொள்வார்கள். வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை நல்லதொரு உதாரணத்தினால் விளக்கப்படுகிறது.

## நெருப்பும் வைக்கோலும்

பார்ப்பதற்கு வைக்கோல் குவியல் பெரிதாகத்தான் காணப்படுகின்றது. அந்தக் குவியல் அமைக்கப்பட்டிருக்கும் முறை தனிப்பட்ட தன்மையுடையதாய் இருக்கும்; வைக்கோல் குவியலை 'வைத்தூறு' என்று கூறுவர். அவ்வளவு பெரிய வைக்கோல் குவியல் சிறு நெருப்பினால் இருக்கும் இடம் தெரியாது அழிந்து விடும்.

நெருப்பு பட்டவுடனேயே வைக்கோல் தீயினை விரைவில் பரவச் செய்யும்; அக்குவியலினுள் நெருப்பு எவ்வாறு விரைந்து பரவுகிறது என்பதைக் கண்டு கொள்ளுதலும் அரிதாகும்; வைக்கோல் குவியலின் உட்புறத்தில் நெருப்புச் சென்றுவிடும் என்பது இயல்பாகும்; வெளிப் புறத்தில் தண்ணீர் ஊற்றினாலும் அது உட்புறத்தில் பரவுகின்ற நெருப்பினை அணைத்தல் முடியாது.

இவ்வாறு வைக்கோல் குவியலினையும் நெருப்பினையும் சேர்த்து வைத்துப் பலதரப்பட்ட உண்மைகளை நாம் அறிந்துகொள்ளலாம். மிகப் பெரியதாகக் காட்சியளித்த வைக்கோல் குவியல் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடும்.

இச்செயலினை நெருப்பு செய்துவிடுகிறது; சிறிய நெருப்பு மிகப் பெரிய குவியலை அழிக்கும் என்பதே குறிப்பாகத் தெரிந்துகொள்ள வேண்டியசெய்தியாகும். ஆதலால் குற்றம் வருவதற்கு முன்பே காத்துக் கொள்ளுகின்ற அறிவினை, ஆற்றலினைப் பெற்றிருக்க வேண்டும்; வந்தபின் காத்துக் கொள்வோம் என்றிருத்தல் கூடாது.

பெரிய வாழ்க்கையும் சிறிய குற்றத்தினால் அழிந்து விடுமாம்; ஆதலால் துன்பம் வருவதற்கு முன்பே காத்துக் கொள்ளாதவனுடைய வாழ்க்கை 'எரி' என்று கூறப்படுகின்ற நெருப்பு பட்டவுடனேயே அழிந்து சாம்பலாகின்ற வைக்கோல் குவியலைப் போன்றதாகும்; இவ்வுண்மையினை 'வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரி முன்னர் வைத்தூறு போலக் கெடும்' என்ற குறட்பா கூறுகின்றது.

## இன்பமும் துன்பமும் இயல்பேயாகும்

வாழ்க்கையில் துன்பங்கள் வராமலேயே இருக்க வேண்டும் என்று எண்ணுதல் அறிவுடைமையாகாது; இன்பமும் துன்பமும் வாழ்க்கையின் இயல்பான தன்மைகளாகும். ஒருவன் தன்னுடைய மனத்தினை அமைத்துக் கொள்ளுகின்ற நிலையின் வழியே இன்ப துன்பங்களும் அமைந்து விடுகின்றன.

இன்ப துன்பங்கள் மனத்தின் வலிமையினையும் வலிமையற்ற நிலைமையினையும் பொறுத்திருக்கிறது. சிறப்பாகத் துன்பத்திற்குக் காரணம் மனோநிலைகள் என்பதனைக் குறிப்பிட்டுக் கூறுதல் வேண்டும்.

வருகின்ற துன்பம் மிகச் சிறிதாக இருந்தாலும் அறிவில்லாதவன் அதனைப் பெரிதாக நினைத்துத் துன்புறுகின்றான்; அறிவுள்ளவன் தன்னுடைய அறிவுத் திறத்தினால அத்துன்பத்தினை வெல்லுகின்றான். உள்ளம் என்று கூறப்படுகின்ற மனம் நினைக்கின்ற ஆற்றல் பெற்றது.

எண்ணுதல், நினைத்தல், சிந்தித்தல் என்பதெல்லாம் மனிதப் பிறவிக்கென்றே உள்ள அருமையான பண்பாடுகளாகும். மற்ற பிறவிகளுக்கு இந்த அரிய ஆற்றல் கிடையாது. மனிதனைக் கட்டுப்படுத்தி நல்ல முறையில் நடக்கச் செய்வது அறிவேயாகும்; ஆதலால் அறிவு மேன்மையான இடத்தில் வைத்துக் கருதப்படுகிறது.

துன்பத்தினை ‘இடும்பை என்று ஆசிரியர் கூறுவர்; இடும்பை என்பது மக்கள் எல்லோருக்கும் ஒவ்வொரு காலத்தில் வந்து போவதேயாகும். இடும்பை அளந்தறிந்து கூறமுடியாத ஒன்றாகும்; காலத்தினால் அறிய முடியாததாகும். இடும்பை உண்டாகின்ற காலமும் அறிய முடியாததாகும்; அதுபோலவே இடும்பையின் அளவும் அளவிட முடியாததாகும்.

இத்தகைய இடும்பைகள் அறிவில்லாதவனுடைய வாழ்க்கையைப் பெரிதும் குலைத்துவிடும்; பலர் வாழ்க்கையினை அழித்துவிடும். ஆதலால் இடும்பைகளுக்கு இரையாகாமல் காத்துக் கொள்ளுதல் மிகவும் சிறந்த

ஆற்றலும் பண்புமாகும். இடும்பைகளைச் சிறிதாக்கி அவைகளுக்கு அஞ்சாமல் நிலைத்து நிற்க வைப்பது ஒருவனுடைய அறிவேயாகும்.

## அறிஞன் உள்ளம் அதிர்ச்சி அடையாது

அறிவுடைய ஒருவன் தன் உள்ளத்தில் தோன்று கின்ற, துன்ப எண்ணங்களைப் பெரிதாக்கமாட்டான்; அவைகளை மிகச் சிறிதாகவே நினைப்பான். அவ்வாறு நினைப்பது அறிவின் வன்மையைப் பொறுத்திருக் கிறது. ஆதலால் அறிவு நிறைந்த ஒருவனுக்கே உள்ளம் என்கிற மனம் அடங்கி நிற்பதாகும்.

கரை புரண்டு ஓடுகின்ற வெள்ளத்தினைப்போல இடும்பைகள் வருவதும் உண்டு. இடும்பைகள் என்று குறிப்பிடும்பொழுது கடுமையான துன்பங்களெல்லாம் அதனுள் அடங்கும். வெள்ளம் என்பது திடீரென்று வருவதும் உண்டு; அளந்து கணக்கிட முடியாத முறை யில் வெள்ளம் பெருகி வருதல் உண்டு.

தணியாத வெள்ளமாக மிகுந்து வருதலும் உண்டு. வெள்ளம் வருகின்றபோது அது தணிந்துவிடும் காலத்தினை உணர்தலும் முடியாது. இவ்வாறாக நீர்ப் பெருக்கான வெள்ளத்தினைப் பல நிலைகளில் வைத்துப் பேசுவார்கள்.

ஆசிரியர் இந்த வெள்ளத்திற்கே இடும்பைகளை ஒப்பிட்டுக் காட்டுகின்றார். இடும்பைகளைக் கண்டு அஞ்சுதல் கூடாது, மயங்குதல் கூடாது. அளவிட முடியாத, இடும்பைகளும் ஏற்படக்கூடும்.

மனம் தளர்ந்து, உணர்ச்சி குன்றி, நிலை தடுமாறு கின்ற மாறுதலும் ஏற்படக்கூடும். ஆனால் இப்படிப்

பட்ட நிலைமைகள் எல்லாம் அறிவுடையவர்களைக் கெடுக்காது என்று ஆசிரியர் கூறுகின்றார்.

துன்பங்கள் வந்தபோது அறிவுத்திறன் பெற்றவர்கள் உள்ளத்தில் ஒன்றினை நினைப்பார்கள். அந்த நினைப்பு உறுதியாக இருக்கும். அப்படி நினைப்பது வருகின்ற துன்பத்தினைப் போக்குகின்ற எண்ணமாக இருக்கும்.

ஆதலால் இடும்பைகள் அழிந்து கெடும். ஒரு குறட்பா 'வெள்ளத்தனைய இடும்பை' என்று ஆரம்பித்து 'அறிவுடையார் உள்ளத்தின் உள்ளக் கெடும்' என்று முடிகிறது.

## இடும்பை என்பது துன்பமே யாகும்

இடும்பை வந்தால் அந்த இடும்பைக்கு உள்ளத்தினைப் பறிகொடுத்தல் கூடாது. அறிவுடையவர்கள் உள்ளத்தினை, அதாவது மனத்தினை வன்மையாக வைத்திருப்பார்கள்.

அவர்கள் தங்கள் உள்ளத்தில் இப்படிப்பட்ட இடும்பை வந்துவிட்டதே, இதனை நீக்கவேண்டுமே என்று நினைத்துப் பார்த்தவுடனேயே வந்த துன்பங்கள் எல்லாம் கெட்டொழிந்து விடும் என்கின்ற உண்மையினை 'உள்ளத்தின் உள்ளக்கெடும்' என்ற குறளடிச் சொற்கள் மெய்ப்பிக்கின்றன.

அறிவுடையவர்களை எத்தகைய அரிய இடத்தில் அமைத்துக் காட்டுகின்றார் ஆசிரியர் என்கின்ற சிறப்பு சிந்திக்கத் தக்கதாகும். இடும்பை என்கிற கொடிய பகைவனைத் தோற்கடித்து வெற்றி காணும் வீரனாக அமைந்துள்ளது அறிவேயாகும்.

துன்பத்திற்குக் காரணம் மனப்பக்குவம் அடையாமையே என்பது அறியக்கிடக்கின்றது. உள்ளம் என்று குறிப்பிடுகின்ற பொழுது அறிவுடையவன் உள்ளம், அறிவில்லாதவன் உள்ளம் என்று பிரித்துப் பார்த்தல் முறையாகும். அறிவுடையான் உள்ளம் நினைத்துப் பார்த்தவுடனேயே துன்பங்கள் எல்லாம் கெட்டுவிடும்.

இடும்பை என்பதை அறிவுடையவன் இன்பமாகவே கருதுவானே தவிர அவ்விடும்பைக்காகத் தன்னை வருத்திக் கொள்ளமாட்டான் என்பதும் நுட்பமாக உணர்த்தப்பட்டது. ஏனென்றால் இன்பமும் துன்பமும் மனோ நிலைகள் என்பது உலக வழக்காகும்.

இடும்பைகள் இல்லையென்றால் மனித வாழ்க்கை இன்பத்திலேயே வளர்வதாகும். வருகின்ற இடும்பைகளையும் இன்பமாகவே கண்டு அதை நீக்கும் அறிவுடையவர்கள் என்றும் இன்பமாகவே வாழ்வர் என்பது வெளிப்படையான உண்மையாகும்.

இடும்பைகள் இயல்பாகவே வருவதும் உண்டு. கல்வி கேள்விகளில் சிறந்தவர்களும் அறிவு நிறையப் பெற்றவர்களும் இயற்கையாக வருகின்ற துன்பங்களுக்கு ஆளாக நேரிடும். எத்தகைய ஆற்றலும் அறிவும் பெற்றிருந்தாலும் இயல்பாக வருகின்ற இடும்பைகள் வந்தே தீரும்.

ஆதலால் அத்தகைய இடும்பைகள் வருகின்ற பொழுது அறிவு நிறைந்தவர்கள் அதனைத் தடுத்து, குறைக்க முயன்று கலக்கமடையாமல் இன்பம் அடைவார்களென்பது குறிப்பிடத் தக்கதாகும்.

மனித உள்ளத்திற்கு மிகுந்த ஆற்றலும் சிறப்பும் உண்டு. 'உள்ளம்' 'மனம்' என்று கூறப்படுவது மனிதப் பிறவிக்கே உண்டு. மற்ற குறைந்த அறிவு பெற்ற பிறவிகளுக்குக் கிடையாது. 'உள்ளம்' என்பதற்கு 'ஊக்கம்' என்பது சிறப்பான அர்த்தமாகும். ஏனெனில் மன எழுச்சி என்பது மக்களுக்கென்றே அமைந்துள்ள சிறந்த குணமாகும்.

'உணர்ச்சி' என்றும், 'மன எழுச்சி' என்றும் 'ஊக்கம்' என்றும் சொல்லப்படுபவைகளெல்லாம் மனிதர்களுக்கே இருக்கவேண்டிய உயர்ந்த பண்பாடுகளாகையால் 'உள்ளம்' என்பதற்கும் 'ஊக்கம்' என்றே பொருளமைத்தனர்.

## ஊக்கம் எனப்படும் உள்ளமே சிறப்பு

'ஊக்கம்' என்பது உள்ளத்துடன் இரண்டறக் கலந்திருக்க வேண்டிய சிறப்பாகும். ஊக்கமில்லாதவர்கள் உள்ளம் உடையவர்கள் என்று கூறுவது பொருந்தாது என்பதே குறிப்பு. ஆதலால், ஊக்கத்தினை முதன்மையாக வைத்துத்தான் உள்ளத்தினைப் பேசுதல் வேண்டும்.

ஊக்கமில்லாதவர்களுக்கு முயற்சி இருக்காது. முயற்சி இல்லையென்றால் மனிதத் தன்மை குறைபட்டதாகிவிடும். ஆதலால்தான் உள்ளமும் ஊக்கமும் ஒன்றென்றே பேசப்பட்டது.

ஊக்கம் என்கிற உயர்ந்த குணத்தினை உள்ளம் என்றே ஆசிரியர் வள்ளுவனார் குறிப்பிடுவார். ஊக்கமுடையவர்கள் மேலோங்கிச் செல்வார்கள். தம்மைத் தாமே மதித்துப் பெருமையுடன் வாழ்வார்கள். எல்லா வகையான செல்வமும் தங்களுக்குத்தாமே வந்துசேரும்.

ஆதலால் ஊக்கம் என்று கூறப்படுகின்ற உள்ள முடையவர்கள் பொருள், கொடையளித்தல், மதிப்புடன் வாழ்தல் முதலிய சிறப்புடன் இருப்பார்கள்.

ஊக்கமில்லாதவர்களுக்கு ஒன்றுமே சிறப்பாகக் கூறிக்கொள்ள இருக்காது. எந்த விதமான சிறப்பினை யும் அவர்கள் அடையமுடியாது. 'உள்ளம் இலாதவர் எய்தார்' என்று குறட்பா ஆரம்பமாகிறது.

'உள்ளம்' என்கின்ற ஊக்கமில்லாதவர்கள் அடைய முடியாது என்கின்ற குறிப்பு கூறப்பட்டது. மனிதப் பிறவிக்கு இருக்க வேண்டிய இயல்பான பண்பு களில் ஒன்று தம்மைத்தாமே மதித்தல் என்பதாகும். ஊக்கம் உள்ளவர்கள் இத்தகைய நன்மதிப்பினைப் பெற்றிருப்பார்கள்.

## செருக்கு எனப்படும் மதிப்பு

'தற்பெருமை' என்கிற குற்றச்சாட்டில் இக்கருத்து வராது. ஊக்கம் மனிதனுக்குக் கொடுக்கிற பரிசு தன்னைத்தானே மதித்தல் என்பதாகும். இதனைச் 'செருக்கு' என்று திருவள்ளுவர் கூறுவர்.

'செருக்கு' என்கிற சொல் மதிப்பு என்ற பொருளில் கூறப்படுவதாகும். எனவேதான் ஊக்கமுள்ளவர்கள் தம்மைத்தாமே மதிக்கின்ற செருக்கினைப் பெறுகின்ற உரிமையுடையவர்களாவர்கள். அந்தச் செருக்கும் தக்க காரணங்களினால் உண்டாவதாகும். ஊக்கமுள்ளவன் நிறையப் பொருளீட்டுவான்; மற்றவர்களுக்கு 'ஈகை' 'கொடை' என்கிற நற்பணிகளையும் செய்து பெருமை யடைவான்.

ஊக்கத்தினால் வெற்றி கிடைப்பது எளிதாகவும் முடியும். இத்தகைய செருக்கினைப் பெற்ற அவன்

தன்னைத்தானே மதிக்கும் செருக்கினைக் கொண்டிருத்தல் இயல்பேயன்றோ?

பிறர்க்குப் பயன்படுகின்ற அவன் தானும் இன்பமடைகின்றான், மற்றவர்களையும் இன்பமடையச் செய்கிறான். வள்ளல் தன்மை என்று கூறுவது உலகியல் கருத்தாகும். இதனையே வண்மை என்று சொல்வது உண்டு.

## வள்ளல் தன்மை

'வண்மை' என்கின்ற சிறப்பு ஊக்கமுடையவர்களுக்கே இருப்பதாகும்; 'உள்ளம்' என்கின்ற இந்த ஊக்கமில்லாதவர்கள் 'வள்ளல் தன்மை' என்கின்ற செருக்கினை, நன்மதிப்பினை அடைய முடியாது; எனவே 'உள்ளமில்லாதவர் எய்தார்' என்று தொடங்கப் பெற்ற குறட்பா 'உலகத்து வள்ளியம் என்னும் செருக்கு' என்று முடிகிறது.

உலகத்தில் 'வள்ளியம்' என்று கூறிக் கொள்ளக் கூடிய செருக்கினை உள்ளமில்லாதவர்கள் அடைய முடியாது; ஊக்கம் என்பது உள்ளம் என்கின்ற சொல்லினால் சிறப்பிக்கப்பட்டது. 'உள்ளமிலாதவர் எய்தார் உலகத்து—வள்ளியம் என்னுஞ் செருக்கு' என்ற குறட்பா பன்முறையும் சிந்திக்கத் தக்கதாகும்.

ஊக்கம் இல்லாமை என்பதும் உணர்ச்சியுள்ள மனிதத் தன்மைக்கு மிகவும் குறை உண்டாக்குவதாகும். ஊக்கமுள்ளவர்கள் முயற்சியுடையவர்களாவார்கள், பொருளீட்டுவார்கள், சேர்த்துவைப்பார்கள், கொடையளிப்பார்கள், அதனால் 'வண்மை' என்கின்ற செருக்கினையும் நன்முறையில் கொள்ளுவார்கள். இவைகளெல்லாம் உள்ளமில்லாதவர்களால் பெறவேமுடியாது.

ஊக்கமுடையவர்கள் தளர்ச்சி என்பதைப் பெற மாட்டார்கள். அரிய காரியமென்று அயர்ந்துவிட மாட்டார்கள். ஏனெனில் ஊக்கம் என்பதற்கு அத்தகைய ஆற்றல் உண்டு.

ஊக்கம் சிறிதாக இருந்தாலும் பெரிய செயல்களை அஃது செய்து முடிக்கும். யானையையும் புலியையும் செயல் முறையில் வைத்துப் பார்க்கின்ற பொழுது ஊக்கத்தின் சிறப்பு நன்கு புலப்படுகின்றது.

## யானையும், புலியும்

வலிமை மிகுந்திருந்தாலும் ஊக்கம் இல்லையென்றால் பெரிய வலிமையும் பலனற்றதாகிவிடும். எனவேதான் ஊக்கம், ஊக்கமில்லாத பெரிய வலிமையினையும் வெல்லும் என்பதாயிற்று. யானையின் உருவம் எல்லா விலங்குகளையும் விடப் பெரிது. யானையின் உடம்பு மிகப் பெரிய தோற்றத்தைக் கொண்டது. காணுகின்ற பலரும் அஞ்சக்கூடிய பெரிய தோற்றத்தை அந்த யானை பெற்றுள்ளது.

பெரிய உடம்பால் வலிமையும் மிகுந்திருக்கிறது. அவையல்லாமல் யானை கூர்மையான கொம்புகளையும் பெற்றிருக்கிறது. இவ்வளவு பெருமைக்குரிய யானையானது ஊக்கமில்லாமல் இருக்கின்றது. ஆதலால் சிறிய உருவம் கொண்ட புலியானது தாக்குகின்றபொழுது யானை அஞ்சுகின்றது.

புலியின் உருவம் சிறிதேயாயினும் அதன் வலிமையும் யானையினை ஒப்பிடும்பொழுது, குறைந்ததேயா

யினும் ஊக்கம் மிகுந்திருக்கின்றது. சிறிய உடம்பில் பெரிய ஊக்கத்தினை அப்புலி பெற்றிருக்கின்றது.

ஆதலால்தான் யானையினையும் தாக்கக்கூடிய மன எழுச்சி அப்புலிக்கு ஏற்படுகின்றது. யானையினையும் தாக்குகின்றது. 'யானை வெரூஉம்' என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

யானையானது அஞ்சி ஓடும் என்பதே இதற்குப் பொருளாகும். அந்த யானை எப்பொழுது அஞ்சி ஓடும் என்பதற்கு விடை கூறவந்த ஆசிரியர் 'புலி தாக்குறின்' என்று குறட்பாவை முடிக்கின்றார். புலி தாக்குவதற்குக் காரணம் அதனுடைய ஊக்கமேயாகும். ஊக்கமுடையவர்கள் எதிர்த்து வருகின்ற பகையினைக் கண்டு மலைக்கமாட்டார்கள் என்பது குறிப்பு.

## பெரிய உடம்பு

யானையின் உடம்பு பரியது ஆகும். அதாவது பெரிய உடம்பை உடையது. அத்துடன் கூர்மையான கோடுகளை உடையதாகும்; அதாவது கூர்மையான கொம்புகளைப் பெற்றிருக்கின்றது. 'பரியது கூர்ங் கோட்டது' என்று தொடங்கப் பெறுகின்ற குறட்பா 'யானை வெரூஉம் புலிதாக்குறின்' என்று முடிகின்றது.

யானைக்குப் பெருமை அதன் உடம்பும் கூரிய கொம்புகளும் மிகுந்த வலிமையுமாகும். புலியின் பெருமை அதற்குள்ள மனஎழுச்சியான ஊக்கமேயாகும். ஊக்கமில்லாதவர்கள் வேறு பல சிறப்புகளைப் பெற்றிருந்தாலும் அவைகள் பயனில்லாமலே முடியும்.

தோற்றம் அல்லது உருவம் என்பது மட்டும் பயன் தராது. மக்கள் உள்ளம் புலியின் உள்ளத்தைப்போல் ஊக்கம் நிறைந்திருக்க வேண்டும்.

விரைந்து செல்லுவதும் பாய்ந்து செல்லுவதும் புலியின் குணங்கள் என்பதை உலகம் அறியும். இவைகளுக்கு அடிப்படை அச்சம் என்பதே இல்லாததுதான்.

அச்சம் என்கின்ற தீய குணம் ஊக்கம் என்பதனை மங்கிப் போகச் செய்யும். என்றும் நிலைத்து நின்று உணர்ச்சியினையும் எழுச்சியினையும் தரக் கூடிய உறுதியான கருவி ஊக்கமேயாகும். பெரிய உருவத்தினையும் தோற்றத்தினையும் கண்டு மயங்குதல் அறிவுடைமையாகாது.

## புலித்தோல் போர்த்தி மேய்ந்த பசு

பெரிய உருவம் அல்லது தோற்றம் என்பதனைக் கொண்டு உலகத்தில் ஏமாற்றித் திரிபவர்கள் பலருண்டு. பார்ப்பதற்கு வேடம் தாங்கிப் பெரும் தோற்றத்தினைக் காட்டிக் கொண்டு வாழ்கின்ற மக்கள் பலர் இருக்கிறார்கள். அவர்கள் வஞ்சனையும் கள்ளத்தனமும் கொண்டவர்களாவார்கள்.

உள்ளம் என்று கூறக்கூடிய மனத்தினிடம் தீய பண்புகளை வைத்துக்கொண்டு மக்களை ஏய்ப்பதற்கு வேடம் தாங்கித் திரிபவர்களையே குறிப்பிட்டுப் பார்க்கவேண்டும். அவர்களை நம்புதல் கூடாது.

இவ்வாறு பொய் வேடம் தாங்கி, மக்களை மயக்கி வஞ்சித்து வாழ்பவர்கள், தவசிகள் போல அல்லது துறவிகள் போலத் திரிகின்றார்கள். மனம் தூய்மையாகவும் தவத்தன்மையும் பெற்றிருக்காதவர்கள் வேடத்தை மட்டும் தாங்கிக்கொண்டு காட்சியளிப்பது அவர்களுக்கே தீங்கினைஉண்டாக்குவதாகும். ஒழுக்கங் கெட்ட முறையில் இப்படிப்பட்ட வேடதாரிகளின் நடைமுறைகள் இருக்கும்.

இப்படிப்பட்டவர்களுக்கு மன வலிமை இருககாது, உள்ளத் தூய்மை இருக்காது. அவர்கள் காட்டிக் கொள்ளுகின்ற தோற்றம் அவர்களைக் காப்பாற்றும் என்று எண்ணுகின்றார்கள். அதனால் தீய செயல் களைச் செய்வதற்குத் துணிகின்றார்கள்.

## அச்சம் போகாது

ஒரு பசுவானது புல் தின்னுவதற்குச் செல்கின்றது. மனம் போன வழியில் அது மேயச் செல்கினறது. பிறருக்குரிய இடத்தில் புல்லை மேய்வதற்குச் செல் கின்ற அப்பசு இயல்பாகவே அச்சம் கொணடிருக் கிறதாம்! அதற்காக அது புலியின் தோலைப் போர்த்தி கொண்டதாம்! பார்ப்பவர்கள் புலியென்று நினைத்துக் அஞ்சி ஓடிவிடுவார்கள் என்று அப்பசு நினைக்குமே யானால் அது எனன பேதைமை?

பசித்தாலும் புலி புல்லைத் தின்னாது என்பது அப்பசுவுக்குத் தெரியவில்லை. ஏனென்றால் அது செய்கின்ற வேலை வஞ்சனையும் கள்ளத்தனமும் நிறைந்ததாகும். புலியின் தோலைப் போர்த்திக்கொண்ட காரணத்தினாலே அப்பசுவுக்குப் புலியின் வன்மை வந்துவிடுதல் கைகூடாதல்லவா?

இவ்வாறே வஞ்சகர்கள் பலர் தீய ஒழுக்கத்தில் நடந்து கொள்வதற்குத் தவவேடம் தாங்கித் திரிகின் றனர். தவசிகள் மனோவலிமை பெற்றவர்கள், மனத் தூய்மை கொண்டவர்கள், ஒழுக்கத்தில் மேம்பட்ட வர்கள், ஒழுக்கமே உருவானவர்கள்.

அப்படியிருக்க இவர்கள் போன்ற வல்லுருவத் தினை வஞ்சகர்களும் தாங்கிக் கொள்கிறார்கள். ‹வல்

உருவம்' என்பது தவ வலிமை கொண்ட உண்மைத் துறவிகள் பெற்றிருக்கும் தோற்றமாகும்.

புலித்தோலைப் போர்த்திக் கொள்ளுகின்ற பசுவினைப் போல வஞ்சனைச் செயலைச் செய்கின்ற ஒழுக்கங்கெட்ட கள்ளர்கள் தவசிகளின் வேடத்தினைத் தாங்கித் திரிகின்றனர்.

### தீய ஒழுக்கத்தினர்

அப்படித் தாங்கிக் கொண்டால் அவர்கள் செய்கின்ற தீய ஒழுக்கச் செயல்கள் பிறரால் கண்டு கொள்ள முடியாமல் போகும் என்று எண்ணுகின்றனர். 'பெற்றம்' என்கின்ற சொல் பசு என்பதைக் குறிக்கும்.

'பெற்றம் புலியின் தோல் போர்த்து மேய்ந்தற்று' என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். புலியினுடைய வலிமை, மனநிலை பசுவிற்கு எள்ளளவும் கிடையாது. அப்படியிருக்க புலியின் தோலை அப்பசு போர்த்திக் கொண்டது மடமையினும் மடமையாகும்.

அத்துடன் பிற இடத்தில் போய் மேய்வது அடாத செயலாகும், பொருத்தமற்றதாகும். இத்துடன், உலகப் பழக்கத்திற்கே மாறுபட்டு புலி புல்லைத் தின்னும் என்பதாகக் காட்டுகின்ற அப்பசுவின் செயல் மேலும் வியப்பிற்குரியதாகும்.

கள்ளத்தனம் நிறைந்த மனம் உடையவர்கள் மனம் போன போக்கிலெல்லாம் நடந்து தீய ஒழுக்கத்தினைச் செய்வார்கள் என்பதற்கு இது ஓர் எடுத்துக் காட்டு. மனத்தில், உண்மையான தவசிகள் தாங்கும் வலிமையில்லாதவனை 'வலியில் நிலைமையான்' என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். ஆனால் அவனோ உண்மைத் துறவிகள்போலத் தோற்றமளிக்கிறான்.

அதாவது, வல்லுருவம் தாங்கிக்கொண்டு திரி கின்றான். இவனைத்தான் இவ்வாறு புல்லைத் தின்னும்புலித்தோல் போர்த்தபசுஎன்று கூறுகின்றார். 'வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்-புலியின் தோல் போர்த்து மேய்ந்தற்று' என்று சொல்லப்படு கின்ற குறட்பா அனைத்தையும் வெளிப்படுத்திற்று.

மயங்குதல் கூடாது

உலக மக்கள் விழிப்புடனே வாழ்தல் வேண்டும் என்பது சிறந்ததொரு உண்மையாகும். மக்களிடையே தீய ஒழுக்கத்தினர் மலிந்திருப்பர் என்பது புலனா யிற்று. தோற்றத்தினைக் கண்டு மயங்குதல் கூடாது என்கின்ற உண்மை புலப்படுத்தப்பட்டது.

உலக மக்கள் தவ வேடத்தினைக் கண்ட மாத்திரத் திலேயே மயங்குதல் இயல்பு என்று கூறுவது:மிகை யாகாது. பிற வேடங்களைக் கண்டு மயங்கிவிடாத மக்கள் தவ வேடங்களைக் கண்டு மயங்குவார்கள் என்பது இயல்பேயாகும். ஆதலால்தான் குறிப்பாகக் கூறுகையில் தவ வேடத்தினை ஆசிரியர் எடுத்துக் கொண்டார்.

உலகியல் நடைமுறையில் இது பெரிதும் சிந்திக்க வேண்டியதாகும். தவ வேடம் தாங்கியவர்களிடத்தில் பலரும் நெருங்கிப் பழகுவதற்கு விரும்புவார்கள்என்பது நடைமுறைப் பழக்கமாகும்.

ஆண், பெண் இருபாலாரும் தவ வேடம் தாங்கிய வர்களிடம் தாமே செல்லுவார்கள் என்பதும் இயல் பேயாகும். எனவேதான் கொடுஞ்செயல் புரியும் வேட தாரிகள் மக்கள் கூட்டத்திலிருந்து ஒதுக்கப்பட வேண்டியவர்கள் என்பது வற்புறுத்தப்பட்டது.

## மன எழுச்சியே திடமான அறிவு

தோற்றம் என்கிற உருவமும் மனப்பண்பும் சம்பந்தமில்லாமல் இருக்கும்என்பதும் அறியப்பட்டது. மனத்தினிடம் கொண்டிருக்கின்ற மன எழுச்சிதான் ஒருவனுக்குத் திடமான அறிவு என்று கூறப்படும். நாள்தோறும் மன எழுச்சி மிகுந்து வருதல் வேண்டும்.

ஒருவனுக்குத் திண்மையான அறிவுஇருக்கின்றது என்பதற்கு அடையாளம் அவன் மனத்தில் தோன்று கின்ற ஊக்கமேயாகும். அதாவது மனஎழுச்சியே ஆகும். மனம் என்பது மன எழுச்சிக்கு இருப்பிட மாகும். எழுச்சி என்பது வளர்ந்து வருவதாகும்.

எழுச்சியுள்ள மனம்படைத்தவர்கள் சிறந்துவாழ்ந்து வருகிறார்கள் என்பதாகும். வாழ்க்கையினை வளர்த்து வருவது மனத்தில் தோன்றி வளர்ச்சி பெறுகின்ற எழுச்சி மிகுந்து வருதலேயாகும். மிகுந்து வருகின்ற மன எழுச்சியைத்தான் ஊக்கம் என்று கூறுகின்றோம்.

## உரம் என்பதே அறிவு

உரம் என்று சொல்லப்படுவது திண்மையான அறிவேயாகும். உரம் பெற்றவர்கள் என்று குறிப்பிடு வது எல்லாம் என்றென்றும் குறையாத ஊக்கமுள்ள மக்களைத்தான் என்பது அறிதல் வேண்டும். இந்த ஊக்கத்தினையே திண்மையான அறிவு என்று கூறுவர்.

ஆறறிவு படைத்த மக்கள் என்பதற்கு குறிப்பான இலக்கணம்மன எழுச்சியேயாகும். மனஎழுச்சி என்பது அளவிட்டு நின்றுவிடுவது அல்ல, அது மிகுந்தே வளர்ந்து வரும். ஆதலால்தான் திண்ணிய அறிவு படைத்தவர்கள் என்பவர்களை விளக்கிக் கூற வந்த

ஆசிரியர் ஊக்கம் மிகுந்திருப்பவர்களையே அவ்வாறு குறிப்பிட்டார்.

வெறுக்கை என்கிற சொல் எழுச்சியின் மிகுதியைக் குறிக்கும். அந்த மனஎழுச்சி உரம்என்பதைக் குறிக்கும். உரம் என்பது திண்ணிய அறிவு என்பதைக் காட்டும். ஆதலால்தான் ஒரு குறட்பா 'உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை' என்று தொடங்குகின்றது.

'உள்ள வெறுக்கை' என்பது மன எழுச்சி மிகுந்திருக்கும் தன்மையினை எடுத்துக் காட்டுகிறது. மனிதப் பிறவியில் நல்லறிவும் செயலில் முயற்சியும் இயல்பாகவே இருத்தல் வேண்டும். நல்ல முயற்சியும் செயலாக்கும் தன்மையும் இல்லையென்றால் சிறப்பான மக்கட்பிறவி குற்றமுடையதாகும்.

குற்றமுடையது என்று கூறும்பொழுது தன்மையில் அதாவது வாழ்வில் மனிதர்களாகக் கருதப்படக் கூடாதவர்கள் என்பதே பொருளாயிற்று. இத்தகைய ஆழ்ந்த உண்மையினை வற்புறுத்துவதற்குக் காரணம் மக்கட் பிறவிக்குக் கிடைத்திருக்கின்ற அருமையான மனப் பண்பேயாகும்.

## சிந்தனைக்கும் எழுச்சிக்கும் மனமே பிறப்பிடம்

மனம் என்பது உள்ளம் என்றும் குறிக்கப்படும். உள்ளம் சிந்தனைக்குரிய இடம், அரிய சிந்தனைகளைத் தரும், புத்தம் புதிய நிலைமைகளை உண்டாக்கும் ஆற்றல் படைத்தது உள்ளமேயாகும்.

ஆதலால்தான் மன எழுச்சி என்ற பொருள் கொண்ட வெறுக்கை என்கின்ற சொல்லினை 'உள்ள வெறுக்கை' என்று இணைத்துக் கூறினார். அவ்வாறு உள்ள வெறுக்கையினைக் கொண்ட மக்களை மிகவும்

திண்மையான அறிவு படைத்தவர்களென்றும் குறிப்பிட்டார்.

திண்மையான அறிவு இருக்கிறது என்பதற்கு அடையாளம் உள்ளத்தில் மன எழுச்சி எப்போதும் தோன்றிக்கொண்டே இருத்தல் வேண்டும் என்பதாகும். உணர்ச்சி எழுச்சியாக வளர்ந்து ஊக்கமும் பெற்று வாழ்க்கையில் வெற்றியினைத் தேடித் தரும்.

## மரம் என்று குறிப்பிட்டார்

இவ்வாறான மன எழுச்சியினை வளர்க்காத மக்கள் அறிவில்லாதவர்களாவார்கள். அறிவில்லாதவர்கள் என்று குறிப்பிடுகிறபொழுது மக்கள் பிறப்பில் வைத்து எண்ணப்படவேண்டாதவர்களாவார்கள். அவர்களை இழிவாகக் கூற வந்த ஆசிரியர் 'மரம்' என்றே கூறிவிட்டார்.

ஓரறிவு உடையது மரமாகும். மரம் பிறந்த இடத்திலேயே வளர்ந்து மறையக் கூடியதாகும். மரத்திற்கு மனம் இல்லை, எழுச்சியில்லை, ஊக்கம் இல்லை, ஓரறிவுடைய இனமாகும்.

அத்தகைய இனத்திற்கு உரமில்லாத, ஊக்கமில்லாத மன எழுச்சியில்லாத மக்களையும் ஆசிரியர் ஒப்பிட்டுக் காட்டினார். 'உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை' என்று தொடங்கப்பெற்ற குறட்பாவை 'அஃதிலார் மரம்—மக்களாதலே வேறு' என்று முடித்தார் ஆசிரியர்.

'அஃது இல்லார்' என்று கூறியதால் 'மன எழுச்சியில்லாத மக்களாகும்' என்பது விளக்கப்பட்டது. மரம் என்று கூறி நிறுத்தப்பட்டுவிடவில்லை. மரங்களிலும் சேர்க்கப்படாமல் தனிப்பட்டதொரு மரவகையினைச்

சேர்ந்தவர்கள் என்றும் கூறப்பட்டது. ஊக்கம் என்கின்ற எழுச்சியில்லாத மக்கள் தனிப்பட்டதொரு வகையினைச் சேர்ந்த மரங்கள் என்பதாம்.

## தனிப்பட்ட மரங்கள் வகையினர்

பொதுப்படையாக மரங்கள் என்று கூறப்படுகின்ற எல்லா மரங்களும் ஒவ்வொரு வகையில் பயன் தருகின்றன. பழங்கள் தருதல், கட்டிடங்களுக்குப் பயன்படுதல், மரக்கலங்கள் செய்தல், மருந்தாகுதல், இன்னும் இவை போன்ற சிறப்பான பலன்களை மரங்கள் தருகின்றன. இவ்வுண்மை உலகத்தில் கண்கூடாகும்.

அப்படியிருக்க அவ்விதமான பயனையும் உள்ளத்தில் மன எழுச்சியில்லாத மக்கள் கொடுக்க மாட்டார்கள். ஆதலால் இத்தகைய மக்களைப் பயன் தருகின்றமரங்களோடு ஒப்பிடுவதற்குஆசிரியர் விரும்பவில்லை. ஆதலால் இவர்கள் வேறு வகையான மரங்களுக்குச் சமம் என்று கூறி 'வேறு' என்ற சொல்லையும் அமைத்தார்.

## புதுவகையான மரங்களைப் போன்றவர்கள்

வடிவத்தில் இவர்கள் மனிதர்களாக இருக்கின்றார்கள். ஆனால் மனிதத் தன்மையில் இவர்கள் மக்களாக வாழவில்லை. ஆதலால்தான் இவர்கள் மரங்களாவார்கள் என்று கூறி, புதிய வகையான மரங்கள் என்று வேற்றுமை காட்டிப் பிரித்துக் கூறினார்.

குறட்பா முழுமையினையும் உற்று நோக்கிச் சிந்திக்கின்றபொழுது 'மனஎழுச்சி' இல்லாத மக்களின்

இழிதன்மை தெளிவாகின்றது. 'உரம் ஒருவர்க்குள்ள வெறுக்கை அஃதில்லார் மரம் மக்களாதலே வேறு' என்று சொல்லப்பட்டுள்ள குறட்பா 'உரம்' என்று சொல்லப்படுகின்ற திண்மையான அறிவு உள்ளத்தில் தோன்றக் கூடிய ஊக்கமேயாகும் என்று விளக்கிக் காட்டிற்று.

இக்குறட்பாவிலுள்ள 'வெறுக்கை' மிகவும் சிந்திக்க வேண்டிய ஒன்றாகும். இந்த 'உள்ள வெறுக்கை' நல்லறிவு பெறாதவர்களிடத்தில் இருக்காது. அப்படி இல்லையென்றால் அவர்கள் மக்கள் ஆகமாட்டார்கள்.

## வடிவமே அடையாளமாகாது

இருந்தபடியே இருக்கின்ற தன்மை மக்கள் இனத்திற்கு ஒவ்வாததாகும். ஊக்கம் எவ்வளவு மேம்பாட்டினை, சிறப்பினை, உயர்வினைத் தரக்கூடியது என்கின்ற கருத்தினைச் சுருக்கமாகக் கூறினார்.

மரத்தினைவிட இழிவாகக் கூறப்பட்ட மக்கள் எதற்குமே பயனில்லாதவர்களாவார்கள். வடிவம் ஒன்றினைத்தான் மக்கள் என்பதற்கு அடையாளமாக அவர்கள் வைத்திருக்கிறார்கள். வடிவம் என்கிற தோற்றம் மக்கட் பிறவி என்பதற்குத் துணையாக இருந்துவிடாது.

ஆதலால்தான் உள்ளத்தினைச் சுட்டிக் காட்டி அங்கு வளர்கின்ற ஊக்கத்தினை அறிய வைத்து ஆறறிவு படைத்த மக்கட் பிறவியின் நுட்பமான பெருமையினை அறிவித்தார். ஆதலால் பிறப்பிலே மக்களாகப் பிறந்தவர்கள் எல்லோரும் தங்களை மக்கள் என்று கூறிக் கொள்ள உரிமை கிடையாது. அப்படி

மக்கள் என்று கூறிக் கொள்ள வேண்டுமென்றால் அதற்கேற்ப மனப் பண்பாட்டினை அவர்கள் பெற்றிருத்தல் வேண்டும்.

## அளவுகோல் என்பதும் அதுவேயாகும்

மக்களுக்கே உரிய மன உணர்ச்சி என்பது ஒன்றுண்டு. அந்த மன உணர்ச்சியே மக்கள் என்பதற்கு அளந்து காட்டும் அளவுகோலாகும். அந்த அளவுகோலினை வைத்துத்தான் மக்களை அளந்தறிதல் வேண்டும். மக்களுக்கென்றே தனிப்பட்ட அறிவும், உணர்ச்சியும், பண்பும், இவை போன்ற பிறவும் இருப்பதாகும்.

கூர்மையான புத்திசாலிகள் என்று உலக வழக்கில் நாம் சொல்வது உண்டு. பலர் புத்தி கூர்மையுள்ளவர்களாகவும் இருப்பதைக் காண்கிறோம். புத்தி கூர்மையுள்ளவர்கள் மற்றவர்களை வென்று விடுவார்கள். புத்தி கூர்மை அவ்வித ஆற்றலினைத் தரும். கூர்மை என்ற சொல் மற்றவர்களை அழிக்கும் என்பதைக் குறிக்கின்றது; ஆதலால்தான் புத்திக் கூர்மையுள்ளவர்கள் பலரும் வியக்குமாறு மற்றவர்களைத் தோற்கடித்து விடுவார்கள்.

ஆனால், அத்தகைய மக்கள் மனப் பண்பு இல்லாதவர்களாகவும் இருக்கலாம். மனப்பண்பு என்பது மக்களுக்கேயுரிய நற்குணமாகும். நற்குணங்களெல்லாம் ஒன்று சேர்ந்து காணப்படுகின்ற நிலையினைத்தான் பண்பு என்று கூறுகின்றோம். அத்தகைய நிலையினை மக்கட் பிறவிதான் அடைய முடியும்.

பண்பில்லாதவர்கள் கூர்மையான புத்தி பெற்றிருந்தாலும் மற்றவர்களுக்குப் பயன்படமாட்டார்கள். உலகத்திற்கே பயனில்லாதவர்களாகிவிடுவார்கள். பண்பில்லாத உள்ளம் படைத்த ஒருவன் கூர்மையான புத்தியைப் பெற்றிருந்தால் அதனால் அழிவுதான் ஏற்படும். கூர்மையான அறிவினைச் சிறப்பித்துக் கூறவந்த ஆசிரியர் வள்ளுவர் 'அரம்' என்பதனை உதாரணமாகக் காட்டினார். அரம் மிகவும் கூர்மையான வேலையினைச் செய்யும். திடமான பொருள்களையும் 'அரம்' அழித்துவிடும், தூளாகச் செய்யும். சிறுகச் சிறுக மிகக் கடினமான பொருள்களையும் அரம் என்கின்ற கருவி தேய்த்து அழிக்கும்.

### அரமும் அழிவும்

தெளிவாகக் குறிப்பிட வேண்டுமென்றால் அரம் தன்னைச் சார்ந்த பொருள்களை அழிக்கும் என்றே கூறலாம். அரம் என்றாலே அந்தச் செயல் புரியும் கருவியினைக் குறிக்கும். ஆதலினால்தான் மக்களுக்குரிய பண்பில்லாத மக்கள்பெற்றிருக்கும் கூர்மையான புத்தி அரத்திற்குச் சமம் என்று கூறப்பட்டது.

எல்லா வகையான பொருள்களையும் அரம் தேய்த்து அழிக்கும். பண்பு இல்லாதவர்கள் மக்கள் என்ற பெருமைக்குரியவர்கள் அல்லர். அத்தகைய மக்களிடத்தில் புத்தி கூர்மை இருந்துவிட்டால் அவர்களும் அரம் செய்கின்ற வேலையினைத்தான் செய்வார்கள்.

மக்கள் செய்ய வேண்டிய செயல்களைச் செய்ய மாட்டார்கள். காரணம், அவர்களிடம் பண்பு இல்லாமையேயாகும். இக்கருத்தினை 'அரம் போலும் கூர்மையர்' என்று தொடங்கப் பெறுகின்ற குறட்பா ஒன்று கூறுகின்றது.

## புத்திகூர்மை மட்டும் போதாது

புத்திகூர்மை பெற்றிருந்தால் மட்டும் மக்கள் என்று கூறிக் கொள்ளும் பெருமை கிடைத்துவிடாது. மக்களுக்கே இருக்க வேண்டிய பண்பு இருந்து, அத்துடன் இணைந்தே புத்தி கூர்மை இருத்தல் வேண்டும்.

அவ்வாறு பண்பு இல்லாமல் புத்திகூர்மை மட்டும் உடையவர்களை 'மரம்' என்றே ஆசிரியர் குறிப்பிட்டார். சிறந்த பேரறிவு என்பது நல்ல பண்புகளைப் பெற்றிருத்தலே ஆகும்.

ஆதலால் சிறப்பான பண்பு இல்லாததால் ஆறறிவும் இல்லை என்பது கூறப்பட்டது. ஆதலால்தான் புத்தி கூர்மை இருந்தும் 'மரம்' என்பதற்கு சமமாக அவர்கள் கூறப்பட்டார்கள். 'மரம்' என்பது 'ஓரறிவு' பெற்ற உயிரைக் குறிக்கும், 'ஓரறிவு' முதல் ஐந்தறிவு வரையில் பெற்றிருக்கின்ற பிறவிகளெல்லாம் தாழ்ந்த பிறவிகளென்றே குறிக்கப்படுகின்றன.

## உள்ளமிலாத பிறவிகள்

ஏனென்றால், அவைகள் தாமாகவே செயல்களைச் செய்யாதவைகளாகும். அவைகளுக்கு உள்ளம் கிடையாது; நற்பண்பு இல்லை. அந்தப் பிறவிகளிலும் கடைசிப் பிறவியாக மரம் கூறப்பட்டது. அந்த நிலைமைக்குப் பண்பு இல்லாத மக்களை ஆசிரியர் கொண்டு போய் நிறுத்தினார்.

'அரம் போலும் கூர்மையரேனும்' என்று தொடங்கப் பெற்ற குறட்பா 'மரம் போலும் மக்கட் பண்பில்லாதவர்' என்று முடிந்தது. இக்குறட்பாவில் மரம் போன்

றவர்கள் என்று குறிப்பிட வேண்டியே 'மரம்போல்வர்' என்று அழைத்தார்.

பண்பு இல்லாத மக்களை மரமேயாவார்கள் என்று கூறியது சிந்திக்கத் தக்கதாகும். அழிவைத் தருவதே யானாலும் புத்தி கூர்மை என்பது இருப்பதால் இவர் களை 'போல்வர்' என்ற சொல்லினால் குறிப்பிட்டார் போலும்!

மக்கட் பிறவி எடுத்தவர்கள் மற்றவர்களுக்குப் பயன்பட வேண்டும் என்ற சிறப்பு மிகவும் சிறப்பாக வற்புறுத்தப்பட்டது. மக்கள் என்பது நன்மக்கள் என் பதேயாகும். அத்தகைய பெறுதற்கரிய பிறவியில் பெற வேண்டிய பண்புகள் பற்பலவாக இருக்கின்றன. அப் பண்புகளுக்கெல்லாம் இந்த மக்கட் பிறவி உரிமை யுடையதும் ஆகும்.

ஆக்கத்தையே தரவேண்டிய மானிடப் பிறவி பண்பு இல்லாததால் அழிவினைத் தரக்கூடிய பிறவியாக இருத்தல் மிகவும் கொடுமையானதாகும். ஆதலால்தான் இழிவுபடுத்தியே கூறி 'மரம் போல்வர்' என்று சொன்னார்.

## நற்பணியாற்ற நற்பண்பே வேண்டும்

மன உணர்ச்சி பெற்றிருத்தல் வேண்டும் என்று கூறுவதெல்லாம் நற்பணிகளைச் செய்தல் வேண்டும் என்பதேயாகும். இந்த உலகம் நின்று நிலைத்து வாழ்ந்து வருவதற்குக் காரணம் நல்ல மனம் படைத்த மக்களால்தான் என்பது உலகம் கண்ட சிறந்த உண்மையுமாம். பண்பு இல்லையென்றால் மக்கள்

கூட்டம் மக்களாக வாழ முடியாது. மாக்களாகத்தான் இருக்க முடியும்.

அடிப்படையில் பண்பினை அமைத்தேதான் கல்வி, கேள்வி, அறிவு, ஞானம் என்பவைகளெல்லாம் வளர்ந்து வரவேண்டியிருக்கின்றன. அந்த அடிப்படை இல்லையென்றால் மக்கள் கூட்டம் வாழ்ந்து வருதல் இயலாது. இக்கருத்தினை நன்றாக உள்ளத்தில் அமைக்க வேண்டித்தான் புத்தி கூர்மையினையும் புறக்கணித்தார். அந்தக் கூர்மையினை அழிக்கக் கூடிய 'அரம்' என்றார்.

அழிவைத் தரக்கூடிய பாதையில் பண்பில்லாத மக்கள் செல்லுவார்கள் என்பதும் குறிப்பால் உணர்த்தப்பட்டது. எனவேதான் புத்திக் கூர்மை மட்டும் பெற்றிருப்பதால் பாராட்டுக்குரியவராகி விட மாட்டார்கள். பயன்படுகின்ற மக்களே உலகில் வாழ்தல் வேண்டும்.

## வாழாத மக்கள்

அப்பொழுதுதான் உலகமும் வளர்ந்து செழிக்கும். பயனில்லாத மக்கள் வாழ்வதாக நினைத்துக் கொண்டிருந்தாலும்வாழாதவர்களென்றே கருதப்படுவர். பயன் என்பது பண்பினால் வளர்வது ஆகும். ஆதலால்தான் முதன்மையாகக் கூறப்பட்டது. சொல்லும் செயலும் இணைந்திருப்பதே அறிவுடைய மக்களுக்கு அறிகுறியாகும். அறிவில்லாத மக்கள் தமக்கும் பிறருக்கும் பயன்படமாட்டார்கள். பயன்படாதபடியினால் மக்கள் என்ற பெருமைக்கும் தகுதியில்லாதவர்களாகி விடுகிறார்கள்.

தகுதியில்லாதவர்களாக இருந்தாலும் மக்கள் கூட்டத்திலிருந்துதான் வருகின்றார்கள். அப்படியிருப்பதனாலேயே பயனில்லாத மக்களை மக்கள் என்று கூறுதல் பொருந்துமா? என்று வினாவுதல் பொருத்தமானதாகும். அவர்களை மக்கள் என்று கூறுதல் கூடாது. பயனில்லாத மக்கள் என்று குறிப்பிடும் போது எச்செயலையும் அவர்கள் பயனில்லாத முறையிலேயே காட்டிக் கொள்வார்கள் என்பது பொருளாகும்.

எண்ணம், சொல், செயல் என்று மனிதத் தன்மையினைக் குறிப்பிடுதல் இயல்பாகும். இவைகள் அனைத்தும ஒருவரை உணர்த்துவது இயலபாகும். இவைகளில் முதன்மையாக சொற்களேயாகும் என்று குறிப்பிடலாம். சொல்லுகின்ற சொற்கள் ஒரு மனிதனை அளந்து காட்டும். அவன் எப்படிப் பட்டவன் என்பதை எடுத்துரைக்கும். உள்ளத்தின் தன்மையினை எளிதில் புரிய வைப்பவை சொற்களே யாகும்.

பேசுகின்ற சொற்களைப் பல வகைகளில் கணக்கிட்டுக் கூறலாம். அவைகளில் ஒரு தன்மையினைக் குறிப்பிட்டுப் பார்க்கும் பொழுது இரண்டு வகைகளில் குறித்துக் காட்டலாம். அவ்வாறு குறிப்பிட்டுப் பயனுள்ள சொற்களையே பேசுகின்ற மக்கள், பயனிலலாத சொற்களையே பேசுகின்ற மக்கள் என்று இரண்டு பாகுபாடுகள் அமைந்திருக்கின்றன.

## நெல்லில் கிடக்கும் பதர்களேயாவார்

அறிவுடைய மக்கள் பயன் தருகின்ற சொற்களையே சொல்வார்கள். அறிவினை இழந்த மக்கள்

பயனில்லாத சொற்களையே பேசுவார்கள். அத்தகைய பயனிலாத சொற்களையே அடிக்கடி பேசுவார்கள்; அப்படிப் பேசுவதில் மிகுந்த விருப்பத்தையும் காட்டு வார்கள். பயனில்லாத சொற்களைப் பேசுவதில் மகிழ்ச் சியும் கொள்வார்கள். இவர்களைப்பற்றி மிகவும் விளக்கிப் பேசலாம்.

பயனிலாத சொற்களைப் பேசுகின்றவர்கள் அறி யாமையில் இருந்து வாழும் அறிவிலிகளே யாவார்கள். ஆதலால்தான் அவர்களை ஆசிரியர் வள்ளுவனார் 'மக்கள்' என்று பெயரிட்டு அழைக்காதீர்கள் என்று கூறுகின்றார். பிறப்பிலேயும் மக்கள், வடிவத்திலேயும் மக்கள்; ஆனால் தன்மையிலே மக்களாக இல்லை; மக்களுக்கு இருக்க வேண்டிய அறிவு அவர்களிடம் இல்லை.

நெல் முதலிய தானிய வகைகள் மக்களுக்கு எவ் வளவு பயன்படுகின்றன என்பதை விளக்கிக் கூறத் தேவையில்லை. அப்படிப்பட்ட தானியங்கள், பதராகப் போய்விட்டால் யாருக்குமே பயனில்லை.

## உள்ளீடு இல்லை

நிலத்தில் ஏராளமாக விளைந்திருக்கும் தானியங்கள் உள்ளீடு என்கின்ற ஒன்றினைப் பெற் றிராவிட்டால், அவைகளைப் 'பதர்' என்று கூறு கின்றோம். அது போலவே மக்கட் பிறவியில் மக்களுக்கு இருக்கவேண்டிய உள்ளீடு அறிவு என்பதாகும்.

நெல்லினை எடுத்துக் கொண்டாலும் 'உள்ளீடு' என்பது அரிசியாகும். மேற்புறம் காணப்படுவது உமி என்று கூறப்படுகின்றது. அது பயனில்லாதது.

பயனில்லாத அதனை நீக்கிவிட்டு உள்ளீடு என்கின்ற அரிசியினைக் கொள்கின்றோம். உள்ளீடு என்கின்ற அரிசி இல்லையென்றால் உமியினைப் பதர் என்று கூறி ஒதுக்கி விடுகின்றோம்.

நிலத்தில் விளைந்திருக்கின்ற தானியத்தில் பதர்கள் மிகுந்துவிட்டால் தீங்காகும்; பயனில்லாதது ஆகும். நாட்டிற்குத் தீமையுமுண்டாக்கும். மக்கட் பிறவியில் ஒருவனுக்கு இருக்கவேண்டிய அறிவு, உள்ளீடு போன்ற அரிசியாகும். அந்த உள்ளீடு ஒருவனிடத்தில் இல்லையென்றால் அவன் பதருக்குச் சமமாவான். அவனைப் பதர் என்றே கூறவேண்டும்.

பதர் என்று கூறப்படுகின்ற வகையில் வரக் கூடிய மக்கள் பயனில்லாதவர்கள். ஆதலால்தான் மக்களுக்குள்ளே அவர்களைப் பதர் என்றே கூற வேண்டும் என்பதே ஆசிரியரின் கருத்தாகும். அவர்கள் பயனில்லாதவர்கள் என்று காட்டிக் கொள்கின்ற முறையில் எப்பொழுதும் பயனில்லாத சொற்களையே அடிக்கடி விரும்பிப் பேசுவார்கள்.

### மகனல்ல

இக்கருத்தினைக் கூற வந்த ஒரு குறட்பா 'பயனில் சொல் பாராட்டுவானை மகன் எனல்'—என்ற அடியினை முன் வைத்துத் தொடங்குகின்றது. இந்த அடியில் மகன் எனல் என்பது பன்முறையும் ஆழ்ந்து உணர்ந்துகொள்ள வேண்டியது ஆகும்.

மனிதன் என்று கூறாதே என்று சுட்டிக் காட்ட வேண்டியே 'மகன் எனல்' என்று கூறினார். மக்கட் பிறவியைச் சேர்ந்தவர்கள் அறிவுடன் இருந்தால், பயனுள்ளதையே பேசுவார்கள்.

பயனிலாத சொற்களைப் பேசுவதில் ஆர்வம் காட்டுவார்கள் என்பதைப் ‘பாராட்டுவான்’ என்ற சொல் எடுத்துக் காட்டிற்று. மக்கள் கூட்டத்தில் அத்தகையவர்களைச் சேர்த்து எண்ணக் கூடாது என்று கூறியதுடன் நிறுத்தாமல் அவர்களைப் பதர் என்று கூறும்படியும் சொன்னார். மக்களுக்குள்ளேயே பதர்கள் இருக்கின்றார்கள்.

## பயனுள்ள சொற்களைப் பேச இயலாது

பதர்கள் நிறைந்த கூட்டம் தீங்கினை விளைவிக்கும்; பயனில்லாமல் போகும். பதர் என்பதை பதடி என்ற சொல்லினால் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். ஒரு நாட்டு மக்களுக்குள்ளே பதர்கள் அதிகமாகிவிட்டால் அந்த நாடு முன்னேற்றத்தையே காணாது.

அறிவில்லாத மக்கள் நாட்டினை உயர்த்துதல் முடியாததாகும். ஆதலால்தான் பயனில் சொல் பாராட்டுவானை ‘மகன் எனல்’ என்று குறட்பாவைத் தொடங்கிய ஆசிரியர் ‘மக்கட்பதடி எனல்’ என்று முடிக்கின்றார்.

## விரும்பிப் பேசுவர்

பயனிலாத சொற்களையே விருப்புடன் பேசிக் கொண்டிருப்பவர்களை மக்களுக்குள்ளே கிடக்கும் பதர்கள் என்றார். அறிவில்லாதவர்களுக்குப் பயனுள்ள சொற்களைப் பேசுதல் வராது என்பதும் குறிப்பால் உணர்த்தப்பட்டது.

‘மகன் எனல்’ என்ற குறிப்பினைக் காட்டி பயனில்லாத வார்த்தைகளைப் பேசுகின்ற அவனை மகன்

என்று சொல்லாதே என்றுரைத்தார். வேறு என்ன பெயரினால் அழைக்கலாம் என்று சொல்ல வந்த ஆசிரியர் அப்படிப்பட்டவனை பதர் என்றே கூற வேண்டும் என்று அழைத்தார்.

'மகன் எனல்', 'மக்கட் பதடி எனல்' என்கிற குறளடிச் சொற்கள் அடுத்தடுத்து வைக்கப்பட்டுள்ள முறைமை பொருள் பொதிந்ததாகும்.

மக்களில் பலர் நடைமுறைப் பழக்கத்தில் பேசுதல் என்பதை எளிதாகக் கருதுகின்றனர். அர்த்தமில்லாத சொற்களைப் பேசுகின்ற மக்கள், அப்படிப் பேசுவது குற்றம் என நினைப்பது கிடையாது. மக்களுக்கே யுரிய பெருமைக்குப் பயனிலாத சொற்களைப் பேசுவது இழுக்கு என்றும் எண்ணுவது இல்லை. ஆசிரியர் வள்ளுவனார் மக்களை அளந்து பார்க்கும் கருவியாகச் சொல்ல வந்தவர் பேசப்படும் சொற்களை மிக உயர்ந்த இடத்தில் வைத்துக் கருத்தினைத் தெரிவிக்கின்றார்.

எதையும் பேசுதல் கூடாது, எப்பொழுதும் பேசுதல் கூடாது, பயனிலாத சொற்களைப் பேசுதல் கூடாது, என்பவை யெல்லாம் வாழ்க்கைப் பாதையில் சிந்திக்கவேண்டியவைகளாகும்.

## குற்றமற்றவர்கள்

ஒருவனுக்கு உள்ள அறிவின் திறத்தினை அவன் பேசும் சொற்கள் முன்னின்று முதன்மையாகக்காட்டும். அறிவு நிறைந்த சான்றோர்கள் மறந்துகூட பயனிலாத சொற்களைச்சொல்லமாட்டார்கள். அதுவே, அறிவுடைமைக்கு அழகாகும். பயனுள்ள சொற்களை ஒருவர்

பேசுவாரேயானால் இப்படிப் பேசுபவர் தெளிந்த அறிவு படைத்தவர் என்பது கொள்ளத்தக்கது.

அத்தகைய மக்களை 'மாசறு காட்சியவர்' என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். 'காட்சியவர்' என்ற சிறப்பான சொல் தெளிவு பெற்ற அறிஞர்களைக் குறிக்கும். அவர்களை மேலும் சிறப்பிக்கவேண்டி 'மாசறு காட்சியவர்' என்று கூறினார். பேசப்படுகின்ற வார்த்தைகளை இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

பொருள் நிறைந்த சொற்கள், பொருளே இல்லாத சொற்கள், அதாவது அர்த்தமுள்ள சொற்கள், அர்த்த மற்ற சொற்கள் எனப்படுவனவாம். 'பொருள் தீர்ந்த சொற்கள்' என்பதாக குறட்பா கூறும் பொருள் நீங்கிய சொற்கள் எனபதைத்தான் இது குறிக்கின்றது. அதிக மாகப் பேசுதல், அர்த்தமில்லாத சொற்களுக்கு இடம் தரும் என்பதும் உணர்த்தப்பட்டது. ஆதலால்தான் சொற்களைப் பற்றி இவ்வளவு சிறப்பாகப் பேசப் படுகின்றது.

பொருளில்லாத சொற்களைப் பேசுகின்ற ஒருவன் காலத்தை வீணாக்குகிறான் என்பது மட்டுமல்ல; அறி வில்லாதவன் என்பதையே காட்டிக்கொள்கிறான் என்ப தாகும். வாழ்க்கையில் காலம் என்பது மிகவும் அருமை யானதாகும். காலத்தினை வீணாககுபவன் மனிதப் பிறவியின் மாண்பினை உணராதவனாகிறான்.

## மறந்தும் சான்றோர் பேசுவதில்லை

எனவேதான், அறிவு நிறைந்தவர்கள் மறந்தும் கூடப் பொருளில்லாத சொற்களை எக்காலத்திலும் பேசமாட்டார்கள். 'பொருள் தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார்' என்று குறட்பா தொடங்குகின்றது.

மறந்தும்கூட சொல்லமாட்டார்கள் என்பதைத் தான் 'பொச்சாந்தும்' என்ற சொல் குறித்து நின்றது. மறதி என்பதனை 'பொச்சாப்பு' என்ற சொல் விளக்கும். 'பொருள் தீர்ந்த' என்று குறிப்பிட்டதனால் அர்த்தம் நீக்கப்பட்ட சொற்கள் என்பதாயிற்று.

அர்த்தம் நீக்கப்பட்ட சொற்கள் அரிசியில்லாத பதர்கள் போன்றவையே யாகும். இவ்வாறு பொருள் நிறைந்த சொற்களை அஞ்ஞானம் நீங்கியபேரறிஞர்கள் பேசுவார்கள் என்பதாம்.

அஞ்ஞானம் என்பதனை மயக்கம் என்றும் கூறுவதும் உண்டு. மயக்கம் என்பது அறியாமையைக் குறிக்கும். ஆதலால்தான் மயக்கத்தினை 'மருள்' என்று குறிப்பிட்டார்கள். அறிவு உடையவர்களுக்கு 'மருள்' இருக்காது. அறியாமையாகிய மயக்கம் இருக்காது. அவர்களை 'மருள் தீர்ந்த மாசறு காட்சியவர்' என்ற சிறப்பினால் குறட்பா குறிப்பிடுகின்றது.

உள்ளத்திலே பயனுள்ள எண்ணங்கள் அறிவுடையோர்களுக்கே தோன்றும்.

பயனுள்ள எண்ணங்கள் தோன்றினால் பயனுள்ள சொற்கள் பேசப்படும். அப்படிப் பேசப்படுவது அறிவுடைமையைக் குறிக்கும். ஒருவரை அறிவு நிறைந்தவர் அல்லது அறிவற்றவர் என்று கண்டுகொள்ள பல காலும் நெருங்கிப் பழகுதல் வேண்டும் என்பது இல்லை.

## பொருளற்றவைகளைப் பேசார்

சொற்களைக் கொண்டே நல்லறிஞர்கள் புரிந்து கொள்வார்கள். 'பொருள் தீர்ந்த பொச்சாந்தும் சொல்

லார்' என்று குறட்பா தொடங்கப் பெற்று 'மருள் தீர்ந்த மாசறு காட்சியவர்' என்று முடிகின்றது.

மருள் தீர்ந்தால் 'மாசறு காட்சிதோன்றும்' என்பது வெளிப்படையாகும். இருள் நீங்கி ஒளி வீசுவதை அஞ்ஞானம் நீங்கிய அறிவின் விளக்கத்திற்குக் கருத்தாகக் கூறப்படும். மனத்திலுள்ள அஞ்ஞானம் பயனில்லாத வார்த்தைகளால் பெரிதாக்கப்படும். பயனுள்ள வார்த்தைகள் மெய்ஞ்ஞான அறிவினை எடுத்துக் காட்டும். ஆதலினால் அறிவு நிறையப் பெறுதலே மக்கட் பிறவிக்கு ஏற்றதென்ற உண்மை எளிதாகப் பேசப்பட்டது.

'பொருள் தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார் மருள் தீர்ந்த—மாசறு காட்சி யவர்' என்ற குறட்பாவில் அடங்கிக் கிடக்கும் நுண்ணிய பொருட்செறிவு சிந்திக்கத்தக்கது. உலகியல் வழக்கில் பெரிதும் பின்பற்ற 'வேண்டியதாகும். பயனிலாத சொற்களைப் பேசிப் பழகுபவர்களுக்கு அப்பழக்கம் நோய் போன்றதாக அமைந்துவிடுகின்றது. அப்பழக்கம் அவ்வாறு பேசுகின்றவனுக்குத்தான் தீங்கினை உண்டாக்கும் என்று சொல்லி நிறுத்துதல் கூடாது; மற்றவர்கட்கும் துன்பத்தினைக் கொடுப்பதாகும்.

மக்கள் எல்லோருமே அவனை எள்ளி நகையாடுவார்கள் என்பது குறிப்பு. பலராலும் இகழ்ந்து பேசப்படும் நிலைக்குப் பயனில்லாத சொற்களை சொல்லுபவன் ஆளாகியிருப்பான். அத்தகைய ஒருவனை அறிவுடைய மக்கள் மட்டும்தான் இகழ்ந்து பேசுவார்கள் என்பது அல்ல. அறிவு நிறையாத மக்களும் அத்தகைய ஒருவனை வெறுத்து ஒதுக்கிவிடுவர்.

பயனில்லாத சொற்கள் பலராலும் வெறுக்கப்படும் ஆதலால், அவ்வாறு பேசுகின்றவனும் வெறுக்கப்படுவான். பலராலும் வெறுக்கப்பட்டாலும் பயனிலாத சொற்களைச் சொல்லும் பழக்கமுள்ளவர்கள் உணராமலும் இருப்பார்கள். அவர்கள் இகழ்ச்சிக்கு ஆளாகின்றார்கள் என்பது உறுதியான உண்மையாகும்.

## பிறரால் இகழ்ந்து எள்ளப்படுவான்

அப்படிப்பட்டவன் 'எள்ளப்படுவான்' என்று ஆசிரியர் குறிக்கின்றார்; அதாவது இகழப்படுவான் என்பதாகும். புகழப்பட வேண்டிய மனிதப் பிறவி எடுத்தவன் இகழப்படுவானேயானால் அவன் பெற்றிருக்கும் பிறவி மனிதப் பிறவியாகாது.

இகழ்ச்சி என்பது ஒருவனுக்கு உண்டாவதற்குக் காரணங்கள் உண்டு. சிலரால் இகழப்படுபவன், பலரால் இகழப்படுபவன் என்றும் பாகுபடுத்திக் கூறலாம். பயனில் சொல் பழக்கமுள்ளவனைப் பலரும் இகழ்வார்கள் என்பது குறிக்கப்பட்டது.

பலரும் வெறுக்கக் கூடிய சொற்களைச் சொல்லுபவனை எல்லோரும் இகழ்ந்து பேசுவார்கள் என்று ஆசிரியர் வள்ளுவனார் அமைத்துக் காட்டினார். பயனிலாத வார்த்தைகளைப் பேசுபவன் வெறுக்கப்படுவான் என்பது மட்டுமல்லாமல் பிறர் கோபத்துக்கு ஆளாவான் என்று கூறுதலும் மிகையாகாது.

வெறுக்கும் தன்மை கோபத்திற்கு ஆளாக்கும் என்பது இயல்பான தன்மையாகும். 'பல்லார் முனியப் பயனில் சொல்லுவான்' என்று குறளடிச் சொற்கள் வருகின்றன.

## பலரும் கோபப்படுவர்

அறிவுடைய மக்கள் பலரும் பயனிலாத சொற்களை பேசுபவர்களை எளிதில் புரிந்துகொள்வார்கள். அப்படிப் பட்டவர்களை வெறுத்து விலக்குவார்கள், வெறுத்து நீக்குவார்கள் என்பதைத்தான் 'முனியப் பயனில சொல்லுவான்' என்பதாகக் கூறினார்.

நிலைத்து நின்று புகழ் தேடி வாழவேண்டிய மனிதப் பிறவி எவ்வாறு கெடுதிக்குள்ளாக்கப்படும் என்பதெல்லாம் உய்த்துணர வேண்டியதாயிற்று. சொற்கள் பேசுவதில் மிகமிக விழிப்புடன் இருத்தல் வேண்டும்.

பொருள் நிறைந்த சொற்களைப் பேசும் பழக்கம் அளவோடு பேசுகின்ற அரிய பழக்கத்திற்கு வழிகோலும்; குறைந்த சொல் பேசுபவர்கள் நிறைந்த ஆற்றலினைப் பெறுவார்கள். ஆற்றல் மிகுதி செயல் முறைக்கு வழிவகுப்பதாகும். ஆதலால், பயனில்லாத சொற்கள் வேறு பற்பல தீமைகளுக்கு அடிப்படையாக நிற்பதாகும்.

உலகமக்களால் இகழ்ந்து பேசப்படுகின்ற நிலையினைதாமே வரவழைத்துக் கொள்கின்ற தன்மை பயனற்ற சொற்களைப் பேசுபவர்களிடத்தில் காணப் படுகிறது. 'எல்லாரும் எள்ளப்படும்' என்று ஒரு குறட்பா முடிகின்றது.

இகழ்ந்து பேசுகின்ற பழக்கத்தினை எல்லோரும் எளிதில் கொள்ளுதலாகும்என்பது குறிப்பு. அறிவுடைய மக்களால் வெறுக்கப்படுவான் என்றும், எல்லோராலும் இகழப்படுவான் என்றும் ஒரு வகையில் பிரித்துக்காட்டி குறட்பா கருத்தினை அமைக்கின்றது.

சிறந்த மனப்பண்பு

மனப் பண்பு முதலிடம் பெறவேண்டும் என்பதைத் தான் மனிதப் பண்பாட்டில் பல இடங்களிலும் ஆசிரியர் கூறுகின்றார். மேலோங்கி வளர்ந்து செல்லவேண்டிய மனித வாழ்க்கை தடைப்பட்டு நின்றுவிடுதல் கூடாது. மனிதன் என்றென்றும் இகழ்ச்சிக்கு ஆளாதல் கூடாது.

கல்வி கேள்வி அறிவு பெற்றிருந்தும் மேலாகப் பேசப்படும் மனிதப் பண்பு இல்லாமலிருந்தால் அனைத்துமே உயிரற்ற உடல்போல் ஆகிவிடும். மனப் பண்பாடு உலக மக்களால் பாராட்டுவதற்கு இடம் தேடித் தரும்.

உலக மக்கள் இகழ்ந்து சொல்லுமாறு செய்வதைப் பயனில் சொற்களில் வைத்துக் காரணமாகக் காட்டினார். 'பல்லார் முனியப் பயனில சொல்லுவான்— எல்லாரும் எள்ளப்படும்.'

இக்குறட்பா பயனில்லாத சொற்களைப் பேசும் அறிவற்றவனின் நிலைமையினைக் குறித்தது. எல்லோராலும் இகழப்படுபவன் மக்களிடையே வாழ்வது இழி நிலை என்பது பெறப்பட்டது.

'பல்லார்' என்பதை 'அறிவுடைய மக்கள்' என்று கொள்ளுதல் சிறப்பானதாகும். ஆனால் இகழ்வார்கள் என்பதைக் குறிக்கும்பொழுது அச்செயல் அறிவுடைய மக்கள், அறிவில்லாத மக்கள் ஆகிய எல்லோராலும் முடியும் என்பதற்காகத்தான் 'எல்லாரும்' என்ற சொல் கூறப்பட்டது.

## தனித்து வாழாமை ஒத்து வாழ்தல்

உலகில் வாழும் மக்களுடன் ஒத்து வாழ்வதுதான் அறிவுடைமையாகும். அவ்வாறு இல்லாவிட்டால் வாழ்தல் பயனற்றதாகிவிடும் என்பது வெளிப்படை யான உண்மையாகும். உலகில் கணக்கிட்டுப் பார்க்கும் பொழுது மக்கள் இனத்தை அழிக்கக்கூடிய கொடுமை களாகப் பலவற்றைக் காண்கின்றோம். அவைகளுள்ளே 'பதர்' போன்ற மக்கள் எவ்வளவு தீமையானவர்கள் என்பதை வெறுக்கப்பட வேண்டியவர்கள் என்ற குறிப்பு உணர்த்திற்று.

தனித்து வாழ்தல் என்பது மக்கட்பிறவிக்கு ஏற்ற தன்று. இக்கருத்து பற்றியே பற்பல உண்மைகளை ஆசிரியர் கூறி வைக்கின்றார். உலக மக்களோடு ஒத்து வாழத் தெரியாதவர்கள் உலகத்தில் வாழும் உரிமைக்கு தகுதி உடையவர்கள் அல்லர்.

## சிறப்பு வாழ்க்கை

உலகத்தில் 'வாழ்தல்' என்பது மக்களுக்கென்றே யுரிய 'சிறப்புடன் வாழ்தல்' என்பதைத்தான் குறிக்கும். சற்று விளக்கமாகக் கூறப் புகுந்தால் உலகத்தோடு பொருந்தி வாழ வேண்டும் என்பதாகும். அந்தப் பழக்கம் சிறந்த முதிர்ந்த அறிவுடையோர்களால்தான் முடியும்.

அறிவின் உண்மையினை அறிந்தவர்கள் உலகத் தோடு ஒட்டி வாழத் தெரிந்தவர்களாவார்கள். உலகத் துடன் ஒட்டி வாழ்தல் என்பது உலக நடைமுறை யினைப் பின்பற்றி வாழ்தலாகும்; உலகப் போக்கில் கலந்து வாழ்வதாகும்; உலக மக்களுடன் இணைந்து

சேர்ந்து வாழ்வதாகும்; இத்தகைய வாழ்வுதான் மேன்மையுடையது.

மேலான வாழ்க்கை வாழ்வதற்குரிய பிறவி மனிதப் பிறவி என்பதனை நல்லறிவுடைய மக்கள் நன்கு அறிந்து அதன்படி நடப்பார்கள். இத்தன்மையினைப் பற்பலவாக வற்புறுத்திக் கூறவேண்டிய காரணங் களுண்டு. உலகத்துடன் இணைந்து வாழ்கின்ற பழக்கத்தினை, எளிதில் கற்றுக்கொள்ளவும் முடியாது.

## கண் போன்ற கல்வி அறிவினை வளர்க்கும்

கற்றல் என்பது கண் போன்று சிறந்ததாகும். கற்றல் என்பது அறிவினை வளர்க்கும். கற்றல் என்பது அளவுடன் நிற்பது அல்ல. இவ்வாறு கல்வியினை என்றென்றும் புகழ்ந்தே கூறவேண்டும். கற்றல் என்பது மிகவும் விரிந்த பொருளையுடையதாகும்.

கல்வி என்பது ஒரு துறைப்பட்ட முறையில் மட்டும் அமைந்து விடுவது அன்று. அது பலவகைப் படும்; எண்ணில் அடங்கா. கற்றறியவேண்டிய நூல் களோ மிகப் பலவாகும். பல நூல்களைக் கற்றவர்கள் உண்டு. அத்தகைய கல்விமான்களும் உலகப் போக்கில் காலத்திற்கு ஏற்றபடி நடந்து கொள்ளும் பக்குவம் பெற்றிருக்க வேண்டும்.

## முதன்மையானது

அந்த அறிவினைத்தான் முதன்மையான அறிவு என்று கூறுவார்கள். உயர்ந்த மக்கள் வாழ்ந்து வகுத்துக் காட்டும் முறையில் செல்லுவதைத்தான் 'உலகத்தோடு ஒட்டி வாழ்தல்' என்ற பொருளில் வழங்குகிறார்கள்.

நூல்கள் பலவற்றையும் கற்றுவிட்ட மாத்திரத்தினால், 'உலகத்தோடு ஒட்டி வாழ்தல்' வந்துவிடும் என்று கொள்ளுதல் ஆகாது. அப்பழக்கம் தனிப்பட்டதொரு கல்வியென்றே கூறுதல் வேண்டும். கல்லாதவர்கள் என்பவர்களைக் குறைவாகப் பேசுவோம். கற்றவர்களைச் சிறப்பித்துச் சொல்லுவோம்.

## கற்றிருந்தும் கல்லாதவர்கள்

இதுதான் உலகத்தில் பெருவழக்காகும் என்றாலும் பல நூல்களைக் கற்றிருந்தும் உலகத்தோடு பழகுவதைக் கற்காவிட்டால் அவர்களையும்கூட 'கல்லார்' என்று கூறுவது தவறாகாது என்பதே ஆசிரியரின் குறிப்பாகும்.

பெற்ற கல்விக்குப் பயன் அறிவினைப் பெருக்குதல் ஆகும். அந்த அறிவுக்குப் பயன் நல்லொழுக்கத்தினைப் பெறுதல் ஆகும். ஆதலால்தான் ஒழுக்கத்தினைப் பெறாதவர்கள் பல நூல்களைக் கற்றிருந்தாலும் கல்லாதவர்களாகவே கருதப்படுவர் என்பது கூறப்பட்டது.

உலகம் என்பது அடிக்கடி மாறும் தன்மையுடையது. அந்த மாறுதலுக்கு ஏற்ப நடந்து கொள்ளுவதைத்தான் 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்' என்று கூறினார்கள். பல நூல்களைக் கற்ற ஒருவன் காலத்தின் மாறுதலுக்கு ஏற்றபடி நடந்துகொள்ள அறிதல் வேண்டும். நூல்களின் முறைகள் சில காரணங்களினால் காலத்திற்கு ஒத்துவராது. இதனை அறிவுடைய மக்கள் உணர்ந்து கொள்ளுவார்கள்.

ஆகவே, அறிவுதான் தலைமையாயும் முதன்மை யாயும் வைக்கப்பட்டது. 'பல கற்றும் கல்லார் அறிவிலாதார்' என்று முடிகின்ற ஒரு குறட்பா உலகத் தோடு வாழ வேண்டிய முறையினை வற்புறுத்திச் சுட்டிக் காட்டிற்று.

## கற்றும் கல்லார் அறிவில்லாதவர்கள்

'பல கற்றும் கல்லார்' என்பது சிந்தனைக்குரிய இடமாக அமைந்துள்ளது. பல கற்றும் என்பது பல நூல்களைக் கற்றிருந்தும் என்ற பொருளினையும், 'கல்லார்' என்பது உலகத்தோடு பொருந்த வாழாத வர்கள் என்பதையும் விளக்குவதாகும்.

உலகத்தோடு பொருந்தி வாழ்வது எத்தகைய அரிய செயல் என்பதை உயர்த்திப் பேசுவதற்காகத்தான் பல நூல்களைக் கற்றவர்களையும் கல்லார் என்று குறிக்கும் படியாயிற்று.

நூல்களிலே சொல்லப்படாதவைகள் இருந்தாலும் அறிவுடையவர்கள் உலகத்தோடு இணைந்து வாழ அறிந்து கொள்ளுவார்கள் என்பதாகும். 'உலகத்தோடு ஒட்ட ஒழுகுதல்' என்ற சிறப்புடன் குறட்பா தொடங் கிற்று. ஒழுகுதல் என்பது அறிவின் சிறப்பினை மெய்ப் பித்தது.

## நூல்கள் சொல்லாதது

எல்லாம் உலகில் வாழ்வதற்குத்தான் என்கின்ற குறிப்பான செய்தியினை அறிதல்வேண்டும். ஆதலால் தான் உலகத்தோடு ஒட்ட ஒழுகல் என்பதனை பல நூல் களைக் கற்றும் கல்லாதவர்கள் அறிவில்லாதவர்களே

யாவார்கள் என்று சொல்லப்பட்டது. இக்குறட்பா சிந்தனைக்குரிய செய்திகள் பலவற்றையும் அடக்கிக் கொண்டுள்ளது. ‘உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பல கற்றும்—கல்லார் அறிவிலாதார்.’

உலக மக்களோடு காலத்திற்கேற்ப, இடத்திற் கேற்ப, சூழ்நிலைக்கேற்ப, அவ்வப்பொழுது காணப் படும் மாறுதலுக்கேற்ப நடந்து கொள்ளுதல் என்பது எத்தகைய சிறப்பு வாய்ந்தது என்பதனை சுருக்கத்தில் அமைத்துக் காட்டினார்.

அறிவு நிறைந்தவர்கள் எப்பொழுதும் உலகத் தோடு பொருந்தி வாழ்வார்கள்; அறிவில்லாதவர்கள் அவ்வாறு வாழமாட்டார்கள். பல நூல்களைக் கற்ற பலரும் உலகத்தோடு ஒட்டிப் பழகவும் கற்றிருப்பார்கள் என்று பேசப்படுகின்ற எண்ணம் உறுதியாக்கப்பட வில்லை.

கல்வியை மட்டும் பெற்றிருத்தலினால் உலகத் தோடு ஒழுக வேண்டிய முறை இயல்பாகவே வந்து விடும் என்று கூறுவதற்கு இல்லை. அதற்கென்றே தனிப்பட்டதொரு அறிவும் ஆற்றலும் தேவை என்கின்ற எண்ணம் மெய்ப்பிக்கப்பட்டது.

பன்முறையும் சிந்திக்கவேண்டிய குறிப்பினை ‘பல கற்றும் கல்லார்’ என்ற சொற்களினால் விளக்கிப் பேசினார்.

### உயிரினும் மேலான ஒழுக்கமே துணை

‘உலக வாழ்க்கை’ என்பதுதான் என்றென்றும் ஒருவன் உள்ளத்தில் உறுதியாக இருக்க வேண்டிய தாகும். அந்த வாழ்க்கையினை நடத்துவதற்காகத்தான்

ஏனைய பலவும் துணையாக இருத்தல் வேண்டும். பொதுப்படக் கூறுகின்றபொழுது ஒழுக்கம் என்பதனை உயிரினும் மேலானதாக மக்களுக்குக் கூறுவதுண்டு.

அந்தக் கருத்தினையும் பொருளாகக் கொண்டுதான் 'ஒட்ட ஒழுகல்' என்றும் அமைத்தார். மக்களோடு, பொருந்தி இணைந்து வாழ்தல் என்பதனை 'ஒட்ட' என்கிற சிறிய சொல் குறிப்பதாகும்.

ஆதலால் கற்றல் என்பதனை இரண்டாகப் பிரித்துக் கூறுவதுபோல, வகைப்படுத்திக் காட்டி பல நூல்களைக் கற்றல் என்பதும் உலகத்தோடு ஒட்ட ஒழுகல் என்பதனைக் கற்பதுமாக பேசப்பட்டது. அறிவின் அடிப்படையே அனைத்தையும் தாங்கி நிற்கும் என்பது உணர்த்தப்பட்டது.

## உலகப் போக்கு

அறிவுதான் உலகத்தோடு ஒட்டி ஒழுகலினை ஒருவருக்குத் தரும் என்பதனை சிந்திக்கின்றபொழுது உய்த்துணர வேண்டிய உண்மையொன்று அறியக் கிடக்கின்றது. ஒருவன் தான் வேறு, உலகம் வேறு என்று எக்காலத்திலும் எண்ணுதல் கூடாது.

உலகப் போக்கு என்பது உயர்ந்தோர் செல்லும் வழி என்ற பொருளில்தான் அமைந்துள்ளது. மனிதன் நிறைந்த கல்வி பெற்றிருத்தல் முடியும்—நிறைந்த செல்வமும் பெற்றிருத்தல்கூடும். பல துறைகளிலும் வலிமையும் செல்வாக்கும் பெற்றிருப்பவர்களும் உண்டு.

இயல்பாக வாய்க்கப் பெற்றுள்ள பலவகையான திறமைகளினால் எக்காலத்திலேயும் எவ்விடத்திலேயும் எண்ணியது எண்ணியபடியே சாதிக்க முடியும் என்று

கருதுபவர்களும் உண்டு. ஆதலால், உலகம் எந்த முறையில் நடைபெற்றுக் கொண்டிருக்கிறதோ அந்த முறையிலேயே நடந்து செல்வதுதான் அறிவு பெற்றிருப்பதற்கு அடையாளமாகும்.

## அறிவே உணர்த்தும்

உலகம் எவ்வாறு நடந்து கொண்டிருக்கிறது என்பதனை அறிவுடையவர்கள்தான் புரிந்துகொள்ளு வார்கள். அறிவுதான் இந்த உண்மையினை எடுத்து விளக்கிக் கூறும். உலகம் என்பது சுருக்கமாக விளக்கிக் காட்டப்படும் ஒன்று அன்று. உலகில் வாழ்பவர்களும் ஒரே விதமான வாழ்க்கையினை உடையவர்களும் அல்லர்.

ஆட்சி செலுத்தும் தலைவர்கள் முதல் அன்றாட வாழ்க்கையினைத் துன்பப்பட்டே நடத்தும் மக்கள் வரை இந்த உலகில் வாழ்க்கை அமைத்து வாழ்கின் றார்கள். பற்பல இடங்களிலிருந்து வாழவேண்டியவர் களும் உண்டு. பலவகையான தொழில்கள் செய்பவர் களும் உண்டு. ஆட்சி காரணத்தினால் மாறுதல்கள் ஏற்படுவதும் உண்டு.

எனவேதான், உலகம் அடிக்கடி மாறுதல் அடைதல் கூடும் என்பது இயல்பாயிற்று. அப்படிப் பட்ட உலகத்தில் அவ்வப்பொழுது உலகம் எந்தவிதத் தில் நடந்து போகின்றதோ அந்த விதத்தில் நடந்து கொள்ளுவதே அறிவுடைமையாகும்.

'எவ்வது உறைவது உலகம்' என்று குறட்பா ஒன்று தொடங்குகின்றது. இந்த உலகமானது எந்த விதத்தில் நடந்து வருகின்றதோ என்பதே இதற்குப் பொருளாகும்.

அறிவின் சிறப்பு அளவிடற்கரிது

சுருக்கமாகக் கூறப்பட்ட இச்சொற்களுக்குள்ளே 'எவ்வது' என்பது பொதிந்து கிடக்கும் உண்மையினைப் பெற்றிருக்கின்றது. எக்காலத்திலும் ஒரே மாதிரியாக உலகம் நடந்து வராது என்பதனை இது உணர்த்திற்று.

அந்தந்தக் காலங்களில் உலகம் எவ்வாறு நடக்கின்றதோ என்கின்ற உண்மையினைச் சொல்ல வந்து 'எவ்வது உறைவது உலகம்' என்று கூறினார். அவ்வாறு கூறி அக்குறட்பாவினை 'உலகத்தோடு அவ்வது உறைவது அறிவு' என்று முடித்தார்.

உலகம் அமைந்து நடக்கும் முறையும், அந்த உலகத்தோடு அமைந்து நடக்கவேண்டிய முறையும் அறிவுடைமையால் அறிந்து கொள்ளமுடியும் என்பதாயிற்று. 'எவ்வது உறைவது' என்ற குறிப்பும் 'அவ்வது உறைவது' என்கிற குறிப்பும் எளிமையாக உண்மையினைப் புலப்படுத்தின.

உயர்ந்தோர் என்று கூறப்படுகின்ற உலக மக்களைக் கொண்ட உலகம் நடக்கின்ற விதத்தினை 'எவ்வது உறைவது உலகம்' என்பதால் குறிப்பிட்டார். அந்த உலகத்தோடு அதற்கு ஏற்றபடி நடந்து கொள்ளுவதுதான் அறிவுக்கு அழகு என்பதைச் சுட்டிக் காட்டி 'அவ்வது உறைவது' என்பதால் குறித்தார்.

'எவ்வது' என்பதும் 'அவ்வது' என்பதும் இரண்டு பெரிய தன்மைகளைக் குறித்து நின்றன. அதுவே போல 'உறைவது உலகம்' என்பதும் 'உறைவது அறிவு' என்பதும் இரண்டு பெரிய தன்மைகளை உணர்த்தின.

## அறிவாகிய கருவி போற்றி வளர்ப்பதாகும்

உலகத்துடன் உறைந்து போவது என்பதுதான் தலையாய கடமையாகும். நுட்பமான அறிவுத் திறமை உள்ளவர்கள்தான் இவ்வாறு நடந்து கொள்ளுவார்கள். இதனையறியாதவர்கள் 'அறிவு பெறாதவர்கள் ஆவார்கள். அறிவு என்பது எல்லாக் காலத்திலேயும் எல்லாவற்றையும் ஒருவனுக்குக் கொடுக்கும் கருவியாகும்.

அந்த அறிவாகிய கருவியினைப் போற்றி வளர்க்கும் மக்கள் புகழுடன் வாழ்வார்கள். உலகம் என்பதைப் பேசுகின்றபொழுது அத்துடன் அறிவு என்பதனை இணைத்து வைத்துப் பேசுவதால் அறிவின் மேன்மை உணர்த்தப்பட்டது.

கல்வி கேள்விகளைப் பெற்றிருந்தாலும் அந்தந்தக் காலத்தில் உலகத்துடன் நடக்கவேண்டிய அறிவினைப் பெற்றிருத்தலே சிறப்பு என்பது வற்புறுத்தப்பட்டது.

## பரந்து விரிந்தது

அளவிட்டுக் கூறிக் குறிப்பிட்ட விளக்கத்துடன் கணக்கிட்டுக் காட்டப்படுவது அறிவு ஆகாது. பரந்து விரிந்து நிலவி வருகின்ற உலகம்போல அறிவும் குறிப்பிட்ட எல்லைக்குள் முடிவிட்டுப் பேசப்படுவது அன்று.

ஆதலால்தான் அறிவின் திறத்தினையும் உயர்வினையும் பேசவந்த ஆசிரியர் வள்ளுவனார் மிகத் தெளிவாக அதனைப் பற்பல இடங்களில் அமைத்து வைத்து விளக்கிச் செல்லுகின்றார். பல நூல்களைக் கற்று அறிவினை வளர்த்துக் கொள்ளுவது முறையேயாகும்.

நூல் வழிகளினால் பெற்ற அறிவு சிறந்து விளங்குவதுமாகும். ஆனால் அந்த ஒன்றினையே முழுமையுமாக வைத்துச் செயற்படுதல் அறிவுடைமையாகிவிடாது.

நூலறிவினைப் பெற்றிருந்தாலும் அவ்வப்பொழுது உலகம் நடந்து செல்லுகின்ற நிலைமைக்குப் பொருந்துமாறு ஒழுகுதல் வேண்டும். அவ்வாறு உலக வழியோடு அறிந்து நடத்தலே அறிவுடைமைக்குப் பொருந்துவதாகும்.

நூல் வழியில் மட்டும் நின்று கற்றதனால் ஏற்பட்ட பயனைக்கொண்டு உலகத்திற்குப் பொருந்தாத முறையில் செயல்படுபவர்களும் உண்டு. அப்படி நடந்தால் உலகம் பழிக்கும்.

ஆதலால்தான், உலகத்தோடு பொருந்த நடந்து கொள்ளுதலே 'அறிவு' பெற்றிருப்பதற்கு அறிகுறியாகும். உலகத்தின் நடைமுறைகளை இரண்டு பெரும் பகுதிகளாகப் பிரித்து அவைகளைச் செயற்கை, இயற்கை என்று கூறுகின்றார்.

## செயற்கை இயற்கை சிந்தனைக்குரியன

நூல்களைக் கற்றதனால் உண்டாகியிருக்கும் அறிவினைச் செயற்கையென்றும் உலகத்திற்கு, காலத்திற்கேற்றபடி நடந்து கொள்ளுவதை இயற்கையின்பால் வைத்தும் கூறுகின்றார். 'உலகத்து இயற்கை' என்று குறட்பாவில் அமைத்து உலகில் அவ்வப்போது நடக்கின்ற இயற்கைத் திறங்களைக் கண்டு அதன்படி செயலாற்ற வேண்டுமென்கிறார். நூல்களைக் கற்றதனால் ஏற்பட்ட அறிவின் பயனைக் குறையானதாக ஆசிரியர் கூறினாரில்லை.

உலகம் அவ்வப்பொழுது பல துறைகளிலும் பல காரணங்களினாலும் மாறுதல் அடையும் தன்மை யுடையதாகும். ஆதலால்தான் உலகத்தின் இயற்கைத் தன்மையினை அறிந்து அதனை நன்கு உணர்ந்து அதற்கு ஏற்ப நடந்து கொள்ளுதல் வேண்டும்.

'உலகத்து இயற்கை அறிந்து செயல்' என்பதாகக் குறட்பா ஒன்று முடிகின்றது. இந்த ஆற்றலினை பற்பல நூல்களைக் கற்றுவிட்டதனால் மட்டும்பெற்று விடமுடியாது. இயல்பாக உள்ள அறிவின் திறத்தி னால்தான் இந்த ஆற்றலினைப் பெறுதல் முடியும்.

ஆதலால்தான் இந்த அறிவு மேலானதாகக் கூறப்பட்டது. செயலில் ஈடுபட்டுத் தொழில் புரிபவர் கள் உலகத்தினைத் தெரிந்து நடந்து கொள்ளுதல் வேண்டும். நூல்களின் அறிவினை நன்றாகப் பெற் றிருப்பவர்களைப் பார்த்து, 'செயற்கை அறிந்தக் கடைத்தும்' என்று ஆசிரியர் கூறுகின்றார்.

## இரண்டில் சிறந்தது

'செயற்கை' என்பது நூலறிவினால் செயல்படும் தன்மையினைக் குறிப்பதாகும். அவ்வப்பொழுது உலகத் தன்மையினை அறிந்து நடந்து கொள்ளும் பாங்கினை நூல்கள் தந்துவிடாது என்பதும் குறிப்பு.

நூல்களின் அறிவே போதும் என்று முடிவு கட்டி இருத்தல் தகாது என்பதைச் சுட்டிக்காட்ட வேண்டியே 'அறிந்தக் கடைத்தும்' என்று அமைத்துக் காட்டினார். 'குறட்பாவினையும் நன்கு சிந்தித்தல் வேண்டும். செயற்கை அறிந்த கடைத்தும் உலகத்து—இயற்கை அறிந்து செயல்.'

இக்குறட்பா நல்ல தொழில்களினை மேற்கொண்டு செயலபடுவோர்களுக்குச் சிறப்பாகக்கூறப்பட்டதாகும். உலக மக்களிடையே இயல்பாக இருந்து வரும் எண்ணத்தினை முன்னே நிறுத்தி வைத்து அதற்கு மாறாக நிலவ வேண்டிய உண்மை வழியினை எடுத்துக் கூறினார்.

ஒருவன் நூல்களில் கற்றறிந்த வழியினை மேற்கொண்டு நடப்பானேயானாலும் அவ்வழி காலத்தினால் உலகத்திற்குப் பொருந்தாததாக இருத்தல் கூடும். அப்படிச் செய்வானேயானால் உலக மக்களால் பழிக்கப்படும் நிலைமைக்கும் அவன் ஆளாக நேரிடும். ஆதலால்தான் 'உலக இயற்கையினைத் தெரிந்து செயல்பட வேண்டும்' என்று கூறப்பட்டது.

## நூல்வழி அறிவும் உலகவழி அறிவும்

'நூல்வழி' என்பதும் 'உலக வழி என்பதும்' தெளிவுபடுத்தப்பட்டது. நூலறிவினால் அறிந்து நடப்பதை 'செயற்கை அறிதல்' என்றும், உலகத்தோடு பொருந்துமாறு நடந்து கொள்வதை 'இயற்கை அறிதல்' என்றும் விளக்கிக் கூறினார்.

நூல்களின் சிறப்பினை அறிந்து கொள்ளுதல் என்பது எளிதானதல்ல. ஆனால் அக்கருத்துக்களை உணர்ந்து கொள்ளுதல் முடிவானதும் அல்ல. நூலறிவே எல்லா காலத்திற்கும் துணையாக நிற்கும் என்று நம்புதலும் அறிவிற்குப் பொருந்தாததாகும்.

நூல்கள் பலவற்றைக் கற்பதும் ஏனைய பயிற்சிகளைப் பெறுவதும் ஆகிய எல்லாம் உலகத்தில் வாழ்வதற்கேயாகும். ஆதலால்தான் உலகத்தோடு பொருந்தி வாழ்வதை முதன்மையாக வைத்தார்.

## நூல் பல கற்றல்

நூல்களைக் கற்பது மிகவும் சிறப்புடையது என்கிற எண்ணத்தினைப் பல இடங்களிலும் திருவள்ளுவர் தெளிவுபடுத்திக் கூறுகின்றார். 'நூல் பல கற்பினும்' என்று கூறுகின்ற இடத்தில் உயர்வு சிறப்பாக 'உம்' என்பதனை அமைத்துக் காட்டினார். கற்றல் என்பது பற்பல நூல்கள் கற்பதேயாகும் என்பதும் சிறப்பிக்கப்பட்டது.

கற்கப்படுகின்ற நூல்களெல்லாம் நுட்பமான கருத்துக்களைப் பெற்றிருப்பதாகும் என்று கூற முடியாது. நுட்பம் நிறைந்த நூல்களைக் கற்றால் தான் நுண்ணிய அறிவு பெறுதல் முடியும். ஆதலால் தான் நுண்ணிய பல நூல்களைக் கற்றல் மிகவும் சிறப்புடையதாகும் என்பதனைச் சிறப்பித்துக் கூறவே 'நுண்ணிய நூல் பல கற்பினும்' என்று கூறி வைத்தார்.

## இயற்கையின் வலிமை

கூர்மையான புத்தியுள்ளவர்களே நுண்ணிய நூல்களைக் கற்க முடியும். இயற்கையின் வன்மையினைப் பற்பலவிடத்தும் பற்பல முறைகளில் ஆசிரியர் வள்ளுவனார் கூறி வருகின்றார்.

இயற்கையின் வழிமுறையினைக் கூறுகின்ற பொழுது காரணப் பெயராக அமைத்து 'ஊழ்' என்றும் 'பால்' என்றும் 'விதி' என்றும் 'உண்மை' என்றும் 'இயற்கை' என்றும் ஒரே கருத்தில் வைத்துக் கூறுகின்றார்.

'ஊழ்' என்பதனை இயற்கை என்னும் பொருளில் அமைத்து 'இருவேறு உலகத்து இயற்கை' என்று தொடங்கப் பெறும் குறட்பாவில் தெளிவுபடுத்துகிறார்.

'இயற்கை' என்பது எல்லாவற்றையும்விட வலிமை மிகுந்தது என்பது உடன்பட வேண்டிய கருத்தாகும். கற்றறிதலை செயற்கை என்றும் இயல்பாக அமைந்திருப்பதை 'இயற்கை'என்றும் கூறுவது குறட்பாவின் கருத்தாகும்.

இயற்கையால் ஏற்படுவது எப்பொழுதும் நன்மையாகவே முடியும் என்று கூறுதல் இல்லை. நன்மைக்கும் தீமைக்கும் பொதுப்படையாக அமைந்திருப்பது இயற்கையின் செயலாகும். இயற்கையாகவே ஒருவனுக்கு அறிவு அமைக்கப் பெற்றிருந்தால் அந்த அறிவு அவன் கற்றிருக்கின்ற பல நூல்களின் பயனுக்கு மேலாக நிற்கும் என்பது குறிப்பாகும்.

## மேம்படுதல்

நுட்பமான பொருள்களையுடைய பல நூல்களையும் ஒருவன் கற்றிருந்தாலும் அவைகளையெல்லாம் விட அவனுக்கு இயற்கையினால் உண்டாகியிருக்கின்ற அறிவே மேற்பட்டு நிற்கும் என்பதாகும்.

இயற்கையினால் ஏற்பட்டிருக்கும் அறிவினை 'உண்மை அறிவு' என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். குறட்பா ஒன்றில் அமைத்துக் காட்டும்பொழுது 'தன் உண்மை அறிவு' என்று விளக்கிக் கூறும் முறைமை சிந்திக்கத் தக்கதாகும்.

இயற்கையினையும் செயற்கையினையும் ஒருபடியில் அமைத்துக் காணுகின்ற பொழுது 'உண்மை அறிவு' மிகுந்து நிற்கும் என்பதனை 'உண்மை அறிவே மிகும்' என்றும் கூறினார்.

## உண்மை அறிவே மிகும்

நுண்ணிய நூல்கள் பலவற்றினைக் கற்றல் பயனில்லாததாக முடியும் என்று கருதுதல் முற்றிலும் தவறாகும். அவைகளினால் உண்டாகி இருக்கின்ற நற்பயனையும் தீய அறிவு அழித்தலும் கூடும். 'தீமை' என்றாலும் 'நன்மை' என்றாலும் உண்மை அறிவின் வலிமையினை அறிந்து கொள்ளுதலே சிறப்பான குறிப்பென்பது உய்த்துணரப்பட்டது.

'நுண்ணிய நூல் பல கற்பினும் மற்றும் தன்— உண்மை அறிவே மிகும்' என்ற குறட்பாவின் ஆழ்ந்த கருத்து உலகியல் நடைமுறைக்கும் மக்கள் வாழ்விற்கும் தெள்ளிதின் விளங்கும் கருத்தினைக் கொண்டுள்ளதாகும்.

'கற்க கசடறக் கற்பவை' என்று கூறப்பட்டுள்ள குறிப்பில் ஆசிரியர் வள்ளுவனார் நுணுக்கமான நூல்களைக் கற்றல் வேண்டும் என்ற அருமையினைப் புலப்படுத்தியுள்ளார். நன்கு கற்க வேண்டும், நூல் பல கற்க வேண்டும், நுண்ணிய நூல்களைக் கற்க வேண்டும்.

## கற்கும் முறைகள்

நுட்ப அறிவுடன் கற்கவேண்டும், என்கின்ற பல தரப்பட்ட அரிய கருத்துக்கள் செறிந்து இக்குறட்பாவில் காணப்படுகின்றன. 'இயற்கையின்' உண்மை

யினைப் புரிந்துகொண்டால் பற்பல நேரங்களில் அறியாமையால் ஏற்படும் மனக் குழப்பங்களும் தடுமாற்றங்களும் வராது என்பது பெறப்பட்டது.

மனப்பக்குவம் என்பது மக்களுக்கென்றே ஏற்பட்ட உயரிய பண்பாகும். மனம் என்பது பொதுப் படக் கூறும்பொழுது நட்பிற்கும் பகைமைக்கும் உரிய இடமாக அமைந்துள்ளதாகும். மனத்தைப் பக்குவப் படுத்துதல் எளிதான செயல் என்று எண்ணினால் அது மிகவும் தவறாகும்.

பலருக்குக் கற்ற கல்வி ஒரு சிறிதும் மனத்தினைப் பக்குவப்படுத்த உதவாமலும் இருக்கும். மனம் திருந்திக் குற்றங்களைச் செய்யாதிருக்க வேண்டு மென்று கற்றறிந்தவர்கள் எல்லோருமே இருப்பார்கள் என்று எண்ணுதல் கூடாது.

## மனம் வேறு கல்வி வேறு

இதனைச் சிந்திக்கும்பொழுது கற்றல் என்பதும் மனம் திருந்தல் என்பதும் வெவ்வேறாக வைத்துப் பார்க்க வேண்டியவர்கள் என்றே எண்ணுதல் வேண்டும். மனக் குற்றங்களை நீக்கக் கூடிய நூல் களைக் கற்றிருந்தும் மனத்தினைத் திருத்தி நல்லவர் களாகஇல்லாமல் இருப்பதும் உண்டு. மனம் திருந்தாத மக்களை 'மாணார்' என்று ஆசிரியர் அழைக்கின்றார்.

'மாணார்' என்பதற்குப் பகைமை எண்ணம் கொண்டவர்கள் என்னும் பொருளினை அமைத்துக் கூறலாம். நல்ல நூல்களைக் கற்றதினால் பகைமை எண்ணம் மாறிவிடும் என்று கருதுதல் கூடாது. தீய நூல்களைக் கற்றவர்கள்தான் தீமையான எண்ணங் களைக் கொண்டிருப்பார்கள் என்று எண்ணுதல் உலக இயல்பு.

ஆனால் நல்ல நூல்களைக் கற்றவர்களும் திருத்த மடையாத தீய மனம் கொண்டவர்களாக இருப்பார்கள். இவர்களைத்தான் 'மாணார்' என்று ஆசிரியர் அழைக்கின்றார். அப்படிப்பட்டவர்களை நல்லவர் களாக ஆக்குதல் கடினமானதாகும். அப்படிப் பட்டவர்கள் நண்பர்களாக ஆவது முடியாததாகும் என்ற கருத்தினை 'மாணார்க்கு அரிது' என்று முடிகின்ற குறட்பா ஒன்று விளக்குகின்றது.

## கற்றிருந்தும் பயன்படாதவர்கள்

உலக மக்கள் வியப்படையக் கூடிய செய்தியாக வும் தோன்றுதல் கூடும். 'பல நல்ல கற்ற கடைத்தும்' என்று தொடங்குகின்ற குறட்பா இவ்வுண்மையினைக் கூறுகின்றது. நல்ல பல நூல்களைக் கற்ற ஒருவன் மனம் கெட்டிருப்பான் என்று மக்கள் பொதுவாக நினைப்பது இல்லை.

ஆனால் உலக அனுபவத்தில் மனம் திருந்தாத வர்கள் பல நல்ல நூல்களைக் கற்றிருந்தாலும் திருந்தவே மாட்டார்கள் என்று கூறுகின்றார். பல நல்ல நூல்களைக் கற்பது எளிதானதல்ல என்கின்ற உண்மையினைக் குறிப்பிட வேண்டியே 'பல நல்ல கற்ற கடைத்தும்' என்று அமைத்துக் காட்டுகின்றார்.

இப்படிக் கற்றவர்களும் 'மனம் நல்லர்' ஆகுதல் முடியாததாகும். அதற்குக் காரணம் இயல்பாகவே பகைமைக் குணத்தினை மனம் திருந்தாத அவர்கள் பெற்றிருப்பதேயாகும். 'கற்றக் கடைத்தும்' என்று அமைக்கப் பெற்றிருப்பது மிகவும் சிந்திக்கத் தக்கது.

‘பல நல்ல கற்ற கடைத்தும் மனம் நல்லர்—ஆகுதல் மாணார்க்கு அரிது’. இக் குறட்பா ஒன்று மிகச் சிறந்த உண்மையினை உலகிற்கு அளிக்கின்றது.

சிறந்த கல்வியினைப் பெற்றிருக்கின்றார்கள் என்கின்ற ஒன்றினாலேயே அப்படிப்பட்டவர்களை நற்குணம் உள்ளவர்களென்று நம்புதல் கூடாது என்பதே பொதிந்துள்ள கருத்தாகும்.

**மாணார்கள் யார்?**

மக்களிடையே ஒன்றுபட்டு ஒத்துப் போகின்ற நட்பு உள்ளம் பெறாதிருப்பவர்களே ‘மாணார்கள்’ எனப்படுவர். அப்படிப்பட்ட மக்களும் உலகத்தில் இருக்கின்றார்களென்பது வெளிப்படையாகும். பேச்சினாலும் பழக்கத்தினாலும் நட்பு உள்ளம் படைத்தவர்கள் போலக் காட்டிக் கொண்டாலும் பகைமை என்பதையே திருந்தாத மனத்தில் கொண்டுள்ளவர்களானபடியால் அவர்களைக் ‘கூடா நட்பினர்’ என்று ஆசிரியர் கூறுகின்றார். ஆதலால்தான் அவர்கள் கற்ற பல நல்ல நூல்களும் அவர்கள் மனத்தினைத் திருத்த முடியவில்லை.

‘மாணார்கள்’ என்பவர்களைத் தனிப்பட்ட வகையினர் என்றே ஆசிரியர் குறிக்கின்றார். ஆதலால் தான் அவர்களால் ‘மனம் நல்லர்’ ஆகுதல் என்பது முடியாததாகப் போகின்றது.

‘உலகியல் நடைமுறை’ என்பதையே முன் வைத்துப் பேசுகின்ற ஆசிரியர் வள்ளுவனார் வாழ்க்கையில் மக்களின் மனப் பக்குவத்தை விளக்கும்பொழுது நூல்களின் அறிவும் பயன்படாமல் போகின்ற நேரங்களைக் குறிப்பால் உணர்த்துகிறார்.

பகைமை உள்ளம் என்பதாக ஒன்றினை வற்புறுத்துகின்ற ஆசிரியர் அத்தகைய மனம் கொண்டவர்கள் எவ்வாறு நடந்து கொள்ளுவார்கள் என்பதையும் தெளிவு படுத்துகிறார்.

«மாணார்கள்» மற்றவர்களிடம் பழகுகின்ற பொழுது சிநேகிதர்கள் போலவே காணப்படுவார்கள். மனத்தினால் நட்பு செய்யமாட்டார்கள். நேர்மையான தன்மையினைக் கொண்டிருக்க மாட்டார்கள். உள்ளத்தினால் கூடாதிருந்து தான் பழகுகின்றவருக்குத் தீங்கு நேரிடும் காலம் வரும் வரைக்கும் அவர்களுடன் நண்பர்கள் போலவே இருப்பார்கள்.

## கூடாநட்பினர் கொடியவர்கள்

தான் பழகுகின்றவர்களைச் சுமந்துகொண்டிருப்பது போன்று அவ்வளவு அரிய நட்பினையும் காட்டிக்கொண்டு வருவார்கள். நேரம் வாய்த்தபொழுது தாம் பழகுகின்றவருக்குத் தீமை உண்டாவதற்குத் துணையாக இருந்து தீமையினைச் செய்து முடிப்பார்கள். இவர்களெல்லாம் கூடா நட்பினர் என்ற கூட்டத்தினைச் சேர்ந்தவர்களாகும். எக் காலத்திலேயும் திருந்தாத மனத்தினைப் பெற்றிருப்பவர்களாவர்.

பட்டடை என்பது பொற்கொல்லர்கள் வைத்திருக்கும் முக்கிய கருவியாகும். இக்கருவி மற்றொரு பொருளை வைப்பதற்கு ஆதாரமாக இருப்பதாகும். பொன் முதலியவைகளை வைத்து அடிப்பதற்கும், உளி முதலியவற்றால் வெட்டுவதற்கும் ஆதாரமாக

இருப்பது பட்டடை என்று கூறப்படுகின்ற இக் கருவியேயாகும். இக்கருவியினைத்தான் 'மாணார்கள்' என்று கூறப்படுகின்ற கூடாநட்பினருக்கு உவமை யாகக் கூறுகின்றார்.

கூடாநட்பினரைக் குறித்துக் காட்டும்பொழுது 'நேராநிரந்தவர்' என்ற சொற்களினால் விளக்கு கின்றார். நேர்மையில்லாத பகைவர்கள் என்பதை 'நேரார்' என்றும் மனத்தில் நட்பு உள்ளவர்கள்போல வெளியில் நேசிப்பதால் 'நிரந்தவர்' என்றும் கூறு கின்றார். 'பட்டடை நேரா நிரந்தவர் நட்பு' என்று குறட்பா ஒன்று முடிகின்றது.

பட்டடை மனம்!

அப்படிப்பட்ட பகைமை உள்ளம் படைத்தவர்கள் நம்முடன் பழகினால் நமக்குத் தீமை வரக்கூடிய காலம் வரும் வரையில்தான் பழகுவார்கள் என்பது பொருளா கும். அப்படியாகிய காலமும் குறிப்பாக இடமும் வந்து விட்டால் இக் கூடா நட்பினர் நமக்கு வருகின்ற தீமைக்கு உடந்தையாக இருப்பார்கள்.

'சீரிடம்' என்ற ஒரு சொல்லினை அமைத்து தீமை வரும் இடத்தைக் கண்டுகொண்டே இருப்பார்கள் என்று கூறினார்.

'பட்டடை'யானது பொன் முதலியவற்றைத் தாங்கிக் கொண்டு உளி முதலிய கருவிகள் அப் பொன்னை வெட்டுவதற்கு நல்ல துணையாக இருக் கின்றது. பொன்னினை அடித்து நசுக்குகின்ற கருவி அடிக்கும்பொழுது பட்டடை துணையாக நின்று அப் பொன்னினை நசுக்கி அழிக்கத் துணையாக நின்றது.

அதுபோலவே கூடா நட்பினர் பகைவர்கள் நம்மைத் தாக்க வருகின்றபொழுது பட்டடை போல் இருந்து நமக்குத் தீமை செய்வார்கள் என்பதாகும். ஆதலால்தான் மனம் திருந்தாத மக்களைப் பகைவர்கள் என்று கூறி பட்டடைக்கு ஒப்பானவர் என்றும் குறிப்பிட்டார். ஆதலால்தான் இவர்களை 'பட்டடை நேரா நிரந்தவர் நட்பு' என்று குறளடிச் சொற்கள் கூறுகின்றன.

சீரிடம் காணின் என்று குறட்பா தொடங்குகின்றது. அதாவது பகைவர்கள் தீமை செய்கின்ற காலமும் இடமும் கிடைக்கும் வரையில் என்ற கருத்தினைப் புலப்படுத்தவேண்டி 'சீரிடம் காணின்' என்று வைத்தார். 'சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை—நேரா நிரந்தவர் நட்பு' என்பதே குறட்பாவாகும்.

## பட்டடை செய்யும் பணி

பொன் முதலிய பொருள்களை நசுக்கக்கூடிய கருவியின் செயலினை 'எறிதல்' என்பதாகக் கூறினார். அப்படி அக்கருவிகள் அடிக்கின்றபொழுது பட்டடை துணையாக நிற்கும். எனவே 'எறிதற்குப் பட்டடை' என்றும் அமைத்தார். பட்டடை இல்லாமல் இருக்குமேயானால் பொன் முதலிய பொருள்கள் அழிந்து ஒழிகின்ற அளவுக்கு அடிக்கும் கருவிகள் தீமை செய்து விட முடியாது.

அதுபோலவே கூடா நட்பினர் நம்மைப் பகைவர்களுக்குக் காட்டிக் கொடுக்கின்ற கொடுந்தீமையினைச் செய்யாவிட்டால் தீமை செய்ய வந்தவர்கள் அவ்வளவு

கொடிய தீமையினைச் செய்துவிட முடியாது. ஆகவே, பட்டடை பொன் முதலியவைகளைத் தாங்கிக் கொண்டிருக்கின்றதென்றால் அவைகளுக்கு நன்மை செய்வதற்காக அல்ல என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

அவைகளுக்குத் தீமை வருகின்ற நேரம் வரும் வரையில் பட்டடை தாங்கிக் கொண்டிருப்பது வெளிப்படையான உண்மையாகும். அதுவே போல மனம் திருந்தாத 'மாணார்' என்று கூறப்படுகின்ற கூடா நட்பினர் நம்முடன் நண்பர்கள்போல பழகிக் கொண்டிருப்பார்களேயானால் அச்செயலினை நமக்குத் தீமை வருகின்ற வரையில் காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்றே கொள்ளுதல் வேண்டும்.

நசுக்குபவர்கள்

'வாய்க்கும் இடம்' என்பதனைப் பட்டடையின் நிகழ்ச்சியால் தெளிவுபடுத்தினார். நசுக்குகின்ற கருவி வருவதற்கு முன்பெல்லாம் அந்தப் பட்டடை பொன்னினைத் தாங்குவது போலவே இருந்தது. ஆனால் நசுக்குகின்ற கருவி வந்தவுடனே முழுதும் நசுக்கப் படுவதற்கு அப்பட்டடை காரணமாக இருந்துவிட்டது.

இதனை மிக நன்றாக விளங்கிக் கொள்ளுதல் வேண்டும். உலக மக்களிடையே வாழுகின்ற நமக்குப் பொன்னான உண்மையினைப் பொன்னைத் தாங்கும் கருவியை வைத்தே தெளிவுபடுத்தினார்.

இக்குறட்பா 'நட்பு' என்ற சொல்லினைக் கொண்டு முடிகின்றது. இக் குறிப்பு மிகமிக சிந்திக்க வேண்டிய இடமாகும். 'கூடா நட்பினர்' நம்மிடம் பழகுவது

உள்ளத்தால் ஒத்த மனப்பழக்கம் அல்ல. உள்ளத்தால் ஒத்துப் பழகுவதையே 'நட்பு' என்று கூறுதல் இலக்கணமாகும்.

அப்படி இருக்க, கூடா நட்பினர் நம்முடன் பழகு வதையும் 'நட்பு' என்று முடிகின்ற இக் குறட்பா குறிக்கின்றது. ஆதலால் நட்பு என்று கூறப்பட்டுள்ள இச் சொல் கூடா நட்பு என்பதனைக் குறிப்பதாகும்.

நண்பர்களைப் போலக் காட்டிக் கொள்ளுகின்ற தன்மையேயாகும் என்பதை நட்பு என்பது குறித்தது. உள்ளத்தினால் ஒன்றுபட்ட நட்பு அல்ல என்பதாகும். பழகுகின்றவர்களையெல்லாம் நண்பர்களாகக் கொள்ளக் கூடாது என்கிற குறிப்பும் அமைக்கப் பட்டது.

நண்பர்களே அல்ல!

சொல்லும், பழக்கமும் ஆகிய இந்த இரண்டு மட்டும் நட்பிற்கு அடையாளம் ஆகும் என்று கொள்ளுதல் முறையாகாது. இனிமையான சொற் களைப் பேசுகின்றவர்கள் கடுமையான உள்ளத்தினைப் பெற்றிருக்கின்றார்கள் என்பதும் உலகியல் உண்மை யாகும்.

இக் குறிப்பு எல்லோருக்குமே பொருந்தியதாகக் கொள்ளுதல் கூடாது. மாணார்களாகிய கூடா நட்பி னர்களுக்கே இக்குறிப்பு பொருந்தும். பணிவு என்பது நன்மக்களுக்கே இருக்கக் கூடிய உயர்ந்த பண்பாகும். அத்தகைய பணிவு என்கிற பண்பும் மாணார்களிடம் காணப்படுமேயானால் ஐயத்திற்கு இடந்தருவதாகும். நம்புதல் கூடாது.

கொடிய எண்ணத்தினைக் கூர்மையாக்கிக் கொண்டிருப்பவர்கள் மாணார்களாவர். மாணார்களிடம் வணக்கத்தினைக் கண்டால் நாம் அஞ்சவும் வேண்டும். உள்ளத்தினால் ஒன்று படாதவர்கள் ஆனபடியால் அவர்கள்பால் காணப்படுகின்ற பணிவும் வணக்கமும் தீமைக்கே அறிகுறிகளாகும்.

பகைவர்களின் பணிவும் விளக்கமும்

தீங்கு செய்பவர்கள் பிறர் தம்மைக் கண்டு கொள்ளாதிருக்க வணக்கமான சொற்களையே பேசுதல் உண்டு. இதனை ஆசிரியர் சொல் வணக்கம் என்று குறிப்பிடுகின்றார்.

அன்பு உள்ளம் படைத்தவர்களிடம் சொல் வணக்கத்தினைக் கண்டால் பாராட்டுதல் வேண்டும். ஏனெனில் அப்பழக்கம் நட்பின் உயர்வினைப் புலப்படுத்துவதாகும். ஆனால் பகைவர்களிடம் காணப்படும் சொல் வணக்கம் தீமையினையே குறியாக வைத்திருப்பதாகும். பகைவர்களை 'ஒன்னார்' என்ற சொல் குறிப்பிட்டுக் காட்டும்.

பொதுவாக வணக்கத்திற்கும் பணிவுக்கும் மக்கள் இசைந்துவிடுதல் உண்டு. ஆதலால்தான் முன்னறிவிப்பாக அத்தகைய வணக்கத்தினை, வணக்கமான சொற்களைப் பகைவர்களிடத்தே கண்டால் நம்புதல் கூடாது என்று ஆசிரியர் கூறுகின்றார்.

வணக்கமான சொற்கள் என்பதற்கு ஆசிரியர் கூறும் காரணம் மிகவும் சிந்திக்கத்தக்கதாகும். பகை

வர்கள் இயல்பாக வணங்கிப் போகின்ற பழக்கத்தினை வைத்திருக்க மாட்டார்கள். இது உலக இயல்பு. அப்படி இருக்க வணக்கமான சொற்களைப் பகைவர்களிடம் காணுகின்றோமென்றால் மிகக் கொடிய தீமையினை அவர்கள் செய்வதற்காக இருக்கின்றார்கள் என்பதே பொருளாகும்.

**வளைவது ஏன்?**

எக்காலத்திலேயும் கொடுமையினைச் செய்யக் கூடிய செயலினை விளைவிப்பது விலலும் அம்பும் ஆகும். அம்பினை எய்வதற்கு வில்லே துணையாக நிற்கின்றது. வில்லானது அம்பினை வேகமாக விடுவதற்கு நன்றாக வளைக்கப்படுகின்றது. எவ்வளவுக்கெவ்வளவு அதிக வளைவாக வில் வளைக்கப்படுகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு வேகமாக அம்பு செல்லப் போகின்றது என்பது பொருளாகும்.

வளைந்து கொடுக்கின்ற வில் பணிந்து போகின்றது என்பது பொருளல்ல. நன்றாக சிந்தித்துப் பார்க்க வேண்டிய இடமாகும். பகைவர்களின் சொல் வணக்கமும் வில்லின் வளைவும் ஒன்றே என்பது குறிக்கப்பட்டது.

வளைந்த வில் அம்பினை விடுகின்றது. பகைவர்களின் சொல் வணக்கம் நமக்குத் தீமையை உண்டாக்குகின்றது. பகைவர்கள் மனம் குழைந்து பேசினாலும் நம்புதல் கூடாது. வில்லை வளைக்கின்றவனுடைய எண்ணத்தினை, அவன் குறிப்பை வில்லின்மேல் வைத்துக் கூறப்படுகினறது. சொல்லினை வணக்கமாகக் காட்டுகின்றவனும் வில்லினை வளைப்பவன் எண்ணத்தினையே ஒத்திருக்கின்றான்.

வில்லினை வளைப்பவன் எண்ணமும் நடக்கப் போகின்ற தீமையினையே காட்டும். சொல்லினை வணக்கமாகக் காட்டுகின்ற பகைவனது எண்ணமும் தீமையினையே குறிக்கும். ஏனென்றால் அப்படிப்பட்ட சொல் வணக்கம் பகைவர்கள் என்று கூறப்படுகின்ற ஒன்னார்களிடமிருந்து வருகின்ற காரணத்தினாலே யாகும்.

## வில்லும் அம்பும்

'சொல் வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில் வணக்கம்—தீங்கு குறித்தமையான்' — இக்குறட்பா தெளிவாகவும் விரிவாகவும் கூடா நட்பினர்களுடைய உள்ளத்தினைத் திறந்து காட்டுகின்றது. எப்பொழுதும் தீமையினையே செய்யும் என்பதை 'வில்' என்ற ஒன்றினால் அறிகின்றோம். நன்மை யினையும் தீமையினையும் கலந்து செய்கின்ற பழக்கம் வில்லினிடம் கிடையாது.

ஆதலால் எக்காலத்திலேயும் கொடுமையான தீமையினைத்தான் வில்லினை வைத்திருப்பவன் செய்கின்றான். கூடாநட்பினர் என்கிற பகைவர்களும் ஏதேனும் ஒரு காலத்தில் நன்மை செய்வார்கள் என்று எண்ணுவதெல்லாம் கூடாது. எப்பொழுதுமே தீமை யினைத்தான் செய்வார்கள். ஏனெனில், அவர்கள் மனம் திருந்தாத மாணார்களாகும். இக்குறிப்பினை வில் வணக்கத்தினால் ஆசிரியர் மெய்ப்பித்தார்.

வணக்கத்திற்குரிய சொற்கள் மட்டும் கெடுதி யினைச் செய்துவிடாது என்று எண்ணுதல் இருக்க

லாம். ஆனால் அதன் குறிப்பு நிகழப் போகின்ற தீமையான செயலினைக் குறித்துக் காட்டுவதால் வணக்கமான சொற்களையே நம்பாதேஎன்று கூறினார். இக்குறட்பாவில் 'தீங்கு குறித்தமையான்' என்ற அமைப்பு ஆழ்ந்த பொருளினைத் தாங்கிக் கொண்டிருக்கின்றது.

'சொல் வணக்கம்' என்பது கேட்பதற்கும் பழகுவதற்கும் இனிமையாக இருக்கும். ஆனாலோ பகைமை நிறைந்த உள்ளத்தார்களிடமிருந்து வருதலால் அவைகள் தீங்கினையே குறிக்கும்.

பார்ப்பதற்கு அழகிய தோற்றம், நஞ்சு போன்ற தீய முடிவிற்குக் காரணமாக இருத்தலும் உண்டு. ஆதலால்தான் மக்களை நல்லவர் கெட்டவர் என்று கணக்கிடுவதற்கு அவரவர்களின் நல்லதும் கெட்டதுமான செயல்களையே அளவுகோலாக உலகம் வைத்துக் கொண்டிருக்கிறது.

நற்செயல், தீய செயல் என்பவைகளெல்லாம் உள்ளத்தின் தன்மையினையே பொறுத்திருப்பதாகும். பார்ப்பதற்குச் சிலர் நன்றாக இருப்பார்கள். ஆனால் அவர்கள் செய்கின்ற செயலோ கொலை பாதகமான செயலாக இருக்கலாம்.

## தவவேடம் தாங்கியவர்கள்

தவவேடம் தாங்கிய பலரைப் பார்க்கின்றோம். ஒழுக்கத்திலே தாழ்ந்தவர்களாக இருக்கின்றார்கள். எதையுமே தோற்றத்தினைக் கண்டு முடிவு செய்தல் கூடாது, என்கின்ற உண்மையினைத் தக்க இடத்தில்

சிறந்த பொருளினை விளக்கவேண்டிய முறையில் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

வெளி வேடத்தினால் தீமை செய்கின்ற பலரினும் தவ வேடம் தாங்கிக் கொடுமை செய்கின்றவர்களை ஆசிரியர் வன்மையாகக் கண்டிக்கின்றார். தவவேடம் தாங்கியவர்களை நம்புகின்ற பழக்கம் மக்களிடையே இயல்பாக இருந்து வருகின்றது.

அவ்வேடதாரிகளை நெருங்கவும் அவர்களுடன் பழகவும் மக்கள் பெரும்பாலும் விருப்பம் கொள்வார்கள் என்பதும் இயல்பேயாகும்.

## நல்ல வேடம்!

ஆண், பெண், குழந்தைகள் எனப்படுகின்ற அனைவருமே தவவேடம் தாங்கியவர்களிடம் அன்புடனும் பணிவுடனும் பழகுவதுண்டு. இவ்வளவிற்கும் காரணமாக இருப்பது அந்த வேடமேயாகும். ஆதலால்தான் வெளித் தோற்றத்தினைக் கண்டு மயங்குதல் தவறு என்று கூறுகின்ற ஆசிரியர் குறிப்பாகத் தவவேடம் தாங்கியவர்களை எடுத்துக் காட்டுகிறார்.

அழுக்கு நிறைந்த மனமுள்ளவர்களும் தீய செயல்களைப் புரிவோர்களும் தவவேடத்தினைத் தாங்கிக் கொள்வதைப்பாதுகாப்பாகவும் கொண்டிருக்கின்றனர். ஆதலால் யாரையும் அவரவர்களின் செயல்களைக் கொண்டே மதித்தலும் அளவிடுதலும் வேண்டும்.

தோற்றத்தைக் கண்ட மாத்திரத்திலேயே நேர்மையானவர்கள் என்றும் கோணல் மனம் படைத்தவர்கள் என்றும் எண்ணிவிடுதல் கூடாது; பார்ப்பதற்குப் பித்தர்களைப்போல சிலர் காணப்படுவார்கள். ஆனால்

அவர்கள் அறத்தினையே செய்கின்ற உண்மையான தவத்தினராகவும் இருப்பார்கள்.

அப்படிப்பட்டவர்களுக்கு எவ்விதமான வேடமும் இருக்காது. பார்ப்பதற்குக் கவர்ச்சியான தோற்றமும் இருக்காது. எனினும், அவர்கள் அறச் செயலைச் செய்வதனால் உயர்ந்த தவத்தினா என்று கருதப் படுதல் வேண்டும்.

கணையும் யாழிசையும்

கணை என்று சொல்லப்படுகின்ற அம்பானது பார்ப்பதற்குக் கோணல் இல்லாமல் நேராகவும் ஒழுங் காகவும் இருக்கின்றது. நேராகவும் ஒழுங்காகவும் இருப்பதனால் அந்த அம்பு நேர்மையான, ஒழுங்கான செயலைத்தான் செய்கிறது என்று யாரும் சொல்ல மாட்டார்கள். உயிரையே கொல்கின்ற கொடிய செயலினையல்லவா அந்த அம்பு செய்கின்றது?

யாழ் என்று கூறப்படுகின்ற வீணை தோற்றத்தி னால் பல கோணல்களைக் கொண்டதாய்க் காணப்படு கிறது. அதனிடம் வளைவுகள் அதிகமாக இருக் கின்றன. ஆனால் அந்த வீணை எனப்படுகின்ற யாழ் கடுகளவேனும் கோணலான செயல்களைச் செய்வ தில்லை.

அது செய்வதோ இனிமையான செயலாகும். அருமையான இசையின்பத்தினை யாழ் அளிக் கின்றது. யாழினுடைய வளைவான தோற்றத்திற்கும் இன்னிசை தருகின்ற செயலுக்கும் சம்பந்தமில்லாம லிருப்பதைக் காணுகின்றோம்.

### வடிவமும் செயலும்

கணையினையும் யாழினையும் நம்முன் வைத்துக் கொண்டு பார்ப்போமேயானால் தோற்றம் என்கின்ற வடிவங்களும் செயல்களும் எவ்வளவு மாறு பட்டிருக்கின்றன் என்பது நன்கு தெளிவாகின்றது. 'யாழ் கோடு செவ்விது' என்று சொற்களை ஆசிரியர் அமைக்கின்றார். யாழ் எனப்படுகின்ற வீணையானது வடிவத்தாலே வளைவாக இருந்தாலும் செயலினாலே செவ்வியதாக நன்மை பயக்கின்றது.

கணை எனப்படுகின்ற அம்பானது வடிவத்தாலே நேராகக் காணப்பட்டாலும் செயலினாலே கொடியதாக இருக்கின்றது. 'கணை கொடிது யாழ்கோடு செவ்விது' என்று தொடங்கப் பெறுகின்ற குறட்பா மிகச் சிறந்த உலகியல் உண்மையை நமக்கு அளிக்கின்றது.

இந்த இரண்டு பொருள்களையும் வைத்துக் கொண்டு உலக உண்மையினை ஆசிரியர் கூறுகின்றார். அவரவர் செய்கின்ற செயல்களைக் கொண்டே பகுத்துப் பார்த்து அறிந்து தெரிந்து கொள்ளுதல் வேண்டும். தோற்றத்தைக் கண்டு மயங்குதல் கூடாது.

### தூய்மைத் தோற்றம் போதாது!

தூய்மையுடையவர்கள் அணியவேண்டிய தோற்றத்தினைத் தூய்மையில்லாதவர்கள் அணிந்திருத்தல் கூடும். அந்தத் தோற்றத்தைக் கொண்டே மனமும் ஒழுக்கத்திற் சிறந்ததாக இருக்குமென்று சொல்லுதல் கூடாது.

ஒருவரை அவரது செயல் இருக்கின்ற தன்மையினாலே பகுத்துப் பார்த்து அறிதல் வேண்டும்

என்பதனை 'வினைபடுபாலால்' என்ற குறிப்புச் சொற்களினால் ஆசிரியர் மெய்ப்படுத்துகின்றார்.

அவரவர்களை அறிந்து கொள்ள வேண்டிய முறையும் இதுவேயாகும் என்பதை வற்புறுத்திக் கூறுகின்றார். 'கணை கொடிது யாழ் கோடு செவ்விதாங்கன்ன—வினைபடு பாலாற் கொளல்' இக் குறட்பா கணையும் யாழும் எவ்வாறு தங்கள் தோற்றத்தினாலும் செயல்களினாலும் மாறுபட்டிருக்கின்றனவோ அவ்வாறே உலகமக்கள் தோற்றத்தினாலும் செயல்களினாலும் மாறுபட்டிருக்கின்றார்கள் என்பது விளக்கப்பட்டுள்ளது.

## செயல்களைக் கண்டு சிந்திக்கவேண்டும்

ஆதலால்தான் அந்தப் பொருள்களைப் போலத்தான் உருவம் தாங்குகிறவர்களும், உருவம் தாங்காதவர்களும் இருக்கின்றார்கள் என்பதை 'ஆங்கு அன்ன' என்ற குறட்பாவின் சொற்கள் தெளிவு படுத்திவிட்டன.

செய்கின்ற செயலினை 'வினை' என்னும் செயலினைக் கொண்டே—அவர்கள் செய்கின்ற செயல்களைக் கொண்டே பாகுபடுத்திப் பார்க்க வேண்டும் என்பதனை 'வினைபடுபாலாற் கொளல்' என்று முடிகின்ற குறட்பாவின் சொற்கள் தெளிவு படுத்திவிட்டன.

வேடம் தாங்கிகள் செய்கின்ற ஒழுக்கமற்ற செயல்கள் மிக மிகக் கொடுமையானவைகளாக இருந்துவிடுகின்றன என்பதற்காகத்தான் கணை என்பதனை

உவமையாகக் காட்டினார். உலக வாழ்க்கை என்பது மிகவும் விழிப்புடன் நடந்து கொள்ள வேண்டியதாகும் என்பதற்கு இக் கருத்து நல்ல எடுத்துக்காட்டாகும்.

அறத்தைச் செய்பவர்களைச் செவ்வியர் என்று கூறுதல் வேண்டும்; அதுவே போல இன்பத்தைச் செய்கின்ற யாழினது செயலும் செவ்விது என்று கூறப்பட்டது. கூடா ஒழுக்கம் உடையவர்கள் கொடியவர்களென்று கூறப்படுவர்.

மதிக்கப்படவேண்டியது செயலேயன்றி தோற்றம் அல்ல. வேடத்தினால் மதிப்பினைப் பெறுதல் என்பது அறிவுடைமையாகாது. உலகில் உயர்ந்தவர்கள் தாழ்ந்தவர்கள் என்று பேசப்படுவதைக் காணுகின்றோம். உயர்வும் தாழ்வும் கணக்கிடப் படுதல் வேண்டுமென்றால் அதற்குரிய வழியினை ஆசிரியர் எளிமையாகக் கூறுகின்றார்.

## பெருமைக்கும் சிறுமைக்கும் இலக்கணம்

பெருமையுடையவர்கள் அல்லது சிறுமை யுடையவர்கள் என்பதை அறியச் சாதனம் ஒன்றினை ஆசிரியர் குறிப்பிடுகின்றார். அந்தச் சாதனம்தான் அவரவர்கள் செய்கின்ற செயலேயாகும். ஒழுக்கத்தில் சிறந்த மக்கள் பண்பாட்டிற்கு ஏற்ற செயல்களைச் செய்தால் அவைகள் பெருமையினைத் தரும்.

இவைகளுக்கு மாறாக நடந்து கொண்டால் அது சிறுமையாகும். ஆதலினால் செயலினைக் கொண்டு

தான் அளந்து பார்த்தல் வேண்டும். ஒருவர் செய்கின்ற தொழிலினைக் 'கருமம்' என்று கூறுதல் மரபு.

ஒருவர் அந்தக் கருமம் செய்கின்றார் என்றால் அவர் எப்படிப்பட்ட செயலைச் செய்கின்றார் என்பதே பொருளாகும். 'கருமம்' என்பது ஒழுக்கத்தினையும் மனிதப் பண்பாட்டினையும் எடுத்துக் காட்ட எழுந்த சொல்லாகும். மனிதப் பிறவி எடுத்தவர்கள் செய்ய வேண்டிய 'கருமம்' அல்லது தொழில் என்பதற்கு அளவு உண்டு.

## செயல்களே அளவுகோல்

மனிதப் பிறவிக்கு அடாத தொழிலையும் ஒழுக்கம் குறைந்த செயலினையும் அவர்கள் செய்தல் கூடாது. செய்யும் தொழிலினை அளவுகோலாகக் கொள்ளாமல் மற்றவைகளைக் காரணங்களாகக் கொண்டு உயர்வும் பெருமையும் தேடிக்கொள்ள எண்ணுபவர்களும் உண்டு. அப்படி எண்ணுவது தவறாகும்.

'கருமமே' என்ற சொல்லினை ஒரு குறட்பா பெற்றிருக்கின்றது. இச் சொல்லில் ஏகாரம் கூறப்பட்டிருப்பதைச் சிந்தித்தல் வேண்டும். கருமம் என்று மட்டும் கூறாமல் 'கருமமே' என்று கூறியதால் தனிச்சிறப்பு விளக்கப்பட்டது.

பெருமையைத் தேடுபவர்கள் பெருமையான ஒழுக்கம் சிறந்த செயல்களைக் கொண்டுதான் அப் பெருமையினைத் தேடுதல் வேண்டும். வேறு எதுவும் பெருமைக்குக் காரணமாக இருக்க முடியாது. அதுவே போன்று ஒழுக்கம் குறைந்த தொழில்கள்தான் காரணமாகும்.

பொருளினைக் கொண்டு மட்டும் பெருமை சிறுமை யினைக் காட்டுதல் கூடாது என்பதும் குறிப்பால் உணர்த்தப்பட்டது. கருமமே என்று கூற வந்த ஆசிரியர் தம்தம் 'கருமமே' என்றும் குறித்துக் காட்டினார்.

மற்றவர்கள் செய்கின்ற செயலைக் கொண்டோ 'உறவின் முறையார் செய்கின்ற செயலைக் கொண்டோ பெருமை சிறுமையினை ஒருவன்பால் கண்டு கொள்ளுதல் கூடாது'. அவரவர்கள் செய்கின்ற செயல்கள்தான் அவரவர்களின் பெருமைக்கும் சிறுமைக்கும் காரணமாக இருத்தல் வேண்டும்.

## உரைகல்

'உரைகல்' என்பது ஒன்று உண்டு. இதனையே கட்டளைக்கல் என்றும் சொல்லுவார்கள். பொன்னின் தன்மையினை அல்லது மாற்றினை அறிய வேண்டு மானால் அப்பொன்னினை உரைகல்லில் உரைத்துப் பார்க்கவேண்டும். அந்தப் பொன்னின் தன்மையினை எடுத்துரைப்பதால் அதற்கு உரைகல் என்ற பெயரும் வந்தது. இதனைத்தான் 'கட்டளைக்கல்' என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

குணநலன்களை அறுதியிட்டுக் கூறுவதால் 'கட்டளைக்கல்' பயன்பட்டது. இக்கட்டளைக் கல்லின் அருமையினை நன்கு புரிந்துகொள்ளுதல் வேண்டும். இந்த உரைகல் இல்லையென்றால் சிறப்பான பொன் எது என்று அறிதல் முடியாது. பொன்னைப் போன்று தோற்றமளிக்கின்ற மற்றவைகளைக் கண்டு ஏமாற்ற

மடைதலும் உண்டாகிவிடும். ஆகையினால் உரைத்துப் பார்த்தல் என்பதுதான் பொருத்தமான வழியாகும்.

இக்கருத்தினை ஆசிரியர் வள்ளுவனார் கூறி விளக்குகின்றார் என்றால் ஆழ்ந்து சிந்திக்கத்தக்க உண்மையினை நாம் அறிந்து விடுதல் வேண்டுமென்பதாகும். ஒருவருக்குப் பெருமையினையோ அல்லது சிறுமையினையோ கொடுக்க வேண்டுமென்றால் அதற்குக் கட்டளைக்கல் போல் இருப்பது அவரவர் செய்கின்ற செயலேயாகும்.

## நற்செயல்கள் புரிக

'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக் கல்' இக் குறட்பா மிகத் தெளிவாக நல்லதோர் உண்மையினை உரைக்கின்றது.

உரைகல் இல்லையென்றால் பொன்னின் தன்மையினை அறிவதற்கு வேறு வழியில்லை என்று கூறுதல் மிகையாகாது. அதுவே போல ஒருவருடைய செயல்களை நாம் அறிகின்ற வாய்ப்பு நமக்கு இல்லையென்றால் அவர்களுக்குப் பெருமையினையோ அல்லது சிறுமையினையோ நாம் கணக்கிட்டுக் கொடுத்தல் முடியாததாகும்.

உலகில் வாழும் மக்கள் ஒழுக்கமும் பண்பாடும் நிறைந்தவர்களாக இருத்தல் வேண்டும் என்கின்ற உண்மைக்கு இக்குறட்பா வழிவகுத்துக் காட்டுகின்றது. ஒருவரைத் தெரிந்து தெளிந்து அறிதல் வேண்டும் என்பதற்கு இதுதான் முறையானதாகும். கருமமும் கட்டளைக் கல்லும் ஒன்றுசேர எண்ணப்பட வேண்டிய கருத்தினைப் புலப்படுத்துகின்றன.

கட்டளைக்கல் குணத்தினையும் குற்றத்தினையும் எடுத்துக் காட்டும் — நல்லது அல்லது கெட்டது, உயர்ந்தது அல்லது தாழ்ந்தது என்கின்ற தன்மைகள் அனைத்தையும் கட்டளைக்கல் காட்டி விடுகின்றது. அதுவே போன்று செய்கின்ற செயல்களும் பெருமை சிறுமை ஆகிய இரண்டினையும் காட்டிவிடும்.

கருமம் செய்வதை முதன்மையாகக் கொண்டு மக்கள் வாழ்க்கையினை அளந்து பார்க்கின்ற முறைமை கூறப்படுதலால் இவ்வுலக வாழ்வும் செயலாற்றும் தன்மையினால்தான் அமைக்கப்படுகிறது என்பது அறியப்படுகின்றது.

செயல் புரியாத மக்கள் முன்னேற்றம் காணுதல் இயலாது. செயல் நிறைந்த நாடு முன்னேற்றம் காணும். ஆகவே எல்லாவற்றிற்கும் செய்தொழிலே முதன்மையானதாக வைத்துக் கருதப்படுதல் வேண்டும் என்கின்ற விரிவான கருத்து குறட்பாவினுள் அமைந்து கிடக்கக் காணுகின்றோம்.

## பொன்னான அரிய குணமே நாணம்

நாணம் என்கின்ற குணம் மக்கட் பிறவிக்குச் சிறப்பாக அமைந்துள்ள பண்பாகும். ஆண் பெண் இருபாலாருக்கும் நாணம் என்பது பொதுவாக இருக்க வேண்டிய பண்பாகும். நாணம் என்கின்ற குணம் பெண்களுக்கு மட்டுமே இருத்தல் வேண்டுமென்றும் ஆண்களுக்கு இருக்கத் தேவையில்லை என்றும் கூறுவோரும் உண்டு.

இவ்வாறு கூறுதல் தவறாகும். நாணம் என்பதனை எவ்வெப்பொழுது ஆடவரும் மகளிரும் கொள்ளுதல் வேண்டும் என்ற உண்மையினை ஆசிரியர் வள்ளுவனார் தெளிவுபடுத்தி விளக்குகின்றார்.

பெண்களுக்கு இருக்க வேண்டிய எல்லா முறைகளிலும் ஆண்களுக்கும் நாணம் இருக்கத் தேவையில்லை. ஆண்களுக்கு ஒரே ஒரு முறையில் நாணம் எனபது கூறப்படுகின்றது. எக்காலத்திலேயும எக்காரணம் பற்றியும் ஆண்களுக்கு நாணம் இருத்தல் கூடாது என்று பொதுப்பட நிலவி வரும் கருத்து பொருத்தமற்றதாகும்.

## ஆண்களுக்கு நாணம்

நாணம் என்பது இல்லையென்றால் ஒழுக்கம் கெட்ட எத்தொழிலையும் செய்வதற்கு முறபடுவார்கள். ஆண்களுக்குச் செயல் புரிகின்ற தன்மையில் மட்டும் நாணம் இருத்தல் வேண்டும். பழிக்கு ஆளாகும் இழிதொழில்களைச் செய்தல் கூடாது. பழிக்கு அஞ்சுதல எல்லோருக்கும் இருக்க் வேண்டிய உயாந்த பண்பாகும். ஆண்கள் கருமம் செய்வதில் அதாவது செயல் புரிவதில் நாணம் என்பதனை முன் நிறுத்திப் பார்த்தல் வேண்டும.

ஆதலால கருமத்தால் நாணுகின்ற பழக்கத்தினை ஆடவர்கள் பெறறிருத்தல் வேண்டுமென்பது ஆசிரியரின் குறிப்பாகும். மறறவைகளிலெல்லாம் ஆண்கள் நாணத்தினைக் கொண்டிருத்தல் கூடாது. எல்லா வகையிலும் ஆண்கள் நாணம் என்பதனை மேற்கொண்டிருந்தால் அது பெண்கள் தன்மையாகும்.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் பல் துறைகளிலும் வேறுபாடுகள் உண்டு என்பது உலகம் அறிந்த

உண்மையாகும். ஆதலால் பெண்கள் கொள்ள வேண்டிய நாணம் பல இடங்களிலும் பல நிகழ்ச்சி களிலும் குறிப்பாக இருத்தல் வேண்டும். அவ்வாறு ஆண்களுக்கு இருத்தல் கூடாது.

ஆண்களுக்கு நாணம் இருத்தல் வேண்டுமென்று கூற வந்த ஆசிரியர் 'கருமத்தால் நாணுதல் நாணம்' என்பதாகக் குறட்பாவில் குறித்தார். செயல் புரிகின்ற பொழுது பழிப்புக்கு ஆளாகும் செயலாக இருந்து விடுமோ என்ற அச்சம் இருத்தல் வேண்டும். இந்த அச்சத்தினை நல்ல முறையில் உண்டாக்குவது நாணம் என்கின்ற உயர்ந்த பண்பாகும்.

### பெண்கள்—நாணம்

ஆதலால்தான் கருமத்தினால் அதாவது செயல் செய்வதில் நாணத்தினை மேற்கொள்ள வேண்டு மென்று கூறுகிறார். கருமத்தால் என்ற சொல்லினைக் கொண்டே குறட்பா தொடங்கப் பெறுகின்றது. ஆண் களில் பலர் பெண்மைத் தன்மை கொண்டவர்கள் போல வாழ்க்கையில் எல்லாவற்றிலுமே நாணம் கொண்டவர் களாகக் காணப்படுவார்கள். அத்தன்மை தவறானது என்பதை வற்புறுத்த வேண்டியே 'கருமத்தால் நாணுதல்' என்று குறிப்பாக வைத்தார்.

பிறவற்றில் நாணம் கொள்வார்களேயானால் அது பெண்மைத் தன்மை போன்றதாகும் என்பதையும் சுட்டிக்காட்ட வேண்டியே 'திருநுதல் நல்லவர் நாணுப் பிற' என்று குறட்பாவினை முடித்தார். அழகிய நெற்றியினையுடையவர்கள் எனபதை 'திருநுதல்' என்பதும் அத்தன்மையையுடைய நல்ல குல மகளிர் என்பதை 'நல்லவர்' என்ற சொல்லும் தெளிவுபடுத்தின.

ஆடவர்க்கும் மகளிர்க்கும் இருக்க வேண்டிய நாணங்களின் வேறுபாட்டினைப் 'பிற' என்ற சொல் குறித்தது.

## ஆடவரும், மகளிரும்

எண்ணத்தினாலும் சொல்லினாலும் உடம்பினாலும் குறிப்பாக இருக்க வேண்டிய நாணம் நல்ல மகளிர்பால் இருக்க வேண்டியதாகும். நல்லவர் என்று குலமகளிரையே குறித்தார். ஏனென்றால் 'பொது மகளிர்' என்று கூறப்படுகின்ற விலைமாதரிடம் நாணங்கள் இருத்தல் காணப்பட முடியாததாகும். பொது மகளிரிடம் நாணம் என்பதனை எதிர்பார்த்தலும் கூடாது. நாணம் என்பது பொது மகளிர்க்குக் கெடுதி உண்டாக்குதலும் ஆகும். ஆதலால்தான் நல்ல குல மகளிரைக் குறிக்க வேண்டி நல்லவர் என்று கூறினார்.

இவ்வுண்மையினைக் 'கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்—நல்லவர் நாணுப் பிற' என்ற குறட்பா விளக்கமாகக் கூறுகின்றது. ஆடவர்களுக்கு நாணம் என்பது இழிந்த செயல்களைச் செய்ய நாணுதல் ஆகும்.

அவ்வாறன்றி எல்லாவற்றிலுமே அவர்கள் நாணம் கொள்ளுவார்களேயானால் அது மகளிர்க்குரிய தன்மையினை எடுத்துக் காட்டும். நாணம் உடைமை என்பதைச் சிறப்பான ஒரு பண்பாக மிக விளக்கத்தோடு ஆசிரியர் கூறுவது சிந்திக்கத்தக்கதாகும்.

## குலமகளிர்

கருமம் செய்தல், அதாவது செயல் புரிதல் என்பது எத்தகைய மேன்மையானதாகும் என்பதை இக்குறட்பா கூறுகின்றது. செயல் புரியாத மக்கள் சிறந்து வாழ்தல் முடியாததாகும். நாணத்தினை மேற் கொள்ளாத மக்கள் இழிதொழில் செய்யவும் முற்படுவர் என்பது குறிப்பாகும்.

நாணமில்லாமல் தொழில் புரிகின்ற மக்கள் மனம் போன போக்கில் எல்லாம் செயல் புரிவார்களாதலால் மனிதப் பிறவிக்குக் கீழான பிறவிகளின் தன்மையினை அடைவர் என்பதாகும். குலமகளிர் வேறு விலை மகளிர் வேறு என்பதனைப் பிரித்துக் காட்டவே 'திரு நுதல் நல்லவர்' என்று குறட்பாவில் அமைத்தார்.

நாணம் உள்ளவர்கள் பொதுவாகவே நல்லவர் களாக இருப்பார்களென்பது பொதுப்படையான உண்மையாகும். கருமம் செய்தல் என்பது தன்னையும் சுற்றத்தினையும் உயர்த்திக் கொள்ளும் நிலையில் ஒருவனை நிறுத்துவதாகும். செயல்புரிவதை என்றும் கைவிடமாட்டேன் என்று கூறுகின்ற பெருமைதான் நன்மகனுக்கு அடையாளமாகும்.

## முயற்சியே பெருமை

அப்படி நினைக்கின்ற முயற்சிப் பெருமையினைப் போல் மேன்மையுடைய பெருமை வேறெதுவுமே இல்லை. எண்ணுதல், சொல்லுதல், செயல்படுதல் என்கின்ற முறைகள் உண்டு. அவைகளில் செயல் படுதல் என்பதுதான் மக்களை முன்னேற்றமடையச் செய்யும் ஊன்றுகோலாகும்.

செயல்படுகின்ற பொழுது பல இடையூறுகள் குறுக்கிடுதல் உண்டு. ஆதலால் செயல்புரிவதைக் கைவிடமாட்டேன் என்று கூறும் பெருமை சிறப்பிக்கப் பட்டது. முயற்சி என்பது முடிவில் பெருமையினை அளிக்கும்.

ஆகையால் முயற்சியே பெருமை என்று கூறப் படுகின்றது. அப்பெருமையினைவிட சிறந்தது வேறு எதுவும் இல்லை என்பதாகும். 'கருமம் செய ஒருவன் கைதூவேன்" என்பதாகக் குறட்பா எடுத்துக் கூறி தொடங்கப் பெறுகின்றது.

ஒருவன் செயலினை மேற்கொள்ளுவானேயானால் அச்செயல் அவனுக்கு மட்டுமேயன்றிப் பிற குடி மக்களுக்கும் உயர்வைத் தருவதாகும். ஆதலால்தான் கருமம் செயப் புகுந்தவன் மிகப் பெரியவனாகக் கருதப்படுகின்றான்.

## கைவிடமாட்டேன்

எவ்விதமான இன்னல்கள் வந்தாலும் — இடையூறுகள் நேரிட்டாலும் தான் கொண்ட செயலினைக் கைவிடவே மாட்டேன் என்கிற உறுதிப்பாட்டினைக் 'கை தூவேன்' என்ற சொல் விளக்குகின்றது. அத்தகைய பண்பு நிறைந்த மக்கள் அரிதாக இருப்பார் களானபடியால் இத்தகைய பண்பாளர்கள் சிறப்பிக்கப் படுதல் வேண்டும்.

கருமம் செய்தல் என்பது பெருமுயற்சியினால் எழுகின்ற எண்ணமாகும். ஆதலால்தான் இவ்வாறு கூறப்படுகின்ற பெருமையினைவிடச் சிறந்த பெருமை வேறு எதுவுமே இல்லையென்று குறட்பா

கூறுகின்றது. 'கருமம் செய ஒருவன் கைதூவேன் என்னும்—பெருமையில் பீடுடையது இல்.'

இக்குறட்பாவில் முயற்சியினைப் 'பெருமை' என்ற சொல் குறிக்கின்றது. முயற்சியைப் பெருமைஎன்ற சொல் குறித்தது முயற்சியே பெருமைக்கு அடிப்படையானதாகும் என்பது குறிப்பு. இக்குறட்பா 'பீடுடையது இல்' என்று முடிகின்றது.

கைவிடமாட்டேன் என்று கூறுகின்ற பெருமையினைவிட மேம்பாடுடைய பெருமை அவனுக்கு வேறு எதுவுமே இல்லை என்பதாகும். முயற்சியில்லாதவர்கள் 'பீடு அடைதல்' முடியாததாகும். மன உறுதி இல்லையென்றால் கருமத்தினைத் தொடர்ந்து செய்தல் அரிதாகும்.

## முயற்சியே உயர்ச்சி

சொல்லுதல் யார்க்கும் எளிதானதாக இருக்கலாம். ஆனால் செயல்படுதல் என்பது எளிதானதாக இருக்க முடியாது. அவ்வாறு செய்யப்படுகின்ற பொழுது வருகின்ற துன்பங்களைத் தாங்கிவிடாமல் தொழில் செய்வது அரிதிலும் அரிதாகும். ஆதலால்தான் 'கைதூவேன்' என்கின்ற எண்ணம் சிறப்பிக்கப்பட்டது.

செல்வமும் புகழும் கருமம் செய்தலினால்தான் அடைதல முடியும்; அச்செயல் தனக்கும் சுற்றத்திற்கும் உயர்வினைத் தரும். ஆதலால் 'அரிதிலும் அரிது' என்று சொல்வதைப்போலப் 'பெருமையிலும் பெருமை' என்று கூற வேண்டியே 'பெருமையிலும் பீடுடையது' என்று அமைத்து வைத்தார்.

தொழிலினை மேற்கொண்டு செய்தல் மிகுதியும் போற்றப்படுவதாகும். தொழில் செய்தல் என்பது 'மனத்திட்பம்', 'வினைத்திட்பம்' என்ற இப்படிப்பட்ட பலவித நுட்பங்களைக் கொண்டதாகும்.

## இன்பமும் துன்பமும் இரண்டும் இயல்பே!

முடிவில் இன்பத்தைத் தரக்கூடிய தொழில்கள் முதலில் துன்பத்தினைத் தருதலும் உண்டு. செயல் பட்டுத் தொழில் புரிகின்றபொழுது இடையூறுகள் வராமலிருக்குமென்று சொல்லிவிடமுடியாது. ஆதலால் தான் தொழில் புரிபவர்கள் துணிவு மிகுதியாகக் கொண்டிருத்தல் வேண்டும்.

துணிவு என்பது பலர்பால் காணமுடியாததாகும். ஆதலால்தான் துணிவு பெற்றவர்களைப் போற்றுதல் வேண்டும். அத்துணிவுடன் செயல் புரிபவர்களை மிகுதியும் பாராட்டிப் போற்றுதல் வேண்டும்.

இன்பத்தினைத் தருகின்ற செயல்களையே செய்தல் அறிவுடையோர் செயலாகும். ஆதலால் அறிவு நிறைந்தவர்களே செயலில் ஈடுபடுவார்களென்பதும் குறிப்பாகும். துன்பத்திற்கு அஞ்சுபவர்கள் செயல் புரிதல் முடியாது; பல நேரங்களில் தொழிலினை மேற் கொண்டு நடக்கும் பொழுது தொடர்ந்த முறையில் துன்பம் வருதலும் உண்டு.

அப்பொழுதெல்லாம் மனம் கலங்குதல் கூடாது. எக்காரணத்தினாலும் மனம் கலங்காமல் வலிமையுடன் செயல் புரிதல் வேண்டும் என்ற கருத்தினை 'துணிவு ஆற்றி' என்ற சொற்களினால் கூறுகின்றார். நல்ல முறையிலே செய்யப்படுகின்ற தொழில்கள் இன்பத்தினைக் கொடுக்கும்.

துணிவு இன்பம் தரும்

ஆதலால் இன்பம் பயக்கும் வினைகளைத் துணிந்து செயற்படுத்துதல் வேண்டும். துன்பத்தினைத் தருகின்ற வினைகள் நிறைந்த இன்பத்தினைக் கொடுக்கும். ஆதலால், இன்பத்தினைக் கொடுக்கும் தொழில்களையே மனத்திட்பமும் வினைத் திட்பமும் கொண்ட மக்கள் செய்வார்கள்.

தொழிலை மேற்கொண்டு செய்கின்ற பொழுது மாறுபட்ட எண்ணங்கள் கொண்டவர்களாலும் பகைவர்களாலும் பிற சூழ்நிலைகளாலும் துன்பங்கள் வரும். அத்துன்பங்கள் தொடர்ந்து வருதலும் உண்டு.

'துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி— இன்பம் பயக்கும் வினை' என்று அமைக்கப்பட்டுள்ள குறட்பா மிகச் சிறந்த நுட்பமான பல திறப்பட்ட பேருண்மைகளைக் கொண்டுள்ளது.

முயற்சியிடையே ஏற்படும் துன்பம் சிறிது காலத்திலேயே நீங்கிவிடுவதாகும். அதனால் கலக்கம் அடைதல் கூடாது. நிலைபெற்று வருகின்ற இன்பத்தினை நோக்கியே செயல் புரிதல் வேண்டும். ஆதலால்தான் 'துணிவாற்றிச் செய்க' என்று வற்புறுத்திப் பேசினார். இக்குறட்பாவில் 'உற' என்ற சொல்லினைச் சிந்தித்தல் வேண்டும்.

சில நேரங்களில் துன்பங்கள் மீண்டும் மீண்டும் வருதல் உண்டு. அப்படி வந்தாலும் கலங்குதல் கூடாது. ஆதலால்தான் 'உறவரினும்' என்றும் குறிப்பிட்டார். இவைகளுக்கெல்லாம் மனத்திட்பம் மிகவும் தேவையென்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

மனத்திண்மையே உறுதியாகும்

மனஉறுதி என்று கூறப்படுகின்ற மனத்தின் திண்மை எக்காலத்திலும் கலக்கத்தினை நீக்கி மனத் தளர்ச்சியினைப் போக்கும். மனம் தளர்ச்சியடையாமல் இருந்தால் மேலும் மேலும் மன எழுச்சியுண்டாகும். மனஎழுச்சியும் மனத்திட்பமும் தளர்ச்சியடையாத நிலையினை நிலையுறுத்தும்.

எண்ணிய பெருமைக்கும் சிறப்பிற்கும் அழிவு வந்த காலத்திலும்கூட மன எழுச்சியுடையவர்கள் தம்முடைய பெருமையினை நிலைநிறுத்திக் காட்டு வார்கள். அப்படிப்பட்டவர்களுக்குத்தான் மனத்தில் உரம் சிறந்து விளங்கும். உரம் சிறந்து விளங்குபவர் களை 'உரவோர்' என்று குறிப்பிடுவோம். 'மனஉரம்' என்பதுதான் மனத்தில் இருக்கின்ற ஊக்கம் என்ப தாகும். ஊக்கமில்லாதவர்கள் எக்காலத்திலும் சிறப்படைய மாட்டார்கள்.

வாழ்க்கையில் கெடுதல் வருகின்ற காலங்கள் உண்டு. அப்படிப்பட்ட காலங்களில் தளர்ச்சியடையாத பண்பினை 'உரம்' என்று கூறப்படுகின்ற 'மன ஊக்கம்' கொடுத்தே தீரும்.

யானையினிடம் காணப்படுகின்ற சிறந்த குணங் களில் ஒன்று தளர்ச்சியடையாமல் பெருமையினை நிலைநிறுத்துவதாகும். அம்பினால் தாக்கப்பட்டுப்புண் பட்ட காலத்திலும் யானையானது தளர்ச்சியடையாமல் பெருமையினை நிலைநாட்டி நிலைத்து நிற்கும்.

யானையிடம் காணும் சிறப்பான பண்பு

இச்சிறப்பான பண்பு யானையிடம் இருப்பதாகும். பெருமையினை நிலைநிறுத்துவதைக் குறியாகக் கொண்டிருப்பது யானையாகும். கட்டாகிய அம்பி னால் நிறையப் புண்பட்டுவிட்டதே என்று களிறு மனத்தளர்ச்சியடைந்து மயங்கி ஓடிவிடாது.

களிறு என்பது யானையாகும். நினைத்த எண்ணத்தினை நிலைநிறுத்த யானை முயன்று நிற்கும். இக்கருத்தினை, 'புதையம்பில் பட்டுப்பாடு ஊன்றும் களிறு' என்று முடிகின்ற குறட்பா ஒன்று எடுத்து இயம்புகின்றது.

கொடுமையான துன்பம் உண்டாகின்றது என் பதனைப் புதையம்புபட்ட காலத்திலும் என்பதால் உணர்த்தப்பட்டது. அப்படிப்பட்ட துன்பமும் யானைக்கு மனத்தளர்ச்சியினை உண்டாக்கிவிடாது. அப்படிப்பட்ட காலத்திலேயும் யானை தளர்ச்சியடை யாமல் பெருமையினையே நிலை நிறுத்தும் என்ற கருத்தினை 'பாடு ஊன்றும்' என்ற சொற்களால் ஆசிரியர் அமைத்துக் காட்டினார்.

எடுத்த காரியத்தினைத் தவறாமல் முடிக்க வேண்டும் என்கிற உறுதிப்பாடு குறிப்பால் உணர்த்தப் பட்டது. அம்பு பட்ட உடனே அஞ்சி ஓடுகின்ற இயல்பு பொதுவாக எல்லா விலங்கினங்களிடத்தும் காணப்படுவதாகும். ஆனால் யானையின் பண்போ அப்படிப்பட்டதல்ல.

அதனிடம் மனத்தளர்ச்சி என்பது இல்லை. அதனால்தான் 'புதையம்புபட்டும் பாடு ஊன்றும்' என்று மிகச் சிறப்பாகக் கூறி வைத்தார். இவ்வளவு

சிறப்பும் மனத்தில் ஊக்கம் கொண்டுள்ள மக்களுக்குப் பொருந்துவதாகும். ஊக்கமுள்ளவர்கள் உயர்ச்சியடைவார்கள்.

## தளர்ச்சியே கூடாது

ஊக்கமுள்ளவர்கள் எப்பொழுதும் மனஎழுச்சியினைப் பெற்றிருப்பார்கள். மன எழுச்சியும் ஊக்கமும் இல்லாதவர்கள் மக்கட்பிறவியின் மனிதப் பண்பாட்டினை இழந்தவர்களாவார்கள். உள்ளம் என்பதே ஊக்கத்தின் இருப்பிடமாகும். ஆதலால் ஊக்கமில்லாதவர்களை 'உள்ளமில்லாதவர்கள்' என்று கூறுதல் மிகையாகாது.

ஊக்கம் என்பது மனதில் உரத்தினை உண்டாக்கும். அப்படிப்பட்டவர்கள் தாங்கள் நினைத்த சிறப்பிற்கு அழிவு வந்த காலத்திலும் தளர்ச்சியடைய மாட்டார்கள். தம்பெருமையினையே நிலைநிறுத்துவார்கள். மன எழுச்சியுள்ளவர்கள் தளர்ச்சியடைய மாட்டார்கள் என்கின்ற கருத்தினை 'உரவோர் ஒல்கார்' என்று குறட்பா கூறுகின்றது.

எப்படிப்பட்டவர்களுக்கும் சிதைவு என்பது பல காரணங்களால் ஏற்படுவதுஉண்டு. இதனை அழிவைத் தருகின்ற நேரம் என்றும் கூறலாம். அப்படித்தான் கொள்ளுதலும் வேண்டும். அப்படிப்பட்ட காலத்தில் ஊக்கம் நிறைந்தவர்கள் தளர்ச்சியடையமாட்டார்கள்!

ஊக்கம் என்பது மனத்தில் 'உரம்' என்கின்ற வலிமையினை, அதாவது மன எழுச்சியினை உண்டாக்கும். ஆதலால் தளர்ச்சி என்பது எப்பொழுதுமே வராது. 'சிதைவிடத்து ஒல்கார் உரவோர்' என்று குறட்பா தொடங்கப் பெறுகின்றது.

சிதைவு வரினும் சீரின் குறையார்

இத்தகைய மிகச் சிறந்த பண்புடையவர்களுக்குப் பெருமையுடைய களிறு உவமையாகக் காட்டப்பட்டது. வாழ்க்கைப் பாதையில் சிதைவு வரக்கூடும் என்கின்ற குறிப்பினையும் அறிதல் வேண்டும். அவ்வாறு சிதைவு வந்த காலத்தில் வாழ்க்கையினைச் சீரயழியச் செய்து விடுதல் உயர்ந்த மக்கட் பிறவிக்கு ஒத்தது ஆகாது.

ஊக்கம் இல்லாதவர்களே சிதைவிற்கு இடம் தருவார்கள்; அழிவுத்தன்மை மன எழுச்சியுள்ளவர்களை ஒருக்காலும் பாதித்து விடாது. எனவேதான், விலங்கினத்தைச் சேர்ந்ததேயானாலும் பெருமையினை நிலை நிறுத்தம் யானையினை அதனுடைய பண்பினைக் கருதி நாமும் ஒத்திருக்க வேண்டும். குறட்பா விளக்கிக் கூறும் தன்மை சிறந்து விளங்குகின்றது.

'சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதையம்பின்—பட்டுப் பாடூன்றும் களிறு'. இக் குறட்பா துன்பத்திலும் பெருமையினை நிலைநிறுத்தும் நுட்பமான கருத்தினை வெளிப்படுத்திற்று. இன்பத்தில் பெருமையினை நிலைநிறுத்துவது எளிதான ஒன்று ஆகும்.

இன்பத்தில் மன எழுச்சி கொண்டிருப்பது பெருமையான செயலன்று. சிதைவு வந்த காலத்தில் அச் சிதைவுக்கு இடம் தராமல் மனத்தினைத் தளர்ச்சியில் விடாமல் எழுச்சி கொண்டு மேம்பாடு அடைவதே மனிதப் பண்பாட்டின் வளர்ச்சியாகும்.

முயற்சியை மேற்கொண்டு தொழிலினைச் செய்து முடிக்க வேண்டும் என்று விரும்புபவர்களே சமுதாயத்திற்கு ஊன்றுகோல் போன்றவர்களாவார்கள். தொழி

வினைச் செய்து முடித்தால் இன்பம் என்பது தானாகவே வந்து சேரும். செயல் புரிந்து அதனையே விரும்பும் நலலவர்கள் தங்களைச் சூழ்ந்திருக்கின்ற சுற்றத்தார்களின் துன்பத்தினையும் நீக்குவார்கள். இன்பத்தினை விரும்பிச் செயல் செய்தலை விரும்பாதவர்கள் பயனற்றவர்களாகி விடுவார்கள்.

தனக்கும் சுற்றத்திற்கும் துன்பத்தினை நீக்குபவர்கள் செயல் புரிவோர்களே ஆவார்கள். செயல் புரிபவர்கள் என்பது தளராத முயற்சியினையுடையவர்கள் என்பதாகும். அப்படிப்பட்டவர்கள் வினை செய்தலையே அதாவது, தொழில் செய்வதையே விரும்புவார்கள். அத்தகைய விருப்பத்தினை ஆள் வினையுடைமை என்று கூறப்படுகின்ற முயற்சி அளிப்பதாகும்.

ஊன்றும் தூண்

வறுமையினைத் தீர்ப்பதும் தன்னைக் காப்பதும் முயற்சியுடையவர்களால்தான் முடிவதாகும். ஒருவன் அத்தகைய பண்பாட்டினைப் பெற்றிருந்தால் அவன் தனக்கு மட்டுமன்றித் தன்னைச் சார்ந்தவர்களுக்கும் துன்பத்தினை நீக்குபவன் ஆகின்றான். அப்படிப்பட்டவனைத் 'தூண்' என்று ஆசிரியர் வள்ளுவனார் கூறுகின்றார்.

தூண் வலிமையுடையது என்பது மட்டுமல்ல, பலவற்றினையும் தாஙகிக் கொண்டிருக்கின்ற பெருஞ் செயலினைத் தூண் செய்கின்றது. எனவே, முயற்சியுடையவன் வினை செய்தலையே எப்பொழுதும் விரும்பிச் செய்வான். அப்படிப்பட்ட ஒருவனை 'வினை விழைவான்' என்று குறட்பா கூறுகின்றது.

வினையினை மேற்கொண்டு விரும்பிச் செய்பவன் என்பதே அதன் பொருளாகும். அத்தன்மையினைத் தருவது முயற்சி என்பதாகும். வினையினைச் செய்கின்ற விருப்பமுள்ளவன் இயல்பாகவே இன்பத்தினை அடைபவனாகின்றான். அந்த இன்பம் வினை செய்பவனுக்குத் தானாகவே வந்து சேரும்.

அப்படிப்பட்டவன் இன்பம் என்கின்ற ஒன்றினை விரும்பி நினைத்து இருக்கமாட்டான். அவன் விரும்பி நினைத்திருப்பதெல்லாம் முயற்சியினை மேற்கொண்டு தொழில் புரிவதேயாகும். 'இன்பம் விழையான் வினை விழைவான்' என்று உலக உண்மையினை எடுத்துக் கூறிக் குறட்பா தொடங்குகின்றது.

தானாகவே வரும்

இன்பத்தினை விரும்பமாட்டான் என்று குறிப்பிடப்பட்டதால் இன்பம் என்பதனையே அவன் வெறுத்தவன் என்பது பொருளல்ல. முயற்சியினால் வினை செய்வதை மேற்கொள்ளாமல் இன்பத்தினை மட்டுமே விரும்பிக்கொண்டு இருக்கமாட்டான் என்பதே பொருளாகும்.

வினையினை விரும்பாமல் இன்பத்தினை மட்டும் விரும்புகிறவன் வாராத ஒன்றினை விரும்புகின்றான் என்பதேயாகும். அவ்வாறில்லாமல் இன்பத்தினை எண்ணாமல் வினையினைமட்டிலும் விரும்பிச் செயல் மட்டும் புரிந்திருப்பவனை இன்பம் தானாக வந்து அடைவதாகும்.

கேளிர் என்பது சுற்றத்தினரையும் நண்பர்களையும் குறிப்பதாகும். ஆதலால்தான் முயற்சியின் மிகுதியினால் வினையினை விரும்பிச் செயலாற்று

பவன் தனக்கு மட்டுமன்றித் தன்னுடைய சுற்றத்தார், நண்பர் முதலிய அனைவருக்கும் உண்டாகின்ற வறுமை, வருத்தம், முதலியவைகளைத் தானே தாங்கி நீக்குகின்ற தூண் போன்றவனாகின்றான்.

ஆதலால்தான் அப்படிப்பட்டவனுடைய சிறப்பு மிகவும் பெரிய சிறப்பாகும். அச் சிறப்பிற்கு முதன்மையான காரணமாக இருப்பது முயற்சி என்கின்ற ஆள்வினையுடைமையே யாகும்.

**'இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்**
**துன்பம் துடைத்தூன்றும் தூண்.'**

இக்குறட்பாவில் 'ஊன்றும் தூண்' என்பது மிகவும் சிந்திக்கத் தக்கதாகும். பலருடைய துன்பத்தினையும் நீக்கி அதனைத் தாங்கி அவர்களைக் காப்பாற்றும் தூண் போன்றவனாகின்றான். முயற்சியில்லாதவர்கள் இத்தகைய நிலையை அடைதல் முடியாது.

துன்பத்தினைத் துடைக்கின்ற, அதாவது நீக்குகின்ற திறமை வினை மேற்கொண்டு செயல் புரியும் முயற்சியுடையவர்களுக்கேயாகும். பலர் முயற்சியின்றிச் செயல் புரிதலைக் கொள்ளாமல் இன்பத்தினையே விரும்பி இருக்கும் பழக்கம் மிகவும் இழிவானது என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது.

**ஆண்மைத் தன்மை மேன்மை தரும்**

மனிதப் பிறவியில் முயற்சியோடு செயற்படும் ஆண்மைத் தன்மையே கருதப்பட்டுப் பாராட்டப்பட வேண்டியதாகும். துன்பத்தினை நீக்குதல் என்பது எல்லோராலும் எளிதாக முடியும் காரியமன்று.

செயலில் இறங்கிச் செயல் புரிவோர்களுக்குத்தான் இது முடியும் என்பதனை வற்புறுத்த வேண்டியே அவனைத் 'துன்பம் துடைத்தூன்றும் தூண்' என்று சிறப்பாக மேன்மை பெற்றான். தனக்கும் மற்றவர் களுக்கும் உண்டாகின்ற துன்பத்தினைப் போக்கு கின்ற உயர்ந்த பண்பு மக்கள் அனைவருக்குமே இருக்கவேண்டிய இலக்கணமாகும்.

துன்பம் என்பது தொழிலினை மேற்கொண்டு செய்கின்றபொழுது இடையில் வருதல் நேரிடும். தொழிலை மேற்கொள்ளுதல் என்று கூறப்படுவதால் மனித இயல்பு என்பதே எக்காலத்திலும் செயற்பட்டுக் கொண்டே இருக்கவேண்டும் என்பதாயிற்று. துன்பம் என்பதனை 'இடும்பை' என்று ஆசிரியர் கூறுவர்.

இடும்பை வருகின்றபொழுது அதனைக் கண்டு வருந்துதல் மனித இயல்பாகவே இருத்தலும் கூடும். இடும்பையினைக் கண்டு வருந்தி வாட்டமுற்றால் அவ்விடும்பை வாழ்க்கையினைச் சிதைத்து விடும். ஆகையினால் இடும்பைக்குச் சிறிதேனும் வருந்தாமல் இருப்பதே உயர்ந்த பண்பாகக் கருதப்படும்.

## அச்சமே வேண்டாம்

இடும்பை வந்தால் அதற்கு இடும்பைப் படாமல் இருத்தல் வேண்டும். அதாவது வருத்தம் கொள்ளாமல் இருத்தல்வேண்டும். இடும்பைக்கு அஞ்சி வருந்திக் கொண்டிருக்க ஆரம்பித்துவிட்டால் அத்துன்பம் வாழ்க்கையினைப் பாழாக்கும்.

செய்யும் தொழிலினைச் செய்யாமல் நிறுத்திவிடும் இடும்பை வந்தபொழுது அதனால் மனம் இளைத்து

மேற்கொண்ட செயலினை விட்டுவிட நினைப்பவர் களும் உண்டு. ஆதலினால் எப்பொழுதும் மனத்திட்பம் உடையவர்களாக விடாத முயற்சியினை மேற் கொண்டால் எடுத்த தொழில் முடிவு பெறும் நல்ல பயனைத் தரும். எல்லாத் துன்பங்களும் நீங்கிவிடும்.

ஆதலால்தான் 'இடும்பைக்கு இடும்பை படா அதவர்' என்று குறட்பா கூறுகின்றது. அதாவது வினை மேற்கொண்டு செயல் புரிவோர்கள் துன்பம் வந்தால் துன்பப் பட்மாட்டார்கள் என்பதே கருத்தாகும்.

இடும்பை வந்த பொழுது அதற்கு இடும்பைப் படா அதவர்கள் எடுத்த தொழிலில் வெற்றி பெறுவர் என்பது திண்ணமாயிற்று. அவர்களுடைய திறமை வந்த இடும்பையினை ஓடிவிடச் செய்யும். அப்படிப்பட்ட உள்ளம் படைத்தவர்களிடம் இடும்பை வருவதற்கும் அஞ்சும். அப்படி அவர்களிடம் வந்த துன்பத்திற்கு இவர்களே துன்பத்தைக் கொடுத்து விரட்டிவிடுவார்கள் என்பதாகும்.

## இடும்பைகள் இயல்பேயாகும்

'இடும்பைக்கு இடும்பை படுப்பர்' என்ற சீரிய உண்மையினை முதலாக வைத்து குறட்பா தொடங் கிற்று. தொழிலினை மேற்கொண்டு வருகின்றவர்கள் இடையிலே வருகின்ற துன்பத்திற்கு அஞ்சாமலிருந்து வந்த அத்துன்பத்திற்கு வேறொரு துன்பத்தினை உண்டாக்குவார்கள்.

துன்பத்திற்கு வருந்துகிறவர்கள் இப்படிப்பட்ட செயலினைச் செய்யமாட்டார்கள். இடும்பை

என்பதனை நான்கு முறை அடுத்தடுத்துக் குறிப்பிட்டு அழகிய குறட்பா ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. 'இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு— இடும்பை படா அதவர்'.

துன்பம் என்பதனை எவ்வளவு எளிதாக ஒழித்து விடுதல் வேண்டும் என்பதனை வற்புறுத்திக் கூறினார். துன்பத்திற்கே துன்பம் கொடுக்க முடியும் என்பதனை யும் எடுத்துக் காட்டினார். அதற்குள்ள ஒரே வழி துன்பம் வந்தபொழுது அத்துன்பத்தினைக் கண்டு துன்பப்படாதிருக்கும் மன உறுதியேயாகும்.

## மனப்பக்குவம்

வாழ்க்கைப் பாதையில் எல்லாக் காலங்களும் நல்லதாகவே இருந்து விடும் என்று எண்ணுதல் கூடாது என்கின்ற உண்மை மெய்ப்பிக்கப்பட்டது. எதிர்பாராத நிலையில் துன்பம்கூட வந்துவிட்டதே என்று எண்ணி மலைத்தலும் கூடாது. துன்பங்களை யெல்லாம் இயல்பானதாகவே எண்ணி வருந்தாத மனப் பக்குவத்தைப் பெற்று அவைகளைப் போக்குவதே மனிதப் பிறவியிடம் காணப்பட வேண்டிய சிறப்பாகும்.

அளவு கோல் வைத்து அளவிட்டுக் கூற முடியாதது துனபமாகும். துன்பத்தினை 'இடுக்கண்' என்று கூறுதலும் உண்டு. 'இடுக்கண்' என்பது குறிப்பிட்ட ஒன்று இரண்டு போன்ற எண்ணிக்கையில் வருவது அல்ல. இடுக்கண் வருகின்ற காலத்தினையும் கணக்கிட்டுக் கூறுதல் இயலாது. ஒரே இடுக்கண் பலமுறை வருதலும் கூடும்.

அல்லது பற்பல வகையான இடுக்கண்கள் கலந்து வருதலும் உண்டு. அடுக்கடுக்காக மேலும் மேலும் இடுக்கண்கள் வருதலும் உண்டு. இடைவிடாமலேயே இடுக்கண்கள் வருதலும் இயல்பாகும்.

ஆதலினால், காலத்தினாலும் அளவினாலும் துன்பத்தினை அளந்து அறிந்து பார்த்தல் கூடாது. எப்படிப்பட்ட வகையில் துன்பங்கள் வந்தாலும் தன்னுடைய மனத்தின் ஊக்க மிகுதியால், எழுச்சியின் சிறப்பால் குறிப்பினையும் கொள்கையினையும் விடாமல் இருப்பவன் அஞ்சுதல் இல்லை.

எடுத்த கோட்பாட்டினை விடாது பற்றிப் பிடித்து வெற்றியில் நாட்டங் கொள்ளுதலே அறிவுடைமை யாகும். அப்படிப்பட்டவனுக்கு எக்காலத்திலும் இழிவோ அழிவோ வராது.

அப்படிப்பட்டவனை 'அழிவிலான்' என்று ஆசிரியர் வள்ளுவனார் கூறுகின்றார். உள்ளத்தில் உறுதியாகக் கொண்டுள்ள குறிக்கோளினை விடா திருப்பவனுக்கு எக்காலத்திலும் அழிவுத் துன்பம் நெருங்கிவிடாது.

இடுக்கண்கள் பல நெருங்கி வந்தாலும் திண்மை யான உறுதிப்பாடு உள்ளவனிடம் வந்த அந்தத் துன்பங்கள் தாமே துன்பப்படும்படி செய்துவிடுவான். 'இடுக்கண் இடுக்கட் படும்' என்று ஒரு குறட்பா முடிகின்றது.

துன்பம் தானே துன்பத்தினை அடையும் என்பதே இதன் பொருளாகும். இப்படிப்பட்ட நிலைமை அந் துன்பத்திற்கு எப்பொழுது உண்டாகும் என்பதனை விளக்கவேண்டியே 'அழிவிலான் உற்ற இடுக்கண்

என்று கூறினார். அதாவது 'மனத்திட்பத்தினால் உள்ளத்தின் கோட்பாட்டினை அழிக்காமல் இருப்பவனிடம் வந்த துன்பம்' என்பதே குறிக்கப்பட்டது. "அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற—இடுக்கண் இடுக்கட் படும்".

தொடர்ந்து வருதல் இடும்பைக்குண்டு

அடுக்கடுக்காய் துன்பங்கள் வருவதுண்டு என்கின்ற உண்மையினை வைத்தே குறட்பாவும் அடுக்கி வரினும் என்று தொடங்கிற்று. இயற்கை என்று கூறப்படுகின்ற ஊழ்வினையால் கொடுந்துன்பங்களும் சூழ்ந்து வரும். அக்காலத்திலும் மன ஊக்கத்தினை முதன்மையாகக் கொண்டு உள்ளத்தினை எழுச்சியுடன் நிலைநிறுத்தல் வேண்டும்.

வந்த இடுக்கண் தானே இடுக்கண்பட்டு விலகும் என்று கூறியதால் மனத்திட்பம் கொண்டவனை எத்துன்பமும் எக்காலத்திலும் அழித்துவிடாது என்ற மேலான உண்மை உறுதியுடன் கூறப்பட்டது. தாங்க முடியாத துன்பங்கள் வந்து அழித்துவிட்டன என்று கூறப்படும் உலகியற் பழக்கத்தினையும் விளக்கிக் கூறி அதற்கு மருந்தான உண்மையினையும் எடுத்துக் காட்டினார்.

மனத் திடம் பெற்றுள்ள மனிதனால் மிகச் சிறந்த செயல்களையெல்லாம் ஆற்றுதல் கூடும் என்கின்ற நுட்பம் சூழ்ந்த கருத்துடன் கூறப்பட்டது. பல துன்பங்கள் வருமேயானால் தாங்கமுடியாத நிலை ஏற்பட்டுவிடும் என்று கூறுதல் அறியாமையேயாகும்.

உள்ளத்தில் உரம் கொண்டு, ஊக்கமும் முயற்சியும் நிறைந்திருக்கப் பெற்றுவிட்டால் அப்படிப்பட்ட ஒருவன் உள்ளத்திற்கொண்ட கோட்பாட்டினை விடாப் பிடியாகத்தான் கொண்டிருப்பான். அப்படிப்பட்டவனைக் கண்ட இடுக்கண்கள் நடுங்கும். எனவேதான் துன்பம் என்பதே துன்பப்படும் என்று கூறுகின்ற முறையினை ஆசிரியர் வற்புறுத்தினார்.

முயற்சியுடையவர்கள் தொழிலினை மேற்கொண்டு செலுத்துகின்றபொழுது துன்பங்கள் வந்தால் அதனைப் பற்பல முறைகளினால் நீக்குவார்கள். வண்டியினை இழுத்துச் செல்கின்ற காளை செய்கின்ற செயல்கள் குறிப்பான நேரங்களில் வியப்பூட்டுவனவாகும். வண்டியை இழுத்துச் செல்கின்றபொழுது செல்லுகின்ற பாதை நேராகவும் ஒழுங்காகவும் இருந்துவிடும் என்று சொல்வதற்கில்லை.

## சேற்று நிலத்தில் செல்லும் பகடுகள்

நிலத்தின் பக்கத்தில் செல்லுகின்ற வண்டியினை இழுத்துப் போகின்ற காளைகளை உவமையாகக் கொண்டு பார்க்கலாம். வண்டியினை அக்காளை இழுத்துச் செல்லுகின்றபொழுது செல்லுவதைத் தடுத்து நிறுத்துகின்ற இடங்கள் பலவுண்டு. தடுக்கின்ற அந்த இடங்களிலெல்லாம் காளை நின்று விடுவதில்லை. முயன்று இழுத்துச் செல்லுகின்ற அவ்விலங்கினைப் 'பகடு' என்றே ஆசிரியர் வள்ளுவனார் குறித்தார்.

அப் பகடு செல்லமுடியாதவாறு மேடுபள்ளங்கள் தடையாக இருக்கும். சேற்று நிலங்கள் தடையாக

இருக்கும்.. சேற்றில் உள்ள உளைகள் வண்டியினைத் தடுத்து நிறுத்தும். இன்னும் இவை போன்ற பல இடையூறுகளும் அப்பகட்டிற்கு வந்து சேரும். ஆனால் அகப்பகடு முயற்சியினை விடாமல் தன் பலம் எல்லா வற்றையும் கொண்டு பலவகையிலும் முயன்று வண்டியினை இழுத்தே செல்லுகின்றது.

சேற்றினாலும், பிறவற்றினாலும் தடை ஏற்பட்ட பொழுது அப்பகடு இப்பக்கமும் அப்பக்கமும் சாய்ந்து, மூச்சுப் பிடித்தும் கால்களை மடக்கியும் இன்னும் இவைபோன்ற செயல்களினால் வண்டியினை இழுத்தே செல்லுகின்றது. தனது உடம்புக்கு வருகின்ற துன்பத்தினை அப்பகடு நினைத்ததே இல்லை. ஆதலாலதான் ஊக்கம் நிறைந்த எழுச்சியுள்ள ஒருவனைப் 'பகடு அன்னான்' என்று ஆசிரியர் குறிக்கின்றார்.

பகடும் ஊக்கமும்

அப்பகடு 'மடுத்தவாய் எல்லாம்', அதாவது தடைப்பட்ட இடங்களிலெல்லாம் பெருமுயற்சி யுடன் வண்டியினை இழுத்துச் செல்லுகின்ற பகட்டினைப் போன்றவன் மிகுந்த மன ஊக்கமுள்ளவன் என்பதனைக் குறித்துக் காட்ட வேண்டி 'மடுத்த வாயெல்லாம் பகடு, அன்னான் என்று பகட்டினை உதாரணமாகக் காட்டினார்.

பகடு என்பது விலங்கினத்தைச் சேர்ந்ததேயானா லும் அதனிடம் காணப்படுகின்ற முயற்சியின் மேன்மை பாராட்டுதற்குரியதாகும். தான் கொண்ட குறிக்கோளினைப் பகடு வெற்றியுடன் நிறைவேற்று கின்றது. வழியிலே வருகின்ற தடைகளாக இடையூறு களுக்கு அஞ்சவில்லை. அவைகளை யெல்லாம்

ஊக்கத்தினாலும் மெய் முயற்சியினாலும் நீக்கிவிட்டு வண்டியினை இழுத்துச் செல்லுகின்றது.

அதுபோலவே நல்ல முயற்சியினை மேற்கொண்டுள்ளவர்கள் செயல் புரியும்போது தடையாக வரும் இடுக்கண்களும் மறைந்து ஓடும். இடுக்கண்கள் தாமே இடர்ப்பட்டு மறையும் என்பதனைக் குறட்பா கூறுகின்றது. 'இடுக்கண் இடர்ப்பாடுடைத்து' என்று முடிகின்ற குறட்பா சிறந்ததொரு கருத்தினை வெளிப்படுத்துகின்றது. தொழிலினை மேற்கொண்டு செய்கின்றவர்கள் ஊக்கம் மிகுதியினால் வல்லவர்களாக இருத்தல் வேண்டும்.

துன்பங்கள் மறையும்

அப்படிப்பட்டவர்களை அடைந்த இடுக்கண் இடர்ப்பாடு உடையதாகும் என்று குறித்தார். 'இடர்ப்பாடு உடைத்து' என்பது இடர்ப்பாட்டினை உடையதாகிவிடும் என்பதேயாகும். வல்லவர்களிடம் வந்த துன்பங்கள் தாமே துன்பத்தினையடைந்து மறுபடியும் அவர்களைச் சாராது என்பது குறிப்பாகும்.

முயற்சியினையுடைய வல்லவர்கள் பற்பல முறைகளையும் பின்பற்றிச் செயல் புரிபவர்கள் ஆவார்கள். செயலினை மேற்கொள்ளும் காலத்தில் அவைகளை இடுக்கண்கள்தான் தடைப்படுத்தி நிறுத்துவதாகும். ஆதலால்தான் இடுக்கண்களை நீக்குவதில் வல்லமை பெற்றிருக்கவேண்டும் என்பதாயிற்று.

இந்த வல்லமையினை மனோ திடமும் ஊக்க மிகுதியும் அளித்து நிற்கும். பற்பல வழிகளிலும் மெய் வருத்தம் பாராது முயற்சி செய்தால் இடுக்கண்கள் தாமாகவே ஓடிவிடும் என்பதோடல்லாமல்

நினைத்த குறிக்கோளினையும் அடைந்துவிட முடியும்.
'மடுத்தவாயெல்லாம் பகடு அன்னான் உற்ற—
இடுக்கண் இடர்ப் பாடு உடைத்து'.

தீய குணங்களில் 'மடி'யும் சேர்ந்து

இக்குறட்பா மூலம் மனித முயற்சிகள் எத்தனையோ வகைப்படும் என்பதனைக் குறித்துக் காட்டுகின்ற முறைமை சிந்திக்கத்தக்கது. ஒருவகை முயற்சியினால் மட்டும் துன்பங்கள் நீங்கிவிடாது. பல வகையான முயற்சிகளையும் மேற்கொள்ளுதல் வேண்டும்.

பகட்டினிடம் காணக்கூடிய இயல்புகள் நன்கு சிந்திக்கப்பட வேண்டியனவாகும். துன்பங்கள் பற்பலவாக இருந்து விடுதல் இயல்பேயானபடியால மேற்கொள்ளவேண்டிய முயற்சி வகைகளும் பற்பலவாக இருத்தல் வேண்டும்.

மனிதச் சிறப்பினைக் குறைத்துக் கெடுதியான அழிக்கின்ற தீய குணங்கள் பற்பலவாக உள்ளன. ஊக்கத்தினையும் முயற்சியினையும் மனத்திட்பத் தினையும் கெடுக்கக் கூடிய கொடிய பழக்கங்களில் ஒன்று 'மடி' என்பதாகும். அதாவது 'சோம்பல்' என்னும் தன்மையாகும்.

உயர்ந்த பண்பாடுகளை உள்ளத்தில் வளர விடாமல் தடுத்து அழிக்கக்கூடிய தீய குணங்களிலே சோம்பலைப் போன்றது 'நெடுநீர்' என்கின்ற குணமு மாகும். 'நெடுநீர்' என்பதனைச் சுருக்கமாகக் கூற

வேண்டுமென்றால் காலங்கடத்தல் ('தாமதம்') என்று கூறலாம்.

'நெடுநீர்' என்ற குணம் தொழிலினை 'நீட்டித்துச் செய்யும் பழக்கத்தினை உண்டாக்கிவிடும். தொழிலினைக் குறித்த காலத்தில் விரைந்து செய்தலே அருமையான பண்பாகும். எத்தொழிலினையும் காலம் கடத்திச் செய்கின்ற பழக்கம் தவறானதாகும். காலத்தின் அருமையினை எப்பொழுதும் அறிந்து, உணர்ந்து நடத்தல் வேண்டும்.

## தீயவைகளே இவைகள்

'நெடுநீர்' என்கின்ற தீய குணம் காலத்தின் அருமையினை அறியாதபடி செய்துவிடும். எதையுமே நீட்டித்துச் செய்யும் பழக்கத்தினை நெடுநீர் என்கிற குணம் உண்டாக்கிவிடும். ஆதலினால் முதன்மையாக வைத்துக் கண்டிக்க வேண்டிய தீய குணம் நெடுநீர் என்பது குறிப்பிடத்தக்கது.

சுறுசுறுப்பினை இயல்பாகவே பெற்றிருத்தல் மக்கட்குரிய இலக்கணமாகும். இதனைப் பெற்றிராதவர்கள் வாழ்க்கையில் முன்னேற்றமடையவே முடியாது. இப் பண்பாட்டினை 'மடி' என்கின்ற சோம்பல் குணம் அழித்துவிடும்.

மக்களுக்கென்றே அருமையாக அமைந்திருக்க வேண்டிய சிறப்பான மற்றொரு குணம் 'நினைவு ஆற்றல்' என்பதாகும். இக்குணத்தினை 'மறதி' என்பது கெடுக்கும். மறதி என்கிற குணம் காணப்பட்டால் அக்குணம் பெற்றிருப்பவன் உயர்ச்சியடைதல் முடியாததாகும் என்றே கொள்ளுதல் வேண்டும்.

மறதி என்பது துன்பங்கள் பலவற்றையும் உண்டாக்குவதாகும். மறந்துவிடுதல் என்பதை அடிக்கடி கொண்டிருப்பவன் வாழ்க்கையில் சரிந்து விடுவான் என்பதே பொருளாகும். துயில் என்று கூறக் கூடிய தூக்கமும் மக்கள் வாழ்க்கையில் அழிவைத் தேடித் தருகின்ற மிகக் கொடிய குணமாகும்.

அளவில்லாமல் துயில்கின்ற மக்களையும் காண முடிகின்றது. இத்தகைய நான்கு தீய குணங்களையும் விடாமற் கொண்டிருக்கின்றவர்கள் கெட்டுவிடுவார்கள் என்பது திண்ணம். கெட்டுப் போகின்றவர்களுக்கே இந்த நான்கு குணங்களுமே இருந்து வரும்.

## நான்கும் மிக மிகக் கொடியவையாகும்

'மடி' என்றும் 'நெடுநீர்' என்றும் 'மறவி' என்றும் 'துயில்' என்றும் கூறப்படுகின்ற இந்த நான்கு குணங் களையும் கொடிய தீமைகள் என்று நினைக்காமல் அவைகளை மேற்கொண்டிருக்கின்ற மக்களும் உண்டு.

இக் குணங்களைக் கொண்டவர்கள் கெட்டுப் போகின்ற தன்மையாளர்கள் என்பதனைக் கெடுநீரார் என்று குறட்பா குறிக்கின்றது.

கெட்டுப் போகின்றவர்கள் இத்தீய குணங்களை நாடிச் செல்வார்கள். இக்குணங்களைக் கொள்ளுவதில் விருப்பம்கூடக் காட்டுவார்கள். ஆதலால்தான் விரும்பி ஏறுதற்குரிய மரக்கலம் போன்றதே இத்தீயகுணங்கள் என்பதை நன்கு தெளிவுபடுத்த வந்த ஆசிரியர் 'காமக் கலன்' என்று குறித்தார்.

விருப்பம் என்பதைக் 'காமம்' என்கிற சொல்லும் 'மரக்கலம்' என்பதை கலன் என்கிற சொல்லும் குறித்தது. ஏறக்கூடாத மரக்கலத்தில் ஏறிச் சென்றால் அம் மரக்கலம் தண்ணீரில் ஆழ்ந்து ஏறியவர்களையும் மடியச் செய்யும். அதுபோல நெடுநீர், மறவி, மடி, துயில் ஆகிய நான்கு தீமையான கொடிய குணங் களையும் பெற்றிருப்பவர்கள் கெட்டொழிதல் உறுதிப் படுத்தப்பட்டது.

மரக்கலம்

மரக்கலமானது ஏறுகின்ற பொழுது வசதியாக இருப்பது போல் காட்டித் தண்ணீரில் சென்றவுடனே ஏறியவர்களை மடியச் செய்யும். அதற்குக் காரணம் அம்மரக்கலம் அழிவைத் தருகின்ற தவறான மரக்கலம் என்பதனாலேயாகும்.

கெட்டுப் போகின்றவர்களும் தீமையான குணங்களை விருப்பமோடு பழக்கத்திற் கொண்டு அழி வர் என்பது பெறப்பட்டது. இத்தீய குணங்களைப் பின்பற்றுபவர்கள் தொடக்கத்தில் மகிழ்ச்சியடைவது போல எண்ணிக் கொள்வார்கள்.

அதாவது இத்தீய குணங்கள் தொடக்கத்தில் இன் பத்தினைக் கொடுப்பன மோலத் தோன்றும் என்ப தாகும். காமக்கலன் என்பதை ஆசிரியர் குறித்துக் காட்டியது ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய இடமாகும். 'நெடுநீர், மறவி, மடி, துயில் நான்கும்—கெடுநீரார் காமக்கலன்'.

எத்தொழிலையும் நீட்டித்தே செய்யும் தீய பழக்கத் தினை நெடுநீர் என்றும், கெட்டுப் போகின்ற தன்மை யினைக் 'கெடுநீர்' என்றும் குறித்தார். தீய குணங்கள்

நான்கினையும் ஒன்று சேரக் கூறி இவைகளில் ஒரு குணம் ஒருவரிடத்தில் தொடக்கத்தில் இருந்தாலும் மற்ற மூன்று குணங்களும் வந்து சேர்ந்துவிடும் என்ற உண்மை குறிப்பால் உணர்த்தப்பட்டது.

மரக்கலம்

மக்கட்பிறவியினைக் 'கடல்' என்று கூறுதலும் உண்டு. 'பிறவிப் பெருங்கடல்' என்றும் அமைத்துக் காட்டப்படும். வாழ்க்கை என்பது கடலில் பயணம் செல்வது போன்றது என்று குறிப்பிடப்படுவது மிகை யாகாது. அப்பயணத்தில் கெட்டுப்போன மரக்கலத்தை துணையாகக் கொண்டவர்கள் எந்த முடிவுக்கு வருவார் கள் என்பது சுட்டிக் காட்டாமலே தெளிவுறுவதாகும். தீய குணங்களை அகற்றாதவர்கள் வாழ முடியாது. வாழ்வார்களேயானால் அழிவினைத் தேடிக் கொள் வார்கள்.

விரிவாக விளக்கிக் கூறவேண்டியவை அல்ல என்பதே பொருந்தும். மறதி என்கின்ற குணத்தினைப் 'பொச்சாப்பு' என்று ஆசிரியர் குறிப்பிடுவார். தீய குணங்களிலே மிகக் கொடியது மறதி என்று கூற லாம். இக்குணம் நினைவு ஆற்றல் என்பதற்கு முற்றி லும் பகைமையானதாகும்; மாறுபட்டதாகும்.

நினைவு ஆற்றல் பெற்றிருப்பவர்கள் உலகில் சிறந்து விளங்குவார்கள், புகழ் பெற்று வாழ்வார்கள். கல்வி, கேள்வி, அறிவு இவைகளையெல்லாம் சேமித்துப் பாதுகாத்து வைக்கும்பெட்டகம் போன்றது நினைவு ஆற்றலாகும்.

கற்ற கல்வியினையும் பெற்ற அறிவினையும் அழிப்பது மறதி என்பதாகும். ஆதலினால் மறதி என்கிற பழககம் கடுகளவேனும ஒருவரைப் பிடித்துக் கொள்ளாமல் கண்காணித்து வருதல வேண்டும. மறதிக்கு அடிமைப்பட்டவர்கள் சிறப்படைய மாட்டார்கள். மறதியினால் வரக்கூடிய தீமைகள் மிகப பலவாகும்.

பொச்சாப்பு

பொச்சாப்பு என்கின்ற மறதிக்கு என்றுமே இடம் கொடுத்தலாகாது. மறதியுள்ளவர்களுக்கு எக்காலத்திலும் புகழ் என்பது வராது. இசையோடு வாழ்தல் என்பது மனிதப் பிறவியின் குறிக்கோளாக இருத்தல் வேண்டும் என்பது, உலகியல் உண்மையாகும்.

இசை என்பதும், புகழ் என்பதும் ஒருபடித்தான கருத்துக்களாகும். ஆதலால், புகழ் வராதபடி தடுக்கின்ற பொச்சாப்பு என்ற மறதி நோய் அணுகினால் வாழ்க்கை என்பது இருண்டு விடுவதாகும். இருளினை நீக்குவது நினைவு ஆற்றல்; 'பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை' என்று குறட்பா ஒன்று வலியுறுத்தித் தொடங்குகின்றது.

புகழுடையவர்களாக இருப்பதற்குக் காரணமே மறதியில்லாத நற்குணம் என்பது வற்புறுத்தப் பட்டது. ஆனால் பொச்சாப்பார்க்கு, அதாவது மறந்து நடப்பவர்களுக்குப் புகழ் என்பது இல்லை என்று கூறப்பட்டது.

நல்ல தொழிலினை மேற்கொண்டு நடப்பவர்கள் மறதி உள்ளவர்களாக இருந்து விட்டால் நினைத்த காரியங்கள் கைகூடாமற் போகும்; செயல் புரிய முடியாது. எடுத்ததை முடிக்கும் திறமை இல்லாமல் போய்விடும். ஆதலால்தான் பொச்சாப்புடையவர்களுக் குப் புகழ் என்பதே இல்லை என்று கூறினார்.

## மறதி புகழைக்கெடுக்கும்

இவ்வுண்மையினை மிகப் பெரியதென்று சுட்டிக் காட்டவேண்டிய அரிய கருத்து ஒன்றினையும் ஆசிரியர் கூறுகின்றார். உலகத்தில் காணப்படும் நூல்கள் பல வகைப்படும். பற்பல துறைகளில் பல விதமான கருத்துக்களைக் கூறுகின்ற நூல்கள் மிகப் பலவாக உண்டு. கருத்து வேற்றுமைகளைப் பல வகைப்பட்ட நூல்களில் காணவும் முடிகின்றது.

காலத்தினாலும் இடத்தினாலும் பிற காரணங்களி னாலும் ஒரே கருத்து எல்லா நூல் வகையினருக்கும் ஒத்திருத்தல் முடியாததாகும். ஆனால் எல்லா நூல் வகைப்பட்ட அறிஞர்களும் ஒப்புக்கொள்ள வேண்டிய ஒரே கருத்தாக அமைந்து விடுகின்ற ஒன்றினை ஆசிரியர் இங்குக் குறித்தார்.

மறதி உள்ளவர்கள் புகழுடையவர்களாக இருக் கவே முடியாது என்பது பேருண்மையாகும். இப் பேருண்மையினை மேலும் வற்புறுத்த வேண்டி உலகம் முழுவதிலும் நிலவுகின்ற நூல் வகை அனைத்தையுமே ஆசிரியர் முன் நிறுத்திக் கூறுகின்றார்.

எல்லா நூல்களிலும் உறுதியாக, ஒப்ப முடிந்த தாகக் கூறப்பட்டுள்ள கருத்து, மறதி என்பது புகழி னைக் கெடுக்கும் என்பதேயாகும். 'பொச்சாப்பார்க்கு

இல்லை, புகழ்மை, அது உலகத்து — எப்பால் நூலோர்க்கும் துணிவு.

### தனிச்சிறப்பு

இக்குறட்பாவில் காணப்படுகின்ற தனிச்சிறப்பு உலகத்தினையே அமைத்துக் காட்டிக் கூறப்படுவதாகும். பொச்சாப்பு என்பதை வைத்து குறட்பாவைத் தொடங்கித் தாம் கொண்ட கருத்தினை மேலும் வலியுறுத்த 'அது' என்கிற சொல்லினால் சுட்டிக் காட்டினார்.

'எப்பால் நூலோர்க்கும்' என்று கூறியதால் அற நூல், பொருள் நூல், என்பன போன்று குறிப்பிட்ட வகை நூல்களுக்கு மட்டும் இவ்வுண்மை என்று கொள்ளாமல் உலகிலுள்ள பிற நூல்கள் எல்லாவற்றிலேயும் காணப்படுவதாகும் என்பது தெளிவுபடுத்தப்பட்டது.

மறதியுடையவர்களுக்குப் புகழ் என்பது எக்காலத்திலேயும் வராது என்பதை நன்கு விளக்க வேண்டி முக்காலத்திற்கும் பொருந்துவதாக இல்லை என்ற சொல்லினை வைத்தார். ஆதலால் போற்றிக் காப்பாற்றவேண்டிய பண்பு நினைவுஆற்றல் என்பதாகும். மறந்து விடுதல் என்கின்ற பழக்கத்தினை மறந்தும் கொள்ளாதே என்பது உய்த்துணர வைக்கப்பட்டது.

உலகம் முழுமைக்கும் ஒப்ப முடிந்ததாகக் கொள்ளக் கூடிய கருத்துக்கள் பலவாக இருத்தல் முடியாது. சிற்சில உண்மைகளே எல்லா மக்களுக்கும், எல்லா காலத்திற்கும், எல்லா நாட்டவர்க்கும் பொருத்தமாக இருக்க முடியும்.

ஆனால் ஆசிரியர் கூறிய இக்கருத்தோ அப்படிப் பட்டதல்ல என்பதை மிக நன்றாகக் கூறக் கருதியே உலகத்திலுள்ள எல்லா நூலாசிரியர்களையும் வரிசைப் படுத்திக் காட்டி இக்கருத்தினை மெய்ப்பித்தார்.

பொச்சாவாமை என்பது மறதியின்மை என்பதைக் குறிப்பதாகும். தொழில் செய்பவர்கள் பொச்சாவாமை என்கின்ற மறதியின்மையினை மிகவும் சிறந்த கருவி யாகக் கொள்ளுதல் வேண்டும். இக்குணத்தினை ஒரு கருவியாகவே ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

நினைப்பும் மறப்பும் மனத்தினிடம் தோன்றுவன வாகும். ஆதலினால்தான் மனமே கருவியாகக் கொள்ளப்பட்டது. இடைவிடாத நினைப்பும் தப்பாத எண்ணமும் நினைத்த செயல்களை வெற்றியடையச் செய்வதாகும்.

## அருமையானவை எளிதில் முடியும்

தொழில்களை மேற்கொள்ளும்பொழுது அருமை யான காரியங்கள் என்று சொல்லப்படுபவைகளும் உண்டு. முடிக்க முடியாத காரியங்கள் என்று கூறக் கூடிய பழக்கங்களையும் உலக இயல்பில் காணு கின்றோம். அப்படிக் கூறவேண்டிய நிலைமை நினைவுஆற்றல் உள்ளவர்களுக்கு இருக்காது. நினைவு ஆற்றல் பெற்றவர்கள் அருமையான செயல்களை யும் எளிதில் முடிப்பார்கள்.

அவர்கள் பொச்சாவாக் கருவியினை போற்றிச் செய்தல் வேண்டும். பொச்சாவாக் கருவி என்பது மறதி

யில்லாத மனப்பக்குவமாகும். எதனையும் எண்ணி ஆராய்ந்து செய்தல் வேண்டும். நினைவு ஆற்றல் பெற்றவர்கட்கே பற்பல முறையில் எண்ணுதலும் சிந்தித்தலும் செயல்படுதலும் கூடும். ஆராய்ந்து அறிதலும் முடியும். எண்ணிச் செய்வதையும் ஆராய்ந்து செய்வதையும் 'போற்றிச் செயின்' என்று குறட்பா கூறுகின்றது.

ஒரு செயலினை நன்கு செய்து முடிப்பதற்குக் கருவி என்பது இன்றியமையாத ஒன்று என்பது யாவரும் அறிந்ததாகும். நினைவு என்பதனுடைய சிறப்பினைக் கூறவேண்டி, மறதியில்லாத நினைவு அல்லது நினைவாற்றல் என்பதனைக் 'கருவி' என்று அழைத்தார். 'பொச்சாவாக் கருவியால் போற்றிச் செயின்' என்று குறட்பா ஒன்று முடிகின்றது.

## நினைத்தவை முடியும்

என்றென்றும் பொச்சாவாக் கருவியினை மிகச் சிறந்ததாகக் கொள்ளுதல் வேண்டும். அப்படிக் கொண்டால் அந்த எண்ணம் மிகமிக உயர்ந்த நிலையினை ஒருவனுக்கு உண்டாக்கும். உலக வழக்கில் பேசுகின்றபொழுது முடியக் கூடிய காரியங்கள்' செய்து முடிக்க முடியாத காரியங்கள் என்று கூறுதல் வழக்கு.

ஆசிரியர் வள்ளுவனார் நினைவு ஆற்றலின் பெருமையினை எவ்வளவுக்கெவ்வளவு உயர்த்தி வைத்துப் பேச வேண்டுமோ, அவ்வளவு உயரத்தில்

மறதியில்லாக் குணத்தினை வைத்துக் காட்டினார். மனிதனால் ஆகாத காரியமே இல்லை என்று கூறுகின்ற உரை பலருக்கு வியப்பினை உண்டாக்குதல் உண்டு.

இவ்வாறு கூறுவது மிகவும் அருமையானதாகும். இத்தகைய ஒரு கருத்தினை ஆசிரியர் வள்ளுவனார் கூறுகின்றார் என்றால் மிக மிக சிந்திக்க வேண்டியதாகும். மக்கட் பிறவி எடுத்தவன் எதையும் செய்து முடிக்க முடியும் என்பது கருத்தாக அமைந்துள்ளதாகும்.

## அருமையான கருவி

அருமையான காரியங்கள் என்று சொல்லப்பட்டு ஒருவரால் முடியாத காரியமே இல்லை என்பதைக் குறிப்பால் ஆசிரியர் உணர்த்துகின்றார். ஆனால், அப்படிச் சொல்லுகின்ற ஒருவன் மறதியின்மை என்கின்ற உயர்ந்த பண்பாட்டினைப் பெற்றிருத்தல வேண்டும்.

நினைவு ஆற்றல் என்கிற கருவியினைக் கைக்கொண்டு, ஆராய்ந்து எண்ணிச் செயல் படுவானேயானால், அவனால் முடியாத காரியமே இல்லை என்று கொள்ளுதல வேண்டும். மறதியின்மை என்பதைக் கொண்டுள்ள மனமே அப்படிப்பட்டவனுக்குச் சிறந்த கருவியாக அமைந்துவிடும். 'அரியவென்று ஆகாத இல்லை பொச்சாவாக்—கருவியான் போற்றிச் செயின்.'

நினைத்ததையெல்லாம் செயலில் முடிக்க முடியும் என்ற சிறப்பான முடிவினை இக்குறட்பா எடுத்துக் கூறுகின்றது. ஒரு காரியத்தினை எடுத்துச் செய்யும்

போது அருமையாக இருக்கின்றதே என்ற அச்சமும் மலைப்பும் இருத்தல் கூடாது என்பதனைத் திண்ணமாகக் கூறுகின்றது. மனிதனுடைய மனம் மிகவும் சக்திவாய்ந்தது.

எல்லாவற்றிற்குமே மனம் அடிப்படையாக அமைந்ததென்பது உலகறிந்த உண்மையாகும். அம்மனத்தினையே கருவியாகக்கொண்டு பலவற்றையும் சாதித்து முடிக்கலாம். இயல்பில் மனிதனுக்கு ஒரு காரியம் மயக்கத்தினையும் மலைப்பினையும் கொடுக்கிறது என்றால் அவன் மனத்தில் திண்ணிய நல்லியல்புகள் அமைந்தில்லாததே காரணமாகும்.

## மனத்தளர்ச்சி கூடாது

எக்காரியத்தையும் செய்து முடிப்பதற்கு அருமையானதாக இருக்கின்றதே என்று எண்ணுதல் கூடாது. மேற்கொண்டுள்ள ஒரு செயலினை அருமை உடையதென்று எண்ணிவிட்டால் மனத் தளர்ச்சி ஏற்பட்டு விடும். மனத் தளர்ச்சிக்கு இடம் கொடுத்துவிட்டால் முயற்சி செய்வதும் தடைபட்டுவிடும்.

தம்முடைய சிறுமையை நோக்கிக் காரியத்தினைப் பெரிதாக எண்ணி மலைப்பதும் உண்டு. எத்தகைய காரியமாக இருந்தாலும 'ஆள்வினையுடைமை' என்கின்ற விடாமுயற்சி வெற்றியினைத் தந்தே தீரும். எக்காரணத்தினாலும் எச்செயலைக் கண்டும் எக்காலத்திலும் 'அசாவாமை' வேண்டுமென்று ஆசிரியர் குறிப்பிட்டுக் கூறுகின்றார். அசாவாமை என்பது மனததளர்ச்சியில்லாமையென்பதே யாகும்.

விடாமுயற்சி என்பது மனத் தளர்ச்சியினைப் போக்கும். மனத்தளர்ச்சி ஏற்படுவதற்கு ஒரு காரியம்

அருமையானதாக இருக்கின்றதே என்று எண்ணுவதே யாகும். மனத் தளர்ச்சியில்லாதவர்கள் மேற்கொண்ட தொழிலினைப் பெருமையாக முடிப்பார்கள்.

## தளரா முயற்சியே தனிச்சிறப்பு

தளரா முயற்சி பெருமை தரும். ஒரு செயலினைச் செய்து முடித்தல் பெருமையான காரியமாகும். அப்பெருமையினை முயற்சியானது உண்டாக்கித் தரும். அதனால்தான் எல்லாவற்றிற்கும் முதன்மை யாக வைப்பதுபோல அசாவாமை வேண்டும் என்று கூறுகின்றார்.

எழுச்சிக்கும், முயற்சிக்கும் மனமே காரணமாக அமைந்துள்ளது. அம்மனத்தைக் கொண்டு உறுதி யாகச் செயல்படுவார்கள். ஒரு தொழிலினைச் செய்ய எண்ணியபொழுது செய்வதற்கு அருமையானதென்று இதனை நினைக்கமாட்டார்கள். 'அருமையுடைத் தென்று அசாவாமை வேண்டும்' என்று தொடங்கப் பெறுகின்ற குறட்பா இவ்வுண்மையினை மெய்ப்பிக் கின்றது.

அருமையான காரியம் என்று நினைப்பதற்குக் காரணங்கள் பலவாகவுண்டு. தம்முடைய அளவுக்கு மீறியதாயிற்றே என்று எண்ணிவிட்டால் முடித்து விடக் கூடிய காரியம் கூட முடிக்கமுடியாத அரிய காரியமென்று தோன்றிவிடும். அதனால்தான் 'அருமை யுடைத்தென்று அசாவாமை வேண்டும்' என்பதாகக் கூறினார்.

மனத்தளர்ச்சிக்கு இடம் கொடுக்காமல் தொழிலினை மேற்கொண்டு விட்டால் அதனை முடிப்பதற்குள்ள பெருமையை விடாமுயற்சியானது கொடுத்துவிடும். செயலினை முடிப்பதில்தான் பெருமை என்கின்ற சிறப்பு அடங்கி இருக்கின்றது. 'அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்—பெருமை முயற்சி தரும்.'

## அதுவே ஊன்றுகோல்

விடாமுயற்சியானது தொழிலினை முடிக்கின்ற பெருமையினைக் கொடுத்துவிடும் என்பதனை வற்புறுத்த வேண்டியே இக் குறட்பா 'பெருமை முயற்சி தரும்' என்று முடிந்தது. இக் குறட்பாவில் முதற்கண் கூறப்பட்டுள்ள அருமை உடைத்து என்பது சிந்திக்கத் தக்கதாகும்.

அசாவாமையினைக் கொண்டுவிட்டால் அரிய தொழிலும் எளிமையாகவே முடியும். மனிதனுக்குள்ள மனித மனத்திலுள்ள அருமையான ஆற்றலினை அறிந்து கொள்ளாத காரணத்தினால்தான் செய் தொழிலில் மயக்கம் பலருக்கு உண்டாகி விடுகின்றது.

ஒருவன்பால் இயல்பாகவே அமைந்திருக்கின்ற முயற்சி என்பதனுடைய அருஞ்சிறப்பினைத் தெளிவாகவும் விளக்கமாகவும் அறிந்து கொள்ளுதல் வேண்டும். முயற்சி என்பதனைப் போன்றதொரு பேராற்றல் எதுவுமே இல்லை.

மனிதன் மேன்மைக்கு முயற்சியே ஊன்றுகோலாகும். முயற்சி என்பது எளிதில் அறிந்து கொள்ள முடியாத தன்மை என்றே கூறலாம். என்றென்றும் வளரும் தன்மையிலுள்ளது முயற்சியாகும். செல்வம்

பெருக்கிற்கு முதன்மையான காரணமாக அமைந்துள்ளது முயற்சியேயாகும். செல்வத்தினைத் தேடித் தருவதும், காப்பதும், வளர்ப்பதும் முயற்சியாகும்.

## எல்லாம் முயற்சியே

செல்வம் என்று கூறுகின்றபொழுது உலகியல் வழக்கில பேசப்படுகின்ற பொருட் செல்வம் என்பது மட்டுமல்ல. உலக வாழ்க்கைக்குத் தேவைப்படுகின்ற எல்லாவகையான செல்வங்களையும் முயற்சி கொடுத்தே தீரும். முயன்று தேடும் மனப்பண்பாடு ஆறறிவு படைத்த மக்கட் பிறவிக்கே உண்டு.

மேலும் மேலும் ஓங்கி உயரக் கூடிய எண்ணங்களையுண்டாக்குவது முயற்சியேயாகும். ஆதலால் தான் 'முயற்சி திருவினையாக்கும்' என்று ஆசிரியர் மிகப் பெரிய கருத்தினைச் சுருக்கமாக அமைத்துக் காட்டினார். 'திருவினை' என்பது ஒருவன் அடைய வேண்டிய செல்வத்தினை எல்லாம் குறித்தது. முயற்சி தான் செல்வத்தினை உண்டாக்கி வளர்ப்பதாகும்.

முயற்சியில்லையென்றால் மனிதத் தன்மையிலிருந்து ஒருவன் தாழ்ந்தவனாகிவிடுவான். முயற்சியில்லாதவன் மனித வாழ்க்கையினை நடத்தவும் முடியாது.

முயற்சியில்லாத குணம் வறுமையில் கொண்டு வந்து விடும். முயறசியில்லாதவன் வறுமையடைவான் என்பது திட்டவட்டமான உண்மையாகும், என்பதை வற்புறுத்த வேண்டியே குறட்பா ஒன்றில் 'புகுத்தி விடும்' என்று கூறினார். அதாவது, வறுமையினை அவனுக்கு உண்டாக்கிவிடும்.

வறுமையே இன்மை

இல்லாத தன்மையினை 'இன்மை' என்று கூறு கிறார். ஒருவருக்கு இன்மை உண்டாகிவிட்ட தென்றால் அதற்குக் காரணம், 'முயற்சியின்மை' என்பதேயாகும். 'முயற்சி திருவினை யாக்கும்; முயற் றின்மை-இன்மை புகுத்திவிடும்' முயற்சி செய்யாதிருப் பவன் வறுமையில் வாடியே தீர வேண்டும் என்பது அறுதியிட்டுக் கூறப்பட்டது.

எதுவுமே இல்லாதவன், துன்பத்திலும் வறுமை யிலும் வாடுதல் இயல்பேயாகும். 'இன்மை' என் பதனைப் பொதுப்படக் கூறி 'எதுவுமேயில்லாதவ னாகி விடுவான்', என்பதும் குறிப்பாக உணர்த்தப் பட்டது. முயற்சியின்மைதான் ஒருவனுக்கு இன்மை யினைப் புகுத்திவிடுவதாகும். செல்வாக்குகளையெல் லாம் ஆக்கித் தருவது முயற்சியேயாகும். ஆதலால் 'தான் முயற்சி ஆக்கும்' என்றும் கூறினார்.

தானாகவே எதுவும் உண்டாகும் என்று எண்ணி யிருத்தல், அறியாமையாகும். ஆகும்படிச் செய்வதும் இல்லாதபடிச் செய்வதும் முயற்சி உடைமையாலும் இல்லாமையாலும் என்பதனை முறையே பகுத் துணர்ந்து கொள்ளுதல் வேண்டும். ஆதலால்தான் முயற்சியினை முதன்மையாக வைத்து மிகப் பெரிய செல்வாக்கினை உண்டாக்கும் என்று கூறினார்.

பொருட் செல்வம்

உலகியல் வாழ்க்கையில் செல்வங்களைப் பல துறைகளில் வைத்து வரிசைப் படுத்திப் பேசினாலும் பொருட் செல்வம் என்பது யாவருக்கும் சிறப்பாக

அமைந்திருத்தல் வேண்டுமென்பது உண்மையிலும் உண்மையாகும். பொருட் செல்வமில்லை யென்றால் இவ்வுலகில் வாழ முடியாது.

உலகம் என்பது பொருட் செல்வத்தில் இருந்து வருவதாகும். மக்கள் வாழ்க்கையினை அளவிட்டுப் பார்க்கின்ற பொழுது பொருட் செல்வத்தினை முதன்மை யாக வைத்துப் பேசுவது உலக மக்களிடையே நிலை பெற்றுள்ள வழக்கமாகும். ஆதலினால் இவ்வுலகில் மக்களிடையே வாழ்பவர்கள் பொருட் செல்வத்தினைப் போற்றிக் கருதுதல் வேண்டும்.

பொருட் செல்வத்தினை நன்கு மதித்தல் வேண்டும். ஒருவருக்கு, கல்வியறிவும் நற்குணங்களும் அரிய பண்பாடுகளும் அமைந்திருந்தாலும் பொருட் செல்வமில்லையென்றால் உலக மக்களால் மதிக்கப் படுதல் இல்லாமற் போய்விடும்.

இவ்வுலகில் வாழும் மக்கள் பொருளில்லாதவர் களாக ஆகிவிட்டால் வாழ்க்கையினை நடத்த முடியா தென்பது எல்லோரும் அறிந்த உண்மையாகும்.

## மதிப்பைத் தரும்

பொருட் செல்வத்தைப் பெற்றிராத ஒருவன் தன்பால் இருக்கும் ஏனைய தன்மைகளினால் மக்கள் மதிக்க வேண்டும் என்று எண்ணுதல் தவறாகவே முடியும். பொருளில்லாதவர்களை மற்றவர்கள் மதிகக மாட்டார்கள் என்பது மட்டுமல்ல, இகழ்ந்து பேசுவார்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.

பொருள் படைத்த ஒருவன் மக்கட்கு இருக்க வேண்டிய ஏனைய அரிய பண்பாடுகளைப் பெற்றிரா

விட்டாலும் எல்லோராலும் மதிக்கக் கூடிய சிறப்பினைப் பெறுவான்.

செல்வம் பெற்றிருக்கின்ற ஒருவரை அவர் தெரிந்தவர் தெரியாதவர், அறிந்தவர், அறியாதவர், நண்பர், நண்பரல்லார் என்ற பாகுபாடு இல்லாமல் எல்லோருமே சிறப்புச் செய்வார்கள். இது உலகியல் வழக்கம்.

ஆதலால்தான் பொருட் செல்வம் இல்லாதவர்கள், புறக்கணிக்கப்படுவார்கள் என்பதை அறிந்துணர்தல், வேண்டும். பொருட் செல்வம் உடையவர்களைக் கண்டால் மற்றவர்கள் தம்மைத் தாழ்த்திக் கொண்டு செல்வமுடையவரை உயர்த்துவர்.

'இல்லாரை எல்லாரும் எள்ளுவர்; செல்வரை எல்லாரும் செய்வர் சிறப்பு!' இக்குறட்பாவில் 'எள்ளுவர்' என்ற கருத்தினைச் சிந்திக்க வேண்டும். பலராலும் இகழப்படும் நிலைக்குப் பொருளில்லாதவன் வந்து விடுவான். உலகில் செயல்படுகின்ற அனைத்திற்கும் பொருட் செல்வம் இருந்தாக வேண்டுமென்பது வெளிப்படையான கருத்தாகும்.

அதனைப் பெற்றிராதவன் தனக்கும் மற்றவர்கட்கும் பயன்படாதவனேயாவான் என்பதனால் 'எல்லாரும் எள்ளுவர்' என்று கூறினார். மற்றவர்களால் இகழப்படும் நிலைமையில் வாழ்தல் மனிதப் பிறவிக்கு இழிவானதாகும். எல்லா மக்களும் இகழ்ந்து பேசுவர் என்று கூறினார்.

குறிப்பிட்ட காரணங்களினால் ஒருவன் இகழப் படுகின்றானென்றால் அவன் எல்லோராலும் இகழப் படுகிறான் என்பது அன்று. ஆனால் பொருட் செல்வ மில்லாதவனோ எல்லோராலும் இகழப்படுவான்.

## பொருளின்மையும் இகழ்ச்சியும்

ஒரு தொழிலுக்குப் பெற்றிருக்க வேண்டிய ஆற்றல்களை ஒருவன் பெற்றிராவிட்டால் அவனுக்கு அது குறைவுதான். அப்படிப்பட்டவன் உலக மக்கள் எல்லோராலும் இகழப்படுவான் என்று கூற முடியாது.

ஆனால் பொருளில்லாதவனோ எல்லா மக்களாலும் இகழ்ந்தே பேசப்படுவான். பொருளீட்டல் வேண்டும் என்கிற உண்மையினை இவ்வாறெல்லாம் கூறினார். பொருட் செல்வம் பெற்றிருப்பவனிடம் எல்லோரும் தாமாகவே சென்று 'உயர்வினை' அச் செல்வமுடைய வனுக்கு ஆக்கித் தருவர் என்பதை 'செய்வர் சிறப்பு' என்று கூறியதால் புலப்படுத்தினார்.

எல்லா மக்களாலேயுமே இகழப்படுகின்ற தன்மை யில் ஒருவன் வாழக் கூடாது. பொருளில்லாதவனை இகழ்தலும் பொருளுள்ளவனைச் சிறப்பித்தலும் இயல் பாகும். ஆதலால்தான் பொருள் இருப்பவனையும் பொருள் இலலாதவனையும் தெளிவாக்க் காட்டுகின்ற முறையில் 'எல்லாரும் எள்ளுவர்' என்றும், 'எல்லாரும் செய்வர் சிறப்பு' என்றும் குறிப்பிட்டுக் காட்டினார்.

'எல்லாரும்' என்று பொதுப்படக் கூறினமையால் எள்ளுதல் செய்வதும் சிறப்புச் செய்வதும் உலக

மக்களிடையே இருக்கின்ற பொதுப் பண்பாகும் என்பது கூறப்பட்டது. இகழ்ந்து பேசுகின்ற ஒருவனே சிறப்பித்துப் பேசுவான் என்பது குறிப்பாகும்.

## உலகியல் வழக்கம்

எல்லாத் தீமைகளையும் ஒருவன் உடையவனாக இருந்தாலும் அவனிடத்தில் பொருட் செல்வம் இருந்து விடுமேயானால், எல்லோரும் அவனுக்குச் சிறப்புச் செய்யச் செல்வார்கள் என்பதாகும். ஒருவனிடத்தில் எல்லாவிதமான தன்மைகளும் இருந்தாலும் அவனிடத்தில் பொருட் செல்வம் இல்லாதிருக்குமானால் அவன் எல்லாருடைய இகழ்ச்சிக்கும் ஆளாக வேண்டிவரும்.

'சிறப்பு' என்பதனைப் பொருட் செல்வம் ஒருவனுக்கு உண்டாக்கித் தரும். எல்லாரும் என்று கூறியதால் பொதுமக்கள் என்று மட்டும் கொள்ளாமல் உற்றார், உறவினர், சுற்றத்தார் என்றும் கொள்ளுதல் வேண்டும். ஆதலால்தான் பொருள் செய்து வாழ்தல் வேண்டும் என்பதனை ஆசிரியர் வ்ள்ளுவனார் மிகவும் வற்புறுத்திக் கூறுகின்றார்.

பொருள் இல்லாதவர்களுக்கு இவ்வுலகம் இல்லையென்றும் எடுத்துக்கூற ஆசிரியர் தயங்கவில்லை. பொருளில்லாதவர்களை வறியவர்கள் என்றே கூறுவார்கள். வறுமையாளர்கள் இகழ்ச்சிக்கு ஆளாகுதல் இயல்பானதாகவே முடியும்.

சிறப்புச் செய்தல் என்பது பொருள் பெற்று இருப்பதனால் ஏற்படும் பயனாகும். பொருளுடையவன் தான் விரும்பாவிட்டாலும் மற்றவர்களே வலியவந்து சிறப்புச் செய்தலைப் பெறுபவன் ஆகின்றான்.

ஆதலால் உலகில் வாழ்கின்றவர்கள் பொருட் செல்வத்தை மிகச் சிறந்ததாகக் கருதி அதனைத் தேடுதல் வேண்டும். பொருட் செல்வத்தினால் எத்தனையோ செயல்களைச் செய்தல் முடியும் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

'பொருள்' என்றும் 'செல்வம்' என்றும் கூறப்படுகின்ற பொருட் செல்வம் மிகவும் சிறப்பு வாய்ந்தது என்று குறிப்பிட்டுப் பேசப்படுவதற்குக் காரணம், அப்பொருளினால் செய்து முடிக்கக்கூடிய செயல்கள் பலவாகும் என்பதனாலேயே ஆகும்.

நினைத்த செயலினை வெற்றியுடன் முடிக்கும் ஆற்றலுக்குப் பொருட் செல்வம் மிகுதியும் துணையாக நிற்கும். பொருளுடையவர்கள் அப்பொருளின் துணையால் தப்பாமல் காரியத்தைச் செய்து முடிக்க முடியும். செய்யக்கூடிய செயலினை இருந்த இடத்திலிருந்தே செய்து முடிக்கக்கூடிய வன்மையினையும் பொருட் செல்வம் அளிக்கும்.

## ஒளி விளக்கு

ஒளிதருகின்ற விளக்கானது அது இருக்கும் இடத்தில் மட்டும்தான் இருட்டினைப் போக்கும். பொருட் செல்வத்தின் சிறப்பினைக் கூறவந்த ஆசிரியர், அச் செல்வம் நினைத்த தேசத்திற்குக் சென்று இருளினைப் போக்கும் என்று அருமையாகக் கூறுகின்றார்.

பொருளினால் உண்டாகக் கூடிய பயனையும் சிறப்பினையும் மகிழ்ச்சியினையும் உணர்த்தும் பொருட்டு அச்செல்வம் இருளினைப் போக்குவதாகும் என்றார். எல்லா மக்களுக்கும், எலலாக் காலத்திலும்

இன்றியமையாத ஒன்றாக இருக்க வேண்டும் என்பதைக் கருதி அணையாத விளக்கு என்றும் பொருட்செல்வத்தினைச் சிறப்பித்தார்.

இதனைப் 'பொய்யா விளக்கம்' என்று குறட்பா கூறுகின்றது. பொருளினைப் பெற்றிருக்கும் ஒருவன் தான் இருக்கும் இடத்திலிருந்து மிகமிகத் தொலை தூரத்தில் செய்து முடிக்க வேண்டிய செயல்களையும் செய்து முடிக்க முடியும் என்பது குறிக்கப்பட்டது. ஆதலால் 'பொருள் என்னும் பொய்யா விளக்கம்' என்று ஆசிரியர் அமைத்துக் காட்டுகின்றார்.

## ஆற்றல் மிகுந்த விளக்கு

ஏனைய விளக்குகளுக்கும் பொருட்செல்வம் என்கிற விளக்கிற்கும் உள்ள வேறுபாட்டினையும் கூறுகின்றார். ஒளி தருகின்ற விளக்கு தொலை தூரத்திலுள்ள இருட்டினைப் போக்காது. அது அருகிலுள்ள இருளினைத்தான் போக்கும். ஒருவன் நினைத்த இடத்தில் இருக்கும் இருளினைப் போக்க வல்லது பொருட்செல்வம் என்பதனை விளக்கிக் கூற வந்த ஆசிரியர், 'இருள் அறுக்கும் எண்ணிய தேயத்துச் சென்று' என்பதாகக் கூறுகின்றார்.

பொருட் செல்வம் பெற்றவன் இவ்வுலகில் தான் நினைத்த இடத்திற்கெல்லாம் செல்ல முடியும் என்பதும், அவ்விடங்களிலெல்லாம் எண்ணியதைச் செய்ய முடியும் என்பதும் ஆழ்ந்த பொருளாகக் கூறப்பட்டது.

உலகத்தில் தேசங்கள் பலவாக இருத்தலுண்டு. அந்தந்த தேசத்து நிலைமை பலவகைகளில் வேறுபட்

டிருத்தலும் உண்டு. மிகவும் தொலைவான தொலை தூரங்களில் தேசங்கள் இருப்பதும் உண்டு.

பற்பல விதமான வேறுபாடுகளையும் மாறுபாடு களையும் உடையதாக இருந்தாலும், அப்படிப்பட்ட தேசங்களிலும் எண்ணியபடியே செயலினைச் செய்து முடிக்கும் ஆற்றிலினைப் பொருட்செல்வம் தவறாமல் தந்துவிடும். «பொருள் என்னும் பொய்யா விளக்கம் இருளறுக்கும் எண்ணிய தேயத்துச் சென்று'.

பொருளுடையவன் நினைத்த தேசத்திறகெல்லாம் செல்லுகின்ற வன்மையினைப் பொருட் செல்வம் பெற் றிருக்கின்றது. எல்லா தேசத்திற்கும் பொருட்செல்வம் செல்ல முடியும். பொருட்செல்வம் செல்லாத இடமே இல்லை. ஒருவன் மனதில் எத்தனையோ எண்ணங்கள் தோன்றலாம்.

## எண்ணியது முடியும்

அத்தனை எண்ணங்களும் செயற்பட்டுப் பயனளிக்கும் என்று கூறிவிட முடியாது. ஆனால் பொருட் செல்வம் பெற்றிருப்பவன் எண்ணியதை முடிப்பான் என்பதும் உணர்த்தப்பட்டது. பொருளு டையவன் தான் செல்லாமலேயே பொருளினை அனுப்பிச் செயலினை முடிப்பான் எண்ணிய தேசத்திற் குச் சென்று அங்குள்ள இருளினைப் போக்க வல்லது என்ற சிறப்பு வற்புறுத்தப்பட்டது.

இருள் என்று கூறுகின்றபொழுது பகைமை என்று கொள்ளுதல் பொருந்தும். பகைமையையே வெல்லக் கூடிய வன்மை பொருளுக்குத்தான் உண்டு என்று கருதுகின்ற போது, பிற செயல்களையெல்லாம்

பொருள் எளிமையாக முடிக்கும்என்பது பெறப்பட்டது. இக்குறட்பாவில் இருள் அறுக்கும் என்று அமைந்துள்ள சிறப்பு, பலகாலும் சிந்திக்கத் தக்கதாகும்.

## பொய்யா விளக்கம்

பகைவர்களை அஞ்சி ஓடும்படி செய்துவிடக் கூடிய வல்லமை பொருட் செல்வத்திற்கு உண்டு. நினைத்த செயலினைத் தப்பாமல் முடிக்க வல்லது என்பதைக் குறிக்கவேண்டியே பொய்யா விளக்கம் என்று கூறினார்.

விளக்கத்தினைத் தரக் கூடியவைகள் உலகில் பற்பலவாக அமைந்துள்ளன. அவற்றினின்றும் வேறு படுத்திக் காட்டுகின்ற முறையில் 'பொருள் என்னும் பொய்யா விளக்கம்' என்பதாகக் கூறினார்.

எண்ணிய தேசத்தில் நினைத்ததையெல்லாம் முடிக்க வல்லது பொருட் செல்வம் என்று கூறிவிட்டபடியால் இருக்கும் தேசத்தில் எல்லாவற்றையும் எளிதாகச் செய்து முடிப்பான் என்பது தெளிவுபடுத்தப் பட்டது. பொருளினால் முடிக்கக் கூடிய செயல்களை எண்ணிப் பார்த்து வரிசைப்படுத்திக் கூறுதல் முடியாததாகும்.

ஆதலினால் மிகவும் அருமையான காரியத்தினைச் செய்ய வல்லது பொருள் என்று குறிப்பிட்ட பிறகு ஏனைய காரியங்களை யெல்லாம் எளிமையாகவே செய்து முடிக்க முடியும் என்பதாயிற்று.

அறிந்து கொள்ள முடியாமலும் புரிந்துகொள்ள முடியாமலும் இருக்கின்ற பலவற்றையும் பொருட் செல்வம் தெளிவுபடுத்தி அறிந்து கொள்ளும்படியும் புரிந்துகொள்ளும்படியும் செய்துவிடும். தேசங்கள் என்பன ஆயிரக்கணக்கான கற்களுக்கப்பால் இருப் பவைகளாகும் என்ற உண்மை யாவரும் அறிந்ததே யாகும்.

## எண்ணிய தேசம்

அப்படிப்பட்ட தேசங்களுக்குச் செல்லவேண்டு மென்றால் செல்லும் வழிகள் பலவாக இருக்கும். நிலத் தின் வழியும் நீரின் வழியும் வானத்தின் வழியும் பயணங்கள் நடைபெறுவதைப் பார்க்கின்றோம்.

மக்கள் செய்கின்ற பயணங்களையே இவ்வழிகள் காட்டுகின்றன. அப்படியெல்லாம் பயணம் செய்ய வேண்டிய நிலையில் இருப்பன தேசங்களாகும். அங்கே யெல்லாம்கூட பொருட்செல்வம் சென்று வெற்றி யினைத் தேடித்தரும் என்று ஆசிரியர் கூறுவதைவிட பொருட் செல்வத்தின் சிறப்பினை வேறு எந்த வழியிலும் எந்த முறையிலும் கூற முடியாதென்றே சொல்லவேண்டும். ஆதலால், பொருட் செல்வத்தினைத் தேடுதல் எவ்வளவு இன்றியமையாத ஒன்று என்பது வற்புறுத்தப்பட்டது.

பகையினையும் ஒழிக்கும் என்று பொருட் செல்வத் தின் சிறப்பினைக் கூறிக் காட்டியதால் அறத்தினை யும் இன்பத்தினையும் அப்பொருட் செல்வம் எளிதில் அடையும்படிச் செய்யும் என்பதை உணர்ந்தோம்.

ஒருவன் இன்பமாக வாழவேண்டு மென்றால் அவன் பகைவர் இல்லாமல் இருந்தாகவேண்டும்

என்பதைச் சுட்டிக் காட்டவே இருள் அறுக்கும் என்று கூறிச் செல்வம் செய்யும் செயல்களில் அதனை முதன்மையாக வைத்துக் கூறினார். தொழில்களை மேற்கொண்டு செய்பவர்கள் பொருட் செல்வத்தினை நிறைய வைத்திருக்கவேண்டும்.

தொழில் செய்தல் என்பது மக்கள் வாழ்க்கையில் என்றென்றும் நிகழ்ந்தாக வேண்டிய ஒன்றாகும். ஆதலால்தான் பொருட் செல்வமும் என்றென்றும் இருக்கவேண்டும் என்ற குறிப்பினைப் புரிந்து கொள்ளுதல் வேண்டும்.

## தொழிலும் கையில் பொருளும்

கையில் பொருளில்லாமல் தொழிலினைச். செய்ய முயல்பவர்களும் உண்டு. அப்படிப்பட்டவர்களுக்கு என்றென்றும் அச்சமும் வருத்தமும் மனதில் இருந்து கொண்டே இருக்கும்.

தன் கையில் பொருளில்லாமல் பிறரிடத்தில் இருக்கும் பொருளினை நம்பியும் கருதியும் தொழிலில் ஈடுபடுபவர்களும் உண்டு. அப்படிப்பட்டவர்களும் அச்சமில்லாமலும் துன்பமில்லாமலும் தொழிலினைச் செய்தல் இயலாது என்பது குறிப்பிடப்பட வேண்டியதாகும். எப்பொழுதும் தொழில் செய்பவர்கள் தங்கள் கையில் பொருளினை வைத்திருத்தல் வேண்டும்.

அப்படிச் செய்ய முற்படுவானேயானால் எக்காலத்திலும் அவன் அஞ்சவேண்டியதில்லை. மற்றவர்களை ஏவி வேலையினைச் செய்து முடிப்பான். எக்காலத்

திலும் மன அமைதி பெற்று இனிமையாக இருந்து செயலினைச் செய்து முடிப்பான்.

தொழில் செய்கின்ற பொழுது எக்காலத்திலும் எதிர்பாராத இடையூறுகள் வருதல் நேரிடும். அக் காலங்களில் தொழிலை மேற்கொண்டுள்ளவன் வருத்தங்கொண்டு அச்சமுறுவான். தொழில் தடை படும் தன் கையில் பொருளினை வைத்துக் கொண்டு இருப்பவனுக்கு எந்த இடையூறும் துன்பத்தினைத் தராது.

தன் கையில் பொருளில்லாமல் தொழிலினை மேற் கொண்டவன் அமைதியுடனிருப்பானென்றும் கூறவும் முடியாது. பொருட்செல்வம் அளிக்கும் மாபெரும் உதவியினை அருமையான உவமையின் மூலம் ஆசிரியர் வள்ளுவனார் எடுத்துரைக்கின்றார்.

## யானைப்போர்

யானைப் போர் என்பது யானைகள் ஒன்றோ டொன்று சண்டையிட்டுக் கொள்வதாகும். பழங் காலத்தில் மன்னர்கள் யானைப்போரினை நடத்தி வேடிக்கை பார்ப்பார்கள் என்றும் கூறுவதுண்டு.

போர்க்களத்தில் போரிடுகின்ற போர்களை யானைப் போராக ஆசிரியர் குறிப்பிடவில்லை. இரண்டு யானைகள் போர் செய்கின்றன என்றால், அவைகள் கோபம் கொண்டு ஒன்றோடொன்று போரிடுகின்றன என்பதே பொருளாகும்.

பார்ப்பதற்கு யானைப் போர் மலைப்பையும் வியப்பையும் தருவதாகும். யானைப்போர் பார்ப்பதற்கு அச்சத்தைக் கொடுக்கும். ஆதலால் யானைகள் போர்

செய்கின்ற இடத்தில் அருகில் நின்று அப்போரினை யாரும் பார்க்க விரும்பமாட்டார்கள்.

தூரத்தில் இருந்துகூட யானைப் போரினைக் காணுதல் கடினமே யாகும். 'ஒரு வேளை யானைகள் துரத்தி வந்தால் என்ன ஆகுமோ?' என்று அஞ்சி தொலை தூரத்தில் நின்றுகூடப் போரினைப் பார்க்க அஞ்சுவது மனித இயல்பேயாகும்.

அப்படியே யானைப் போரினைப் பார்க்க ஆசை வைத்து மிகமிகத் தொலை தூரத்தில் நின்று கொள்வதும் பயனில்லாமல் போய்விடும். ஏனென்றால் அவ்வளவு நெடுந்தொலைவிலிருந்து போர் செய்தலினைக் காணுகல் முடியாததாகும்.

## குன்றின் மீது நின்று

தொழில் மேற்கொண்டு செய்தல் என்பது அருமையானது என்பதனை எடுத்துக் காட்டவே யானைப்போர் ஒன்றினைக் காட்சியாக்கிக் காட்டி ஆசிரியர் விளக்கம் தருகின்றார். மக்கட் பிறவியில் அருமையான செயல் தொழிலினை மேற்கொண்டு நடத்தல் என்பதும் உணர்த்தப்பட்டது.

'குன்றேறி யானைப் போர் கண்டற்றால்' என்பதாகத் தொடங்கப் பெறுகின்ற குறட்பா இவ்வுண்மையினைத் தெள்ளத் தெளிய புலப்படுத்துகின்றது.

யானைப் போர் செய்யும்பொழுது அச்சமில்லாமல் அமைதியாக இருந்து அதனைப் பார்க்க வேண்டுமென்றால் அப்படி விரும்புகின்றவன் மலையின்மீது ஏறி அங்கு இருந்து கொள்ளுதல் வேண்டும். குன்றின் மீது

இருந்து யானைப்போர் காண்பவனை ஆசிரியர் கூறு கின்றார்.

யானைகள் குன்றின்மீது ஏறி வருதல் முடியாத ஒன்றாகும். எவ்விதமான அச்சத்தினையும் குன்றின் மீது நிற்பவன் கொள்ள மாட்டான். சிறிதளவுகூட அவனுக்கு மனக்கலக்கம் ஏற்படாது. முதலிலிருந்து கடைசி வரையில் இன்பமாகவும் மனநிறைவுடனும் அவன் யானைப் போரினைக் காணுவான்.

தன் கையில் பொருளினை வைத்துக் கொண்டு தொழிலினை மேற்கொண்டவன் குன்றின்மீது நிற்ப வனுக்கு ஒப்பாவான் என்பதாகும். தன் கையில் பொருளினை வைத்திருப்பவன் மற்றவர்களுக்குக் கட்டளையிட்டுத் தொழிலினைச் செய்து முடித்தலும் முடியும்.

குன்றின்மீது நிற்பவன்

குன்றின்மீது நிற்பவன் மிகுந்த உயரத்தில் இருப்பவனாகின்றான். தன் கையில் பொருளிருக்குமே யானால் அவ்வாறு பொருட் செல்வமுடையவன் உயர்ந் திருக்கும் நிலையினைப் பெறுவான். 'தன் கைத்து' என்று குறட்பாவில் அமைக்கப்பட்டுள்ளது.

அதாவது பொருள் தன்னுடைய கையிலே இருந் தாக வேண்டும் என்பதாகும். அப்படிப்பட்டவன் ஒரு வினையினை மேற்கொண்டால் தட்டுத் தடையின்றிக் காரியத்தை முடிப்பான் என்பது உறுதியாகும். தன்

கையில் பொருளிருப்பதால் தொழில் செய்வதில் வல்லவர்களைக் கொண்டு தொழிலினைச் செய்துமுடிப்பான்.

'தன்கைத்து ஒன்று உண்டாகச் செய்வான் வினை' என்று குறட்பா முடிகின்றது. தன் கையிலே பொருள் இருக்கும்படியாக வைத்துக்கொண்டு ஒரு தொழிலினைச் செய்பவனுடைய செய்கையானது எப்படிப் பட்டதென்றால் ஒருவன் மலைமேல் ஏறி நின்று யானைகளது போரினைக் காணுவதைப் போன்றது என்று விளக்கம் தரப்படுகின்றது. 'குன்றேறி யானைப் போர் கண்டற்றால் தன்கைத்து ஒன்று—உண்டாகச் செய்வான் வினை.'

## தொழில் நுணுக்கம்

'செய்வான் வினை' என்று கூறியதால் கையில் பொருளினை வைத்துக் கொண்டு செய்பவனது செயல் வெற்றியாகவே முடியும் என்று குறிப்பிடப்பட்டது. பூமியில் நின்று போர் புரிகின்ற யானைகளையும் அவை செய்கின்ற போரினையும் இனிதாகக் காணுவதற்குக் குன்று உதவியாக நின்றது.

இத்தகைய காட்சி ஒன்றினை நம் கண்முன் ஆசிரியர் வள்ளுவர் நிறுத்திக் காட்டினார். பொருளின் அருமையை எடுத்துக் கூற வேண்டிக் காணுதற்கு அருமையான யானைப் போரினைக் காட்டினார். தொழிலினை மேற்கொள்ளுதல் எத்தகைய சிறப்பானது என்ற உண்மை மெய்ப்பிக்கப்பட்டது.

செயலில் இறங்காத மக்கள் அரிய காரியங்களைச் செய்பவர்களாக மாட்டார்கள். தொழிலினை மேற்கொண்டு செய்பவர்களையே இவ்வுலகம் பாராட்டும்.

இத்தனைக்கும் அடிப்படையாக பொருட் செல்வத்தின் அருமை குறிக்கப்பட்டது.

குன்றின் மேல் ஏறுதல் என்பது உயர்ந்து போகுதல் என்பதைக் குறிப்பால் உணர்த்திற்று. உலக வாழ்க்கையில் பொருட் செல்வம் மேலோங்கிச் செல்லும் வழியினை உண்டாக்குவதாகும். குன்றின்மேல் ஏறாதவன் யானைப் போரினைக் காணுதல் முடியாததாகும். பொருட் செல்வத்தினைத் தன் கையில் பெற்றிராதவன் அரிய செயலினைச் செய்தல் முடியாது.

பொருளும் செயலும் ஒன்றோடொன்று இணைந்திருக்கும் தன்மையினை உடையவைகளாகும். யானைப் போரும் குன்றேறி நிற்பவனும் அக்குன்றும் தொழிலினை மேற்கொண்டவனும் அத்தொழிலில் தன் கையிலுள்ள பொருளும் ஆகிய இவைகளனைத்தையும் ஒன்றுபடுத்தி ஆழ்ந்து, சிந்தித்து உண்மையினை உணர்தல் வேண்டும்.

## கூர்மையான கருவி அதுவேயாகும்

பொருள் என்பதனைக் கூர்மையான ஆயுதம் என்றே ஆசிரியர் குறிக்கின்றார். அதற்கு இணையாக ஆயுதம் வேறு எதுவுமே இல்லையென்று கூறுகின்றார். ஆதலினால் ஒருவன் தனக்கு, உயர்வும், பெருமையும், புகழும் ஆகிய இன்னபிறவும் விரும்பினால் அவன் பொருளினைத் தேடுதல் வேண்டும்.

அவ்வாறு சேர்த்த பொருள் அவனுக்குப் பெரும் படையினையும் சிறந்த நட்பினையும் உண்டாக்கிக் கொடுக்கும். பொருள் பெற்றிருப்பவனிடம் நண்பர்கள் பலர் துணையாக வந்து நிற்பார்கள்.

பகைவர்களே செல்வமுடையவனுக்கு இருக்க முடியாது என்று கூறிவிடலாம். ஏனெனில் பொருட் செல்வம் என்கின்ற கூர்மையான ஆயுதம் பகைமையை ஒழித்துவிடும்.

பகைவர்களின் செருக்கினை அழித்து ஒழிக்கும். ஆதலால்தான் 'செருநர் செருக்கறுக்கும் எஃகு' என்பதாகப் பொருட் செல்வத்தினைக் கூறினார்.

## அரிய ஆயுதம்

'எஃகு' என்பது 'செருநர்' என்று கூறக் கூடிய பகைவர்களைக் கெடுக்கின்ற ஆயுதமாகும். செருக்குள்ள பகைவர்களை அடக்குதல் கடினமான தொன்றே யாகும். பகைவர்கள் எப்பொழுதும் செருக்குடனே இருப்பார்கள். அவர்களின் செருக்கினை அறுப்பது பொருட் செல்வத்தின் வலிமையேயாகும்.

இப்பொருட் செல்வம் என்கிற ஆயுதத்தினைவிட கூர்மையானது வேறு எந்த ஆயுதமும் இல்லையென் பதைக் குறிப்பாகவும், சிறப்பாகவும் சுட்டிக் காட்ட வேண்டி 'அதனின் கூரியது இல்' என்று குறட்பாவினை முடித்தார்.

மிகச் சிறந்த படைக்கலம் இப்பொருட் செல்வ மாகும். கூர்மையான ஆயுதம் பகைவர்களை அழிப் பதற்கு மட்டும்தான் பயன்படும் என்பது அல்ல.

பகைவர்கள் தன்னைத் தாக்குகின்ற பொழுது தடுத்துக் காப்பாற்றிக் கொள்ளப் பெருந்துணையாக இருப்பதும் இந்த ஆயுதமேயாகும்.

ஆதலால் உலகத்தில் வாழுகின்ற வாழ்க்கையினை நன்கு அமைத்துக் காட்டி அவ்வாழ்விற்குத் தேவைப் படுகின்ற பொருட் செல்வத்தினைப் பல வகைகளில் அமைத்து உண்மையினைப் புலப்படுத்தினார்.

'செய்க பொருளை' என்று குறட்பா தொடங்கப் பெறுகின்றது. இந்த அமைப்பு நன்கு சிந்திக்க வேண்டியதாகும். பொருட் செல்வத்தினை நல்லபடியாக ஈட்டுதல்வேண்டும் என்பது வற்புறுத்தப்பட்டது. 'பொருளைச் செய்வீர்களாக' என்று கூறுகின்றார்.

பொருளினைச் சம்பாதிக்க வேண்டும் என்பதே கருத்தாக அமைந்தது. தனக்கு மேலாக இருப்பவனாக நினைத்துக் கொண்டிருப்பவனைப் பொருட் செல்வமுடையவன் அச்செல்வத்தின் துணையால் தனக்குக் கீழாகக் கொண்டு வருதலும் முடியும்.

## செய்க பொருளை அதுவே எஃகு

பொருள் சம்பாதிக்கும் வழிகள் பலவகைகளாக இருப்பதனால் எல்லாவற்றிற்கும் பொதுவாக அமைத்து 'செய்க பொருளை' என்று கூறினார். பொருள் அதிவிரைவில் நினைத்ததைச் செய்து முடிக்கும் ஆற்றல் உள்ளது என்பதற்காகவே கூர்மையான ஆயுதத்தைக் குறிப்பிட்டுக் காட்டினார். 'எஃகு' என்பது கூர்மையான ஆயுதமாகும்.

எப்பொழுதுமே கூர்மையான ஆயுதம் விரைந்து பாயும் தன்மையுடையது. கண்ட மாத்திரத்திலேயே மற்றவர்களுக்கு அச்சத்தினை உண்டாக்குவது. அத்தகைய பற்பல உண்மைகளை வைத்துப் பொருட் செல்வத்தினைக் கணக்கிடுதல் வேண்டும்.

"செய்க பொருளை செருநர் செருக்கறுக்கும்—எஃகு அதனின் கூரியது இல்." இக்குறட்பா பொருட் செல்வத்தினைவிட மிகுந்த சக்தி வாய்ந்தது வேறு எதுவுமே 'இல்' அதாவது இல்லை என்ற பொருளில் முடிகின்றது.

## வல்லமை மிகுந்தது

கூர்மையான ஆயுதங்களை வரிசைப்படுத்திப் பார்த்தால் எல்லா ஆயுதங்களையும்விட கூர்மையான ஆயுதம் பொருட் செல்வமேயாகும். இக்குறட்பாவில் பன்முறையும் சிந்தித்துப் பார்க்க வேண்டியது 'செருநர் செருக்கறுக்கும்' என்கின்ற குறிப்பே யாகும்.

இவ்வுலகில் வாழ்கின்ற மக்கள் பொருளோடு வாழ்தல் வேண்டும் என்கின்ற கருத்தினை உறுதிப் படுத்தவேண்டித்தான் பல துறைகளிலும் பொருட் செல்வத்தினால் ஆற்றப்படும் செயல்களைக் கூறினார்.

வையத்துள் வாழ்வாங்கு வாழவேண்டியவன் பொருளினைத் தேடியே வாழ்தல் வேண்டும். அதனால் அறமும் இன்பமும் அவன் பெறுகிறான் என்பது மட்டுமல்ல; அவன் கடமைகள் அனைத்தையும் செய்து முடிக்கத் தகுதி உள்ளவனாகவும் வல்லமையுள்ளவனாகவும் ஆகின்றான். வாழும் உயிர்கள் அனைத்தும் இன்பத்தை நோக்கியே வாழ்கின்றன. ஆதலால்,

உயர்ந்த பிறவியாகிய இங்கே அடையவேண்டிய இன்பங்கள் அனைத்தையும் பொருட் செல்வம் அளிக்கின்றது.

பேரின்பத்தை நாடிச் செல்பவர்கள் அருளுடையவர்களாக இருத்தல் வேண்டுமென்பது அறங் கூறும் பேருரையாகும். அருளென்பது எல்லா உயிர்களின் மேலும் அன்பு மிகுதியாகச் செலுத்தப்படுவதாகும்.

எல்லோரும் அருளுடையவர்களாக இருத்தல் அரிது. ஆசையற்று, துறவறப் பெருமையில் வாழ்பவர்களே அருளாளர்கள் எனப்படுவர். அப்படிப்பட்ட அருளறம் எல்லோருக்கும் கிடைப்பதில்லை. கிடைப்பதும் முடியாததாகும்.

## அருட் செல்வத்தின் அரிய சிறப்பு

முயன்று பெறுகின்ற பொருட் செல்வம் எல்லோருக்கும் கிட்டுதல கூடும். 'அருட் செல்வம்' என்பதோ எல்லோருக்கும் அமைந்துவிடும் ஒன்று அன்று. பேரினப உலகம் என்று சிறப்பிக்கப்படுகின்ற அருளின்பத்தில் வாழ்பவர்கள் அரிதாக இருப்பர். தவமுனிவர்களும், அவா அறுத்தவர்களும் மேம்பட்ட ஒழுக்கத்திலே நின்றவர்களும் அருள் பெறுதல் முடியும்.

பேரின்ப உலகத்திற்கு அருள் பெறுதலே வாயிலாகும்; வழிகாட்டியாகும். எலலாம் அதுவேயாகும் என்றுங் கூறலாம். அருளில்லாமல் தவமில்லை. அருளிலலாமல துறவு இல்லை. அருளிலலாமல் பேரின்ப உலகமே இல்லை.

அருளில்லாதவர்கள் பேரின்ப உலகத்தினை நினைத்தல் கூடாது; நினைத்தாலும் கை கூடாது. அத்தகைய சிறப்பு வாய்ந்த அருளறத்தை எடுத்துக் கொண்டு பொருட் செல்வத்தினை ஆசிரியர் வள்ளுவனார் விளக்கித் தருகின்றார். அருளாளர் களுக்குப் பொருளோடு கூடிய தொடர்பு எதுவுமே இருக்காது.

பொருட் செல்வம் இவ்வுலகிற்கு எத்தகைய சிறப்பான உறுப்பாக அமைந்திருக்க வேண்டும் என்று வற்புறுத்த வேண்டியே பொருளினை விளக்குவதற்கு அருளறத்தைச் சுட்டிக் காட்டினார்.

கடுந் தவத்தினாலும், நிறைந்த ஒழுக்கத்தினாலும் ஒருவன் அருளறந் தேடுதல் வேண்டும். அதுபோலவே இவ்வுலகில், உலகத்தோடு ஒட்டி வாழ்பவர்கள் அரிய முயற்சியினாலும் நிலைத்த உழைப்பினாலும் பொருட் செல்வத்தினைத் தேடுதல் வேண்டும்.

பொருட் செல்வத்தினைப் பெற்றில்லாதவர்களுக்கு இவ்வுலகத்தில் இடமில்லை என்றே கூறுகின்றார். இவ்வுலக இன்பம் அவர்களுக்குக் கிடையாது என்பது குறிப்பாகும்.

பொருட் செல்வத்தின் இடத்தினை வேதாந்தச் செல்வமும் நிரப்புதல் முடியாது. அருட் செல்வம் இல்லாதவர்கள் வேறு செல்வத்தைக் கொண்டும் அருளறத்தினைச் செய்தல் முடியாது. அருள் இல்லாத வர்களுக்குப் பேரின்ப உலகம் இல்லவே இல்லை என்பதைத் திட்டவட்டமாக ஆசிரியர் உணர்த்து கின்றார்.

பொருளில்லார்க்கு இவ்வுலக இன்பம் இல்லை என்று கூறியதன் குறிப்பு, அவர்களுக்கு என்றென்றும் துன்ப வாழ்க்கையே இருப்பதாகும் என்ற கருத்து வெளிப்படையாகவே கூறப்பட்டது. அருளுலகம் என்றும் பொருளுலகம் என்றும் இரண்டாகப் பிரித்துக் காட்டினார்.

அந்தந்த இன்பங்களைச் சுட்டி உணர்த்த வேண்டியே இரண்டு வகையான உலகத்தினையும் குறித்துக் காட்டினார். பொருளினால் இவ்வுலகம் ஒருவனுக்கு இன்பத்தைக் கொடுக்குமென்றும் அருளினால் அவ்வுலகம் இன்பத்தைக் கொடுக்கும் என்றும் மெய்ப்பித்தார்.

## பேரின்ப உலகு

அவ்வுலகம் என்பது பேரின்ப உலகத்தையே யாகும். கால அளவினால் மிகவும் குறுகியதாய், விரைவில் தோன்றி மறைவதாய் நிலையில்லாததாய் இருக்கின்ற அனைத்தையும் சிற்றின்பங்களென்று கூறுவதுண்டு. என்றென்றும் மாறாததாய், நிலைத்து நிற்பதாய், உலக உயிர்களுக்கெல்லாம் பயனுள்ளதாய் இருக்கக்கூடிய இன்பத்தினைப் பேரின்பம் என்றும் கூறினார்.

பிறந்து இருந்து வாழ்கின்ற உலகம் ஆனபடியால் 'இவ்வுலகம்' என்று குறிப்பிடப்பட்டது. கடுந்தவம் புரிந்து, அருளறம் பூண்டு மிகமிக அரிதாய்ப் பெறக் கூடியது பேரின்பமானபடியால் அதனை அவ்வுலக மென்றும் கூறி வைத்தார்.

'அருளிலார்' 'பொருளிலார்', 'அவ்வுலகம், இவ்வுலகம்' என்ற கருத்தினை வைத்துக் குறட்பா அமைக்கப்பட்டுள்ளதாகும். 'அருளிலார்க்கு அவ்வுலகமில்லை பொருளிலார்க்கு—இவ்வுலக மில்லாகி யாங்கு.' பொருளினையும் இவ்வுலகத்தினையும் உதாரணமாகக் காட்டி அருளறத்தின் சிறப்பினைக் கூறினார்.

இரண்டு முறையும் 'இல்லை' என்று குறிப்பிட்டுத் தெளிவு பெறுமாறு உண்மையினைக் கூறினார். 'உலகம் இல்லை' என்று கூறப்படுவதெல்லாம் அந்தந்த உலகத்தில் இல்லையென்பதே பொருளாகும்.

பேரின்ப உலகம் என்பது அருள் உலகமாகும்; அருள் மயமானதாகும். அதுவே எல்லாமாகும். 'இவ்வுலகம்' என்பது பொருளுலகமாகும். பொருளினால் நிலவி வருவதாகும். பொருட் செல்வத்தினாலே நடத்தப்பட்டு வருவதுமாகும்.

## அருளும் பொருளும்

பொருட் செல்வத்தினை விட அருட்செல்வத்தின் பெருமை சிறப்புடையது என்று உலக இலக்கணம் கூறும். அத்தகைய அருட்செல்வத்தினைச் சிறப்பித்துக் கூற வந்த ஆசிரியர் இவ்வுலகத்தின பொருட் செல்வத்தினை முன்வைத்துக் காட்டினார் என்பது ஆழ்ந்து சிந்திக்க வேண்டியதொன்றாகும்.

பொருட்செல்வம் குறைந்து வருகின்ற நிலைமை ஏற்பட்டாலும் மீண்டும் அப்பொருட் செல்வத்தினைப் பெருக்கி உயர்த்திக் கொள்ளுதல் முடியும். அருட் செல்வம் அப்படிப்பட்டதல்ல. அருளறத்தினின்று

ஒழுக்கம் குறைந்து அழிபவன் மீண்டும் அருள்பெறுதல் முடியாததாகும்.

அத்தகைய பெருமை வாய்ந்தது அருட்செல்வ மாகும். பெருமை நிறைந்த அருட் செல்வத்தின் பெருஞ் சிறப்பினைத் தெளிவு படுத்துவதற்காகவே பொருட் செல்வத்தினை முன் வைத்துக் காட்டினார்.

பொருட் செல்வத்தை நன்கு ஈட்ட வேண்டியதும் காக்க வேண்டியதும் இன்பம் நுகர வேண்டியதும் குறிப்பால் உணர்த்தப்பட்டன. பொருளில்லாமல் வாழ விரும்புதல் தவறு என்பதும் ஊன்றி உணரப்பட வேண்டியதாகும்.

பொருளில்லாதவர்கள் இவ்வுலகில் வாழ வேண்டும் என்று எண்ணுவதே தவறு என்று கூறுதல் மிகை யாகாது. அதனால்தான் பொருளின் சிறப்பினை எத்தனை வழிகளில் கூறமுடியுமோ அத்தனை வழிகளிலும் சிறப்பாக அமைத்துக் கூறினார்.

அருள் உள்ளவர்கள் எல்லா உயிர்களின் மேலும் கருணை செலுத்துவார்கள் என்று கூறுவதைப் போல பொருட் செல்வமுடையவர்கள் அச்செல்வத்தினால் எல்லோராலும் சிறப்புச் செய்யப் பெறுவர் என்பதும் குறிப்பாயிற்று.

## பொருளினைக் காத்தலும் ஈகையும்

ஆதலால்தான் பொருளினைச் செலவு செய்வது எவ்வாறு என்ற குறிப்பில் ஆசிரியர் பொருளினைக் காப்பாற்றும் வழியினைக் கூறுகின்றார். பொருளு டையவர்கள் பண்பு நிறைந்தவர்களாகவும் அறம்

வளர்ப்பவர்களாகவும் கொடை செய்பவர்களாகவும் இருத்தல் வேண்டும் என்பது உலகியற் கருத்தாகும்.

பொருட்செல்வத்தினை உடையவர்கள் ஈகைத் தன்மையுடைவர்களாக இருத்தல் வேண்டும் என்று கூறினாலும், அதற்கும் அளவு உண்டு என்பதை ஆசிரியர் கூறுகின்றார். பொருட்செல்வம்பெற்றவர்கள் பொருளினைப் போற்ற வேண்டுமென்றும் அதனைக் காப்பாற்ற வேண்டுமென்றும் கூறுகின்றார்.

'ஈகை' என்று சொல்லப்படுகின்ற மிகப் பெரிய பண்பாட்டினை மக்கட் பிறவி எடுத்தவர்களெல்லாம் பின்பற்ற வேண்டும் என்பது சிறந்த பொன்னுரையாகும்.

ஆனால் அப்படிப்பட்ட ஈகைத் தன்மையினையும் அளவுடனே இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும். பிறருக்குக் கொடுப்பதை சிறப்பான செயல் என்று சொன்னாலும் அளவறிந்து கொடுக்கவில்லையென்றால் அது அறியாமையின்பாற்பட்ட செயலாகும்.

## அளவும் ஈகையும்

பொருட் செல்வமுடையவர்கள் உலகில் அளவினைக் கருதுகின்றபொழுது பலவகையினராக இருத்தல் கண்கூடாகும். எல்லோருமே ஒரே வகையில் ஒரே அளவில் ஈகையைச் செய்தல் கூடாது. அவரவர்கள் தங்களுக்குள்ள அளவினைக் கருதியே ஈகையும் செய்தல் வேண்டுமென்று தெளிவுறுத்துகின்றார்.

தன்னிடமுள்ள பொருட் செல்வத்திற்கு ஏற்றவாறு அளவுடன் ஈகையினைச் செய்யாதவன் அறிவில்லாதவனே யாவான். 'அளவறிந்து ஈக' என்றொரு கருத்தினைக் குறட்பா ஒன்று சிறப்பாகக் கூறுகின்றது.

அளவு என்று கூறுகின்றபொழுது ஈகைத்தன்மையினால் பொருளினைப் பிறர்க்கு அளிக்கும் அளவினையே கூறுகின்றார். பொருள் வைத்திருப்பவர்கள் அளவுக்கு மீறி ஈதல் கூடாது. பொருட் செல்வத்தினை சுருக்கமான செலவினால் காத்து வருதல் வேண்டும் என்கின்றார்.

அப்படிச் செய்வதனால் பொருட் செல்வம் தன்னை விட்டு நீங்காது என்பதாகும். 'பொருளினைப் போற்ற வேண்டும்' என்பதற்குப் பொருளாக விளக்கம் கூறுகின்ற பொழுது, அளவறிந்து செலவு செய்தலையே கூறுகின்றார். பொருள் போற்றி வழங்கு நெறி என்பதைக் கூறிக் குறட்பா ஒன்று முடிகின்றது.

## ஈகை செய்க

பொருளினைக் காப்பாற்றிக் கொண்டு நடக்க வேண்டிய வழி என்னவென்று விளக்கம் தருகின்ற இடத்தில் அளவறிந்து ஈகை செய்தலே அந்த வழியாகும் என்றுதெளிவாக்குகின்றார். பிறருக்குக் கொடுக்கும் தன்மையினை ஆசிரியரும் பாராட்டியே கூறுவார். ஆனால் அந்த முறை அளவுடன் இருத்தல் வேண்டும். 'ஆற்றின் அளவறிந்து ஈக' என்பது குறட்பாவின் முதற் பகுதியாகும்.

அளவு என்பது தான் வைத்திருக்கும் பொருட் செல்வத்தின் அளவை அறிந்து செலவு செய்ய வேண்டியதாகும். பிறருக்குக் கொடுக்கும் வழி என்பதைக் குறிக்க வேண்டிய குறட்பா 'ஆற்றின்' என்று தொடங்கிற்று. அதாவது கொடுக்கும் வழியினைக் கூறுகின்றது என்பதேயாகும் 'ஆற்றின் அளவறிந்து ஈக அது பொருள்—போற்றி வழங்கு நெறி.'

வாழவேண்டிய வழிமுறைகளை அறிந்து வாழாதவன் வாழ்க்கை சீர்குலைந்துவிடும் என்பது தெளிவான உண்மையாகும். அளவறிந்து ஈதல் வேண்டும் என்று கூறியதால் பொருளுள்ளவர்கள் அளவு கண்டு ஈகை செய்தேயாகவேண்டும் என்பது குறிப்பாக வைக்கப்பட்டது.

ஈகை செய்யாதவன் அப்படி இருப்பதற்குக் காரணமாகப் பொருளைக் காப்பாற்றுகின்ற வழி என்று கூறுவானே யானால் அது அறிவில்லாத் தன்மையாகும். பொருளினைச் சேர்ப்பதற்குப் பல நல்ல வழிகள் இருப்பதுபோல் அதனைக் காப்பாற்றுவதற்கும் நெறிகள் பலவுண்டு.

## ஈகை செய்தலும் அளவறிதலும்:

பொருளினைப் போற்றி வழங்கும் நெறியினை அறியாதவன் தன்னுடைய தகுதிக்கு மீறி ஈகையினைச் செய்வான். அது தவறு. பிற செலவினங்களையும் மேற்கொள்ளுவான். ஈகையினைச் செய்தாலும் பிற செலவுகளைச் செய்தாலும் தனக்குள்ள பொருளின் அளவைக் கண்டே செய்தல் வேண்டும் என்பதனை

நன்கு அறிவுறுத்துகின்றார். ஈகை செய்தலுக்கு அளவுண்டு என்கின்ற உண்மை கூறப்பட்டது.

'பொருள்தனைப் போற்றி வாழ்' என்றகருத்தினை இக்குறட்பா கொடுத்துக் கொண்டிருக்கிறது. அள வில்லாதவன் வாழ்க்கை தவறாக முடியும் என்பது உலகறிந்த உண்மையாகும்.

சொற்களினை அரிதாக அளவிட்டுக் கூறும் ஆசிரியர் பொருள் போற்றி வழங்க வேண்டும் என்று கூறியதால் தன்னுடைய பொருள் அழியாமல் காத்துக் கொள்ளப்படும் என்ற உண்மையும் புலப்படுத்தப் பட்டது.

பொருள் வருவாய் அதிகமாக இல்லையே என்று கவலையுறுதல் பொருத்தமானது அன்று. பொருள் வருவாய் காலத்தினால் பெருகிக் கொண்டு போதல் இயற்கையின் வழிமுறையாகும். அப்படியே பொருள் வருகின்ற வழி சிறிதாக இருந்தாலும் ஒருவனுக்குக் கெடுதி வந்து விடாது.

### வழிகள்

ஆனால் அவன் உன்னிப்பாகக் கவனிக்க வேண் டியது பொருள் போகின்ற வழியேயாகும். தன் கையி லிருந்து பொருள் போகின்ற வழி விரிந்து கொண்டே போனால் அவன் கேடுறுதல் உறுதியேயாகும். உலக இயல்பில் பொருள் வருகின்ற வழி பெரிதாக இல் லையே என்றுதான் பலரும் எண்ணுவது உண்டு.

பொருள் வருகின்ற வழி சிறிதுதான் என்றாலும் அவ்வழி சிறிதாகி விட்டபடியால் தீங்கு நேரிடும் என்று சொல்ல முடியாது. அப்படிச் சொல்லவும் கூடாது. பொருள் வருகின்ற வழி சிறுகச் சிறுகப் பெரிதாகும். ஆனால் போகின்ற வழியோ பெரிதாகிக் கொண்டு போகக் கூடாது. பொருள் போகின்ற வழி அதாவது செலவு செய்யும் வழி அகலமாகி விட்டால் துன்பமே நேரிடும்.

## ஆகு ஆறு போகு ஆறு

அதனால் பொருள் போகின்ற வழி விரியாமலிருக்கப் பார்த்துக் கொண்டால், சிறிதான வழியில் பொருள் வந்தாலும் ஒருவனுக்குத் தீங்கு நேரிடாது. 'ஆகு ஆறு' 'போகு ஆறு' என்ற இரண்டினைப் பிரித்துக் காட்டிப் பொருட் செல்வத்தினை ஆசிரியர் பேசுகின்றார். பொருள் வருகின்ற வழியினை 'ஆகு ஆறு' என்றும் பொருள் போகின்ற வழியினைப் 'போகு ஆறு' என்றும் ஆசிரியர் குறிப்பால் உணர்த்துகின்றார்.

'போகு ஆறு' எக்காலத்திலும் அகலாமல் இருக்கப் பார்த்துக் கொள்ளவேண்டும். 'போகு ஆறு அகலாக் கடை' என்று குறட்பா சொல்லுகின்றது. 'அளவு இட்டிது ஆயினும் கேடில்லை' என்று கூறுகின்ற பேருண்மை சிந்திக்கத் தக்கதாகும்.

இட்டிது என்பதற்குச் 'சிறிது' என்று பொருளாகும். ஒருவனுக்குக் கெடுதி வந்துவிடுமேயானால் அதற்குக் காரணம் அவனுக்குப் பொருள் வருகின்ற

வழி சிறியதாக இருக்கிறது என்பது அல்ல; அவரிடத்தி லிருந்து பொருள் போகும் வழி அகலமாகிவிட்டதுதான் கெடுதிக்குக் காரணமாகும்.

வருகின்ற வழி சிறிது என்று கூறியதால் வரவும் செலவும் ஒத்திருந்தாலும் கெடுதி என்பதே குறிப்பாகும். செலவு செய்வதையே 'போகு ஆறு' என்று கூறினார். குறட்பாவினை நன்கு சிந்தித்து உணர்தல் வேண்டும். "ஆகுஆறு அளவுஇட்டிது ஆயினும் கேடில்லை— போகுஆறு அகலாக் கடை". என்று வலியறிதலுக்குக் கூறியது பொருள் செயல் வகைக்கும் பொருந்தும்.

செலவு செய்யும் வழியினைச் சிறிதாக்கிக் கொள்ளும் பழக்கத்திணைப் பொருளுடையவன் பெற்றிருக்கிறான். ஆதலினால் பொருள் போகும் வழியினைச் சிறிதாக்கிக் கொள்ளுதல் அவனால் எளிமையாக முடிக்கப் படுவதொன்றாகும்.

பொருள் வைத்திருப்பவன் கையில் இருந்து பொருள் போவதே செலவுக்குரிய வழியாகையால் அதனை அளவிட்டுச் சுருக்கிக் கொள்ளுதல் பொருளுடையவனால் முடியும்.

'வருகின்ற வழி' என்று பேசுகின்ற பொழுது பிறிதோர் இடத்திலிருந்து பொருள் வர வேண்டியிருப்ப தால் வருகின்ற வழியினை விருப்பம்போல் பெரிதாக்கிக் கொள்ளுதல் எளிதானல்ல.

ஆனால் பொருள் தன்னிடமிருந்து போகும் வழியை விருப்பம்போல் சிறிதாக்கிக் கொள்ளவும் முடியும். முயற்சியினால், ஊக்கத்தினால், உழைப்பினால், அரிய மன எழுச்சியினால் சேகரிக்கப்

படுகின்ற பொருள் போற்றப்பட வேண்டும் என்பதனை நன்கு தெளிய வைத்தார்.

## அளவறிந்து வாழ்தலே வாழ்க்கை

வருவாய் உள்ளவரும் கெட்டுவிடுவதற்குக் காரணம் எதுவாக இருக்க முடியுமென்பதனையும் எளிமையாக விளக்கிக் கூறினார். அளவறிந்து வாழாதவன் வாழ்க்கைக் கெட்டுவிடும் என்பது தெளிவாகக் கூறப்பட்டதென்றாலும் அவ்வாறு கெட்டுவிடுகின்ற முறைகளையும் ஆசிரியர் வெளிப்படுத்துகின்றார்.

அப்படிப்பட்டவனின் வாழ்க்கை சிறிது காலத்துக்கு நடந்து வருவதுபோலவே தோன்றும். பிறகு அவ்வாழ்க்கை இல்லாமலே போய்விடும். அளவறிந்து வாழாதவன் வாழ்க்கை கெட்டுப்போகின்ற தன்மை தொடக்கத்தில் தெரியாது. கெடுதியில்லாதது போலவே தோன்றும். 'உளபோல' என்ற சொல்லினை ஆசிரியர் கூறுகின்றார்.

பார்ப்பதற்கு அவ்வாழ்க்கை இருப்பது போலவே தோன்றுமாம். ஆனால் உண்மையில் அவ்வாழ்க்கை இல்லாததாகவே ஆகிவிடும். தோற்றத்தில் வாழ்க்கை நடப்பதுபோல இருக்கும். காலம் செல்லச் செல்ல அப்படிப்பட்ட தோற்றமும் இல்லாமல் கெட்டு அழியும் என்பதாகும்.

## தோன்றும் தோற்றம்

அளவறிந்து வாழாதவனுடைய நிலைமை கெடுதியுறும் என்பது திண்ணம். குறட்பாவின்

தொடக்கத்திலேயே 'அளவறிந்து வாழாதான்' என்று ஆசிரியர் கூறுகின்றார்.

வாழ்தல் என்பது ஈதலும் நுகர்தலும் ஆகும். அளவு கடந்து செல்லுமேயானால் வாழ்க்கை கெடுதி யுறும். வருகின்ற கெடுதி உடனுக்குடனே அறிந்து கொள்ள முடியாததானபடியால், 'வாழ்க்கை' உள்ளது போலவே காட்டி உண்மையில் இல்லாததாகத் தோன்றிப் பிறகு அத்தோற்றமும் மறைந்துவிடும்.

வாழ்க என்றும் பொருளீட்டி வாழ்க என்றும் கூறுகின்ற ஆசிரியர் அளவறிந்து வாழ்க என்பதை மிகவும் வற்புறுத்தி வைத்தார். 'அளவறிந்து வாழா தான் வாழ்க்கை உளபோல—இல்லாகித் தோன்றாக் கெடும்'. தோன்றாக்கெடும் என்று முடித்து வைத்ததனால் இருந்த இடமே தெரியாமல் போய்விடும் என்பது குறிப்பாயிற்று.

உலகில் எப்படியும் வாழ்ந்துவிடலாம் என்பது அன்று, அளவோடுதான் வாழ்தல் வேண்டும். அளவில் லாமல் வாழ்வது பொருளில்லாத நிலைமையினை உண்டாக்கிவிடும். தொடக்கத்திலேயே செலவினங் களைச் சுருக்கிக்கொள்ளுதல் வேண்டும்.

### பாதுகாத்தல்

ஏனென்றால் கெடுதி வருவது தொடக்கத்தில் தெரியாது என்று கூறுகின்றார். வாழ்க்கை நடந்து வருவது போலவே தோன்றுமாதலால் கெடுதிக்கு ஆளாக்கப்படுபவனும் அதனை உணராதவன் ஆகிவிடுகின்றான்.

வாழ்ந்து வருகின்ற வாழ்க்கை 'திடும்' என்று மறைந்துவிடாது என்றும் கூறுகின்றார். அளவு என்று கூறப்படுவதால் வருவாயின் செலவு செய்யப் படும் அளவும் குறிப்பிடப்பட்டது.

பொருட் செல்வத்தினுடைய சிறப்பான தன்மை யினைக் குறிக்கும்பொருட்டே அதனை மிகவும் பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணத்தையும் வற்புறுத்தவே இவ்வாறு அளவிட்டுக் கூறினார்.

நிலைபெற்று இருக்கக் கூடிய வாழ்க்கையினையே விரும்புதல் வேண்டும். கெட்டு மறைகின்ற வாழ்க்கை அறிவுடைமைக்குப் பொருத்தமாகாது. வாழ்க்கையினை நிலை நிறுத்தச் செய்வதும் பொருட் செல்வம் என்பதேயாகும்.

பொருட் செல்வத்தினுடைய இன்றியமையாத் தன்மையினையும் அதனைக் காப்பாற்ற வேண்டிய அருமையான வழிமுறைகளையும் கூறியதனால், பொருளைக் கொண்டு பொருள் படைத்தவன் செய்ய வேண்டிய அறமான செய்கைகளையெல்லாம் வெறுத்து நீக்கி ஈகை என்பதையே மறந்து மனிதத் தன்மைக்குப் புறம்பாக வாழ வேண்டும் என்பது அன்று. பொருட் செல்வத்தினை நல்ல முறையில் பயன்படுத்த வேண்டும் என்பது அறிவுடையோர் செயலாகும்.

### ஈகை செய்யாமல் இருத்தலே கூடாது

பொருளினைக் காப்பாற்றுவதாக நினைத்து உலோபியாக வாழுதல் மனிதப் பிறவிக்கு

இலக்கணமாகாது. பொருளைக் காப்பாற்றுவது என்பது ஈகைத்தன்மையினையும் அறச்செயல்களையும் நீக்கிவிடுவது என்பதாகாது. பொருள் படைத்தவன் ஈதலைச் செய்யாமல் இருப்பானேயானால் அவன் எடுத்த மானிடப் பிறவியே இழிபிறவியாகக் கருதப்படும்.

'உலகமே பொருளினால்தான் நடைபெறுவதாகும்' என்று கூறிக்கொண்டு யாருக்குமே எவ்வித ஈதலையும் செய்யாது வாழ்பவன் மயக்கமுள்ள தாழ்ந்த பிறப்பினன் என்றே கருதுதல் வேண்டும்.

பொருள் படைத்தவன் உலோபி என்ற பெயருக்கு ஆளாகக் கூடாது, எல்லாம் என்ற ஒரு சொல்லினை கருத்தாழத்துடன் குறட்பாவில் அமைத்துக் காட்டுகின்றார். 'இம்மை' என்றும், 'மறுமை' என்றும் பேசப் படுகின்ற எல்லாவற்றுக்கும் பொருள்தான் காரணம் என்று கூறிக்கொண்டு பிறருக்கு எந்தவிதமான ஈகையும் செய்யாதிருப்பவர்கள் உண்டு.

அப்படிப்பட்டவர்களை 'மருளான்' என்று ஆசிரியர் அழைக்கின்றார். அப்படிப்பட்டவன் அறிவில்லாத் தன்மை என்கிற மயக்கத்தை உடையவன் என்பதே பொருளாகும். அவனை 'மாணாப் பிறப்பு' என்றும் கூறுகின்றார். அதாவது மனிதத் தன்மை என்பதைப் பெற்றிராத பிறவி என்பதாகும்.

## தாழ்ந்த பிறவி

தான் பொருட் செல்வத்தைப் பெற்றிருந்தும் வறியவர்களுக்கு அதனைக் கொடுக்க வேண்டும்

என்கிற அறிவினை அவன் பெறாததால் இழிவான பிறவியுடனேயே சேர்த்து எண்ணப்படுகின்றான். பொருளினைச் சம்பாதிக்க வேண்டும் என்று எண்ணி உழைத்து நல்ல முயற்சியினால் பொருளினை ஈட்டுகின்றபொழுது அப்பொருட் செல்வத்தினாலே தான் எல்லாம் நடக்கும் என்று உள்ளத்தில் கொண்டிருந்தான்.

அப்படிக் கொண்டு பொருளினைச் சேர்த்த பிறகு, அச்செல்வத்தினால் ஆகவேண்டிய பயனை அறியாதவனாக ஆகிவிட்டபடியால் அவனை 'மாணாப் பிறப்பு என்று கூறிவிட்டார்.

எல்லாவற்றிற்கும் அடிப்படையாக இருக்க வேண்டியது, எடுத்த மக்கட் பிறவிக்கு ஏற்றபடி மனிதத் தன்மையுடனே வாழ்தலாகும். 'பொருளானாம் எல்லாம் என்று' குறிப்புக் காட்டி குறட்பா ஒன்று தொடங்கப் பெறுகின்றது.

அளவிட்டும், எண்ணியும் சொல்லிவிட முடியாதபடி உலக நடைமுறையில் எல்லாவற்றிற்கும் பொருட் செல்வம் தேவை என்பதை எடுத்துக் காட்டவே 'பொருளானாம் எல்லாம்' என்று கூறினார். அவ்வாறு பொருளின் சிறப்பினை அறிந்து அதனைச் சம்பாதித்த பிறகு இவறுதல் செய்தல் என்பது அறிவின்மையாகும்.

## இவறுதல் கொடிய தீமை

'இவறுதல்' என்பது உலோபத் தன்மை என்பதைக் குறிக்கின்றது. ஈதல் என்பது வறியவர்

களுக்கு அளிப்பதாகும். அந்த ஈதலினைச் செய்யாதவன் ‘மாணாப் பிறப்பு’ உடையவனாகின்றான். ‘ஈயாது இவறும் மருளானாம் மாணாப் பிறப்பு’ என்று சொல்லி, குறட்பா முடிகின்றது.

மனிதப் பிறவிக்கு இருக்க வேண்டிய சிறப்பான இயல்பான பண்புகள் என்பன உண்டு. அத்தனைப் பண்புகளையும் பெற்றிருந்தான் ஒருவன், தன்னை மனிதப் பிறவி எடுத்தவன் என்று கூறிக்கொள்ளும் உரிமையினைப் பெறுபவன் ஆகின்றான்.

அவைகளில்லாவிட்டால் ஏனைய கீழான பிறவி களுக்கே அவன் ஒப்பாகின்றான். பொருட்செல்வம் என்பது ஒருவனுக்கு மட்டும் இன்பம் தருவது அல்ல. பொருளினைப் பெற்றிருப்பவன் பலர்முன் அச் செல்வத்தினால் இன்பம் அடைதலைக் கண்டு தானும் மகிழ்ச்சி அடைதல் வேண்டும். அந்த மகிழ்ச்சியினைப் பொருட் செல்வத்தினை வைத்திருந்தும் அடையாதவன் ‘மாணாப் பிறப்பு’ பெற்றவனாகின்றான்.

‘மாணாப் பிறவி’ என்பதனை நிறைவு பெறாத பிறவி என்று கூறுவர். பொருள் சம்பாதிப்பதற்கு முன்பாக அவன் வைத்திருந்த எண்ணமும் அறிவும் இருந்தபடி பொருளினைப் பெற்ற பிறகு அவனுக்கு இல்லாமல் போய் விட்டபடியால் அவனை ‘மருளானாம் மாணாப் பிறவி’ என்று குறிப்பிட்டார்.

சிறந்த முறையில் திட்ப நுட்பம் நிறைந்து குறட்பா அமைந்துள்ளது. ‘பொருளானாம் எல்லாம் என்று ஈயாது இவறும்— மருளானாம் மாணாப் பிறப்பு.’

இக்குறட்பாவில் ஆசிரியர் 'பிறப்பு' என்று குறித்துக் காட்டியதன் சிறப்பை நன்கு உணர்தல் வேண்டும். பிறப்பிற்கு ஏற்றவாறு ஒருவன் நடந்து கொள்ளவில்லையென்றால் பின்னர் அப்பிறவி அவனுக்கு எப்பயனையும் தராது.

மானிடப் பிறவி மற்ற பிறவிகளைவிடச் சிறந்ததென்பதற்குப் பல காரணங்களைக் காட்டினாலும் தனிச்சிறப்பு என்பது ஈகைத் தன்மையேயாகும். இந்த ஈகைத் தன்மையினை மனிதப் பிறவி எடுத்த எல்லோருமே பெற்றிருக்க வேண்டும் என்பது அறமேயானாலும் செல்வமுடையவர்கள் அதனை முதன்மையாக வைத்து வாழ்தல் வேண்டும். ஏனெனில் செல்வம் பெற்றிருப்பதன் பயன் ஈகைத் தன்மையைப் போற்றிக் காப்பாற்றுவதேயாகும்.

செல்வத்தினால் தான் பலவற்றினை நுகர்ந்து இன்பத்தினை அடைதல் வேண்டும். அதே போல ஈகைத் தன்மையினாலும் அவன் இன்பத்தினை அனுபவித்தல் வேண்டும். இந்த இரண்டு செயல்களினையும் செய்யும் ஆற்றலுக்கு ஆக்கமளிப்பது பொருட் செல்வமேயாகும்.

பொருள் ஈட்டுவதற்கு முன்பு நல்லறிவும் ஈட்டிய பின் புல்லறிவும் பெற்றுவிடுகின்றான் என்றால் அவன் அறிவில்லாத 'மருளான்' என்றே கூறப்பட வேண்டியவனாகிறான்.

'நல்லறிவு' என்று கூறியதால் பொருட் செல்வத்தினை நல்லன எல்லாவற்றிற்கும் பயன் படுத்த வேண்டும் என்று கருதியதேயாகும்.

பொருளினால் எல்லாம் முடியும் என்று எண்ணிய எண்ணத்தில் முதன்மையான ஈகைத்தன்மையும் சேர்ந்ததேயாகும்.

## பொருளால் பெற வேண்டிய பெரும் பயன்

பொருளீட்டிய பலர் தாங்கள் கூட அச் செல்வத்தினால் வரும் இன்பத்தினை அடையாதபடி இருக்கிறார்கள். 'கொடுத்தலும்' தான் அனுபவித்தலும் ஆகிய இரண்டும் பொருட் செல்வத்தின் பயன் என்று பொதுப்படக் கூறுதல் வேண்டும். இந்த இரண்டும் பொருட் செல்வத்தின் பயன் என்பதை அறியாதவர்கள் ஒன்றும் இல்லாதவர்களேயாகின்றார்கள்.

இயற்கையின் துணையினாலும் முயற்சியின் பயனாலும் கோடிக் கணக்கில் பொருட் செல்வத்தினைப் பெற்றிருப்பவர்களும் உண்டு. பற்பலர் கோடிக் கணக்கில் பொருட் செல்வம் அடைதலும் உண்டு. இதனை ஆசிரியர், 'அடுக்கிய கோடி' என்று கூறுகின்றார்.

அத்தகைய பெருஞ் செல்வம் பெற்றிருந்தும் ஒன்றுமே செய்யாதவனாக ஆகிவிட்டபடியால் அவனை ஒன்றுமே இல்லாதவன் என்று கூறுதலும் பொருந்தும். அவன் பெற்ற செல்வத்தினால் பயனே இல்லை என்று கூறுகிறார். அவன், செல்வம் பெற்றிருந்தும் செல்வம் பெறாதவனுக்குச் சமமாகின்றான்.

## இரு செயல்கள்

கொடுப்பது என்பதும் துய்ப்பது என்பதும் செல்வத்தினால் நடைபெற வேண்டிய இரண்டு அரிய செயல்களாகும். துய்ப்பது என்பது செல்வத்தின் பயனைத் தான் அனுபவிப்பதாகும்.

கொடுப்பது என்பது வறியவர்களுக்கு ஈதல் ஆகும். கொடுப்பதனால் வருகின்ற இன்பம், நிலை பெற்ற சிறந்த இன்பம் ஆனபடியால் 'கொடுப்பது' என்பதைக் கூறிக் குறட்பாவினைத் தொடங்கினார்.

கொடுப்பது என்பது பலரும் அனுபவிக்கின்ற இன்பமாகும்; மிகச் சிறந்த பயனுமாகும். தான் துய்ப்பது என்பது தனக்கு மட்டும் பெற்றுக் கொள்ளுகின்ற இன்பமாகும். இந்த இரண்டும் சிறந்த பயன்களாகக் கூறப்படுகின்றன. இந்த இரண்டினையும் செய்யாதவன் பெற்றிருக்கின்ற செல்வம் பயனுடைய செல்வமாகாது.

அது பயனில்லாததேயாகும். இந்த இரண்டு பயனையும் அவன் இழந்தவனாகின்றான். கோடிக் கணக்கில் செல்வமிருந்தும் ஒன்றுமே பயனில்லை யென்று கூறி முடிக்கின்றார். 'கொடுப்பதூஉம் துய்ப் பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய—கோடி உண்டா யினும் இல்.' மனிதப் பிறவி எடுத்தும் பயனில்லா தவர்களாக வாழ்கின்றனர் என்பதைச் சுட்டிக் காட்டினார்.

## பயனுள்ள செயல்களைச் செய்தே ஆக வேண்டும்

அடுக்கிய கோடி பெற்றிருப்பவன் எத்தனையோ பயனுள்ள செயல்களைச் செய்தாக வேண்டும். பெற்ற அச் செல்வத்தினால் நிலையான புகழினை நிலை நிறுத்துதல் வேண்டும். உலோபத் தன்மையுடன் வாழ்தல் கூடாது. இன்பத்தை நன்கு அனுபவித்தல் வேண்டும்.

அழியாத அரும் புகழினை நிலைநாட்டுவதற்குக் கொடுத்தல் என்பதே தலைசிறந்த வழியாகும். இத்தகைய இன்னும் இவை போன்ற எண்ணிறந்த பயனுடைய செயல்களை யெல்லாம் பெருஞ் செல்வம் படைத்தவன் செய்ய வேண்டியவனாக இருக்க, ஒன்றுமே செய்யாமல் இருப்பவனாகிவிட்டபடியால் ஒன்றுமே பயனில்லை என்று கூறி, 'இல்' என்று குறட்பாவினை முடித்தார்.

பயன் யாதுமே இல்லை என்பதாகும். இக் குறட்பாவில் கொடுப்பது என்பதை முன்வைத்தும், துய்ப்பது என்பதைப் பின் வைத்தும் அமைத்திருக்கும் முறை சிந்திக்கத் தக்கதாகும்.

அளவு கடந்த பொருளினைப் பெற்றிருக்கிறான் என்பதை, 'அடுக்கிய கோடி' என்பதால் குறிப் பிட்டார். ஐம்புலன்களாலும் அனுபவிக்க வேண்டிய இன்பத்தைத் துய்ப்பது என்றும் கூறினார். எனவே தான் பொருட் செல்வத்தினைப் பெற்றிருந்தால் மட்டும் மனிதப்பிறவி பெருமையுடையதாகி விடாது என்பது குறிப்பாயிற்று.

இதனால் பொருள் சம்பாதிப்பது மட்டும் ஒரு வனுடைய கடமை என்று எண்ணியிருத்தல் தவறு.

அதனைத் தக்க முறையில் பயன் படுத்துதலே அறிவுடைமையாகும். மனிதப் பிறவிக்கு உரிய அரிய பண்புகளில் 'அன்பு' என்பது தலையாய ஒன்றாகும்.

## அன்பு வாழ்க்கையே உயிர் வாழ்க்கை

அந்த அன்பு இல்லாதவன் எலும்பின்மேல் போர்த்தப்பட்ட வெறும் உடம்பினைப் பெற்றவன் என்று கூறப்பட்டது. அன்பில்லாதவன் பயனற்ற மிக இழிவான பிறவியைப் பெற்றவனாகிறான். அன்பு இல்லாதவன் மனிதத் தன்மையுடன் நடந்து கொள்ள மாட்டான். அன்பில்லாதவன் தனக்கும் மற்றவர்களுக்கும் பயன்படாதவனாகின்றான்.

தனக்குத் துன்பத்தினை உண்டாக்கிக் கொள்ளுவான்; தன்னையே வருத்திக்கொள்ளுபவனாகின்றான் என்றும் கூறப்பட்டது. பொருள் பெற்றவன் அன்பு பெறாமல் இருப்பானேயானால் அவன் அப்பொருளினால் துன்பமே அடைகிறான் என்பது குறிப்பாகும். துன்பப்பட்டுப் பொருளினைச் சேர்த்தவன் ஆனபடியால் துன்பப்பட்டவனாகின்றான்.

அறத்தின் தன்மையினை அறிந்து பொருளினைக் கொண்டு அறத்தோடு வாழாதவன் துன்பமே அடைவான். அன்பு பெற்று வாழ வேண்டியவன் அன்பினை நீக்கி வாழுகின்றான். அன்பு செய்வதை நீக்கியவனாகி விட்டால் அவன் மற்றவர்களுக்கு ஈதலே செய்யமாட்டான்.

'அன்பு ஓரீஇ' என்று அமைத்துக் குறட்பா விளக்கம் தருகின்றது. கொடுக்காமல் இருக்கவேண்டும்

என்ற வஞ்சக எண்ணத்தினை நெஞ்சத்தினிடம் வைத்துக் கொள்கிறான். அதனால் சுற்றத்தாரிடமும், நண்பர்களிடமும், மற்றவர்களிடமும் அன்பு காட்டுவதை நீக்கி விடுகின்றான்.

அன்பு இல்லாதவனிடம் யாரும் நெருங்க மாட்டார்கள் என்பது யாவரும் அறிந்த உலகியல் நடைமுறையாகும்.

## பிறரால் கொண்டு செல்லப்படும்

செல்வத்தினைப் பெற்றிருக்கும் செல்வர் தன் மனிதப் பிறவிக்கேயுரிய அன்புத் தன்மையினை ஒழித்துவிடுகிறான் என்றால் அதைவிட இழிவுத் தன்மை பிறிதொன்றும் இருக்கமுடியாது.

அப்படிப் பட்டவர்களும் உலகத்திலுண்டு என்பதைக் காட்டவே 'அன்பு ஒரீஇ' என்று கூறினார். அதாவது மனத்திலிருந்தே அன்புக் குணத்தை ஒழித்து விட்டவர்கள் என்பதாகும். அடுத்தபடியாக மற்றொரு கொடுமையான குணத்தினையும் கூறுகின்றார்.

அதுவே, தன்னைத் தானே வருத்திக் கொள்கின்ற தீய குணமாகும். செல்வம் பெற்று ஐம்புலன்களினால் அனுபவிக்க வேண்டிய இன்பத்தினையும் நீக்கி வாழ்கிறான் என்பதனால் தன்னைத்தான் வருத்திக் கொள்கிறான் என்று குறிக்கப்பட்டது.

தன்னை வருத்திக் கொள்கிறான் என்பதை, 'தற் செற்று' என்ற சொல்லினால் அமைத்துக் காட்டினார். அத்தகையவன் அறம் என்பதனையே நினைக்கவும் மாட்டான்.

அறம் நோக்கான்

'அறம் என்பதை நினைக்காதவன் வாழ்வதும் வாழாததும் ஒன்றேயாகும். வறியவர்களுக்கு ஈதல் வேண்டும் என்கின்ற பண்பாடு அறத்தினுள் அடங்கியதாகும்.

பெருஞ் செல்வத்தைச் சம்பாதித்த ஒருவன் அன்பும் இல்லாமல் தானும் அனுபவிக்காமல் ஈகையும் செய்யாமல் இருப்பானேயானால் அவனுடைய செல்வத்தை மற்றவர்கள் கொண்டு சென்று விடுவார்கள் என்று குறிப்பிடுகின்றது.

அவனுடைய தன்மையும் அவன் வாழ்க்கையும் அவன் பெற்ற செல்வத்தை மற்றவர்களே கொண்டு போகும்படி ஆக்கிவிடும் என்பதாயிற்று. 'அன்பு ஒரிஇ தற்செற்று அறம் நோக்காது ஈட்டிய—ஒண்பொருள் கொள்வார் பிறர்.'

பொருட் செல்வம் புகழ் வாய்ந்தது என்பதை ஒண் பொருள் என்பது குறித்துக் காட்டிற்று. பொருள் புகழுடையது என்று சொல்கின்ற பொழுது அதனைப் பெற்றிருப்பவன் நிறைந்த புகழினைத் தேடிக் கொள்ளுதற்குக் கடமைப்பட்டவனாகிறான்.

ஆனால் மனிதர்களுக்கே ஒவ்வாத தீமையான குணங்களைச் செல்வந்தன். ஒருவன் பெற்றிருந்தால் அவன் பெற்றிருக்கும் பொருளினை அவனுடன் யாதொரு தொடர்புமே இல்லாதவர்கள் கொண்டு செல்வார்கள் என்பதனைப் 'பிறர்' என்ற சொல் குறித்துக் காட்டிற்று.

## வெறுக்கப்படுபவன்

மனிதப் பண்பாட்டினை, இயல்பாகவே இருக்க வேண்டிய தன்மை என்று வற்புறுத்தி, அன்பின் அடிப்படையில் வாழவேண்டும் என்பதனைக் குறித்துக் காட்டினார். இத்தன்மையினை அறியாமல் அன்பு என்கின்ற உயரிய பண்பாட்டினையே நீக்கி வாழ்பவன பலராலும் வெறுக்கப்படுவான்.

பொருள் ஈட்டுவதனால் மிகுந்த துன்பங்களை அடைவான் என்பதே குறிப்பாயிற்று. நல்ல முறையில அச் செல்வத்தினைப் பயன்படுத்தாதவன பிறர் கொண்டு செல்லும் கொடும் துன்பத்திறகு ஆளாகி விடுவான் என்பதுமாயிற்று.

தொடர்பு இல்லாதவர்கள்செல்வத்தினைக்கொண்டு செல்வத்தால் செல்வம் படைத்தவன் எண்ணிய எண்ணஙகளெலலாம பழுதுபட்டனவாகிவிடும். ஆதலால் செலவத்தினை ஈட்டியவன் நலல முறையிலேயே அச்செலவத்தினைப் பயன் படுத்துதல் வேண்டும்.

## கயவர்கள் கூட்டம்

அப்படிப் பயன் படுத்தாவிட்டால் கயவர்கள் கூட்டத்திலேயே அப்படிப்பட்டவனும் வைத்து எண்ணப்படுவான். மனிதத் தன்மை என்பது சிறிதேனும் இல்லாமல் மனிதத் தோற்றத்தை மட்டும் பெற்று வாழ்பவர்களே 'கயவர்கள்' எனப்படுவார்கள். கீழ் மக்களாகக் கருதப்படுபவர்களே கயவர்கள் என்று குறிக்கப்படுபவர்களாவார்கள்.

சிறந்த மக்கட் பிறவிக்கு இருக்க வேண்டிய தன்மைகள் அவர்களிடம் இரா.

மனித உள்ளம் அவர்களிடம் காணப்படாது. மனிதர்களைப்போல அவர்கள் காட்டிக் கொள்வார்கள். பிறருக்கு உதவி செய்தல் என்கின்ற பண்பாடே அவர்களுக்குத் தோன்றாது. அவர்கள் பிறரால் கொடுமைப் படுத்தப்பட்ட பொழுது நற்செயல்களைச் செய்யும் நிலைக்கு வருவார்கள்.

ஈகைத்தன்மை என்பதையே அவர்கள் எண்ண மாட்டார்கள். கயவர்களும் செல்வம் படைத்தவர்களாக இருத்தல் கூடும். தாமாகவே நற்செயல்கள் செய்யும் சிந்தனை அவர்களுக்கு வராது. சான்றோர்கள் எனப்படும் பெரியவர்கள் மற்றவர்களுக்கு இயன்றவரை கொடுத்து உதவுவார்கள்.

இப்படிப்பட்டவர்களுக்கு முற்றிலும் மாறான போக்கினைக் கொண்டவர்கள் கயவர்கள் ஆவார்கள். அடுத்து கொடுமை செய்யக் கூடிய நிலையிலும் கயவர்கள் தங்களை வைத்துக் கொள்வார்கள். கரும்பினை நசுக்கிச் சாற்றினைப் பிழிவதுபோல கயவர்களை நடத்தினால்தான் அவர்கள் பயன் படுவார்கள்.

## விதிரார்

தாம் சாப்பிட்ட கையினைக்கூட யாசிப்பவர்களுக் குத் தெறிக்கமாட்டார்கள். அதாவது யாசிக்கின்ற பிச்சைக்காரர்களுக்குக்கூட கடுகளவேனும் இரக்கம்

காட்டக்கூடிய மனம் படைக்காதவர்களே கயவர்கள் ஆவார். 'ஈர்ங்கை விதிரார்' என்ற சொற்களினால் இவர்களுடைய கீழ்மையான மனத்தினை ஆசிரியர் எடுத்துக் கூறுகின்றார்.

சாப்பிட்ட பிறகு கையில் ஒட்டிக் கொண்டிருக்கக் கூடிய பருக்கைகளைக் கூடக் கொடுக்க மனமில்லாதவர்கள் என்பதே இதன் கருத்தாகும்.

இப்படிப்பட்டவர்கள் செல்வம் பெற்றிருந்தால் நாட்டுக்கே தீங்கு என்பது பொருளாகும். இப்படிப்பட்ட கயவர்களும் கொடுக்கும்படியான நேரத்தினையும் உண்டாக்குதல் முடியும்.

அதாவது கைகளை முறுக்கிக் கயவர்களின் கன்னத்தில் பற்கள் உடைபடும்படி அடிப்பவர்களுக்குக் கயவர்கள் பொருள் கொடுப்பார்கள். கீழ்ப் பிறவிகளாகிய விலங்கினங்களிடம் வேலை வாங்க வேண்டுமென்றால் அவைகளை அடித்து வேலை செய்ய வைத்தல் உண்டு. அந்த நிலையிலேயே கயவர்களும் வைக்கப்பட்டுப் பேசப்படுகிறார்கள்.

'கொடிறு உடைக்கும் கூன்கையர்' என்ற ஒரு தொடரினை ஆசிரியர் வள்ளுவனார் குறிப்பிடுகின்றார். கைகளை முறுக்கிக் கன்னத்தில் அடித்து நொறுக்குகின்றவர்கள் என்பதே விளக்கிக் காட்டப்பட்டது. அப்படிப்பட்ட மக்களின் செயல்கள்தான் கயவர்களைப் பணிய வைக்கும்.

மக்கள் கூட்டத்திலிருந்து வருகின்ற கயவர்களைப் புரிந்து கொள்ளுதல் வேண்டும். புரிந்து கொண்டால்

தான் அவர்களிடம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பது தெரியும்.

கயவர்களைக் கொடுமைப்படுத்தி அக்கயவர்களைப் பொருள் கொடுக்கும்படிச் செய்பவர்களே 'கூன்கையர்' என்று குறிக்கப்பட்டார்கள்.

அறம் செய்தல் வேண்டும், ஈகைத்தன்மை வேண்டும், மனிதப் பண்பாடு வேண்டும் என்பவைகளை எல்லாம் கயவர்கள் உணர்ந்து கொள்ளும்படிச் செய்கின்ற வழியினை ஆசிரியர் தெளிவாகப் புலப்படுத்தினார்.

## கொடிறு உடைக்கப்படுவார்கள்

கொடிறு உடைப்பவர்கள் என்று கூறப்படுகின்ற ஆசிரியரின் கருத்து சிந்திக்கத் தக்கது. 'ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறு உடைக்கும்—கூன்கையர் அல்லாதவர்க்கு' என்ற குறட்பா கயவர்கள் வாழ்கின்ற வாழ்க்கை முறையினைக் குறிப்பிடுகின்றது.

கூன்கையராகிக் கொடுமை செய்பவர்களுக்குக் கயவர்கள் கொடுத்து உதவுவார்கள் என்றும் மற்றவர்களுக்குக் கொடுக்கமாட்டார்கள் என்பது 'அல்லாதவர்க்கு' என்ற குறிப்பு உணர்த்திற்று. இப்படிப்பட்ட கயவர்கள் மக்கள் கூட்டத்தில் வாழ்வதற்கே உரிமையற்றவர்கள் என்பதும் பெறப்பட்டது.

ஆதலால் மக்கள் கூட்டத்தில் மக்கள் என்று கருதப்பட வேண்டியவர்கள் யாவர் என்பதும் மாக்களாக ஒதுக்கப்பட வேண்டியவர்கள் யாவர் என்பதும் புலனாயிற்று. இரப்பவர்களுக்குக் கொடுக்கும் தன்மை மக்கள் கூட்டத்திற்கு இயல்பாக இருக்க வேண்டிய பண்பாகும்.

## அளவுகோல்

அதுவே மக்களையும் மாக்களையும் வேறுபடுத்திக் காட்டும் அளவு கோலாகும். ஆதலால்தான் ஈகைத் தன்மையினை முன் வைத்துக் கயவர்களின் கீழான மனநிலையினை ஆசிரியர் எடுத்துக் காட்டினார்.

நல்லவர்களிடத்தில் இருக்கக்கூடிய செல்வம் நாட்டுக்குப் பயன்படும். கீழான தன்மை நிறைந்த கயவர்களிடத்தில் இருக்கும் செல்வம் யாதொரு பயனையும் தராது. கயவர்களின் கொடிய மனத்தினை மிக மிகத் தெளிவாக எடுத்துக் காட்ட வேண்டிய, 'விதிரார்' என்ற சொல்லினைக் குறட்பாவில் அமைத்தார்.

அடித்து நொறுக்கப்பட்டுக் கொடிய துன்பத்திற்கு ஆளாக்கப்படும் வரையிலும் கயவர்களுக்கு நற்செயல் புரியும் நாட்டமே வராது என்பதாகும். நற்பணிகளைச் செய்ய வேண்டி எடுத்துச் சொல்லுவோமேயானால் அப்படிப்பட்ட சொற்கள் கயவர்களைத் திருத்தாது என்பதாகும்.

## சொல்லப் பயன்படும் சான்றோர்

வாயளவிலே வார்த்தைகளினால் சொன்னாலும் பயன் தரக்கூடிய மக்களே சான்றோர்கள் எனப்படுவார்கள். அவர்களே மனிதத் தன்மை நிறைந்த பெருந்தன்மையாளர்கள் என்றும் குறிக்கப் படுவர். மனிதப் பிறப்பில் இருக்க வேண்டிய நற்பண்புகள் அனைத்தும் நிறைந்திருப்பவர்கள் சான்றோர்கள் எனக் கூறப்படுவர்.

சான்றோர்கள் இருப்பதினாலேதான் இவ்வுலகம் நின்று நிலைத்து நடந்தேறி வருகின்றது. சான்றோர்களே மேன்மக்கள் என்று கூறப்படும் தகுதிக்கு உரியவர்களாவார்கள்.

கரும்பிலிருந்து சாற்றினை எடுப்பதற்கு அக் கரும்பினை மிகவும் வன்மையாகப் பிழிதல் வேண்டும். மிகக்கொடுமை செய்கின்ற கள்வர்கள் போன்றவர்களே கயவர்களிடமிருக்கும் செல்வத்தினைக் கொண்டு செல்ல முடியும். 'சொல்லப் பயன்படுவர் சான்றோர்' என்று குறட்பா தொடங்கப் பெறுகின்றது.

சொன்ன மாத்திரத்திலேயே தங்களால் இயன்ற வரை மற்றவர்களுக்குப் பயன் படுகின்றவர்களே சான்றோர்கள் எனப்படுவர். கரும்பினைக் கசக்குவது போல் கொல்லும் தன்மையில் வைத்த பிறகே பயன்படுவார்கள் கீழ்மக்களாகிய கயவர்களாவார்கள்.

இக்கருத்தினைச் 'சொல்லப் பயன் படுவர் சான்றோர், கரும்புபோல் கொல்லப் பயன்படும் கீழ்' என்ற எளிய குறட்பா விளக்கிக் காட்டுகின்றது. இக்

குறட்பாவில் பிறருக்குப் பயன்படுதல் வேண்டும் என்ற உண்மையினை வலியுறுத்திக் காட்டினார். 'பயன் படுவர்' என்றும் 'பயன்படும்' என்றும் கூறப்பட்ட குறிப்புகள் சிந்திக்கத்தக்கனவாகும்.

## அழுக்காறு

ஆறறிவு படைத்த மக்கட் பிறவியினைப் பெற்றிருந்தும் கயவர்கள் கீழ்மக்களானபடியால் பகுத்தறிவற்ற விலங்கினங்களாகவே கருதப்படுவர்ர்கள். சொல்லினால் பயன்படுவோர்கள் சான்றோர்களாவார்கள். பயன்படுவார்கள் என்று குறிப்பிட்டதால், தங்களால் இயன்றவரை கொடுப்பார்கள் என்பதே யாகும்.

பிறப்பும் தோற்றமும் மக்கட் பிறவி என்று கூறுவதற்குப் போதாது. மனிதப் பண்பாடே இருக்க வேண்டியதாகும். கீழ்மக்களாகிய கயவர்களைக் கண்டு கொள்ள வேண்டிய வழிமுறை கூறப்பட்டது.

கயவர்களிடம் இருக்கும் பொருள் கள்வர் முதலியவர்களால் வலியக் கொண்டு செல்லப்படும் என்கின்ற குறிப்பினைக் 'கொல்ல' என்று சுட்டிக் காட்டினார்.

கயவர்களிடம் காணப்படுகின்ற இழிவான குணங்கள் எண்ணிறந்தவைகளாகும். கொடிய தீய குணங்களில் 'அழுக்காறு' என்று கூறப்படுகின்ற பொறாமை குணமும் ஒன்றாகும். பொறாமையுள்ளவர்கள் எப்பொழுதும் மற்றவர்களைக் குற்றம் சொல்லிக் கொண்டிருப்பார்கள்.

யாதொரு குற்றமும் பிறர்மீது இல்லையென்றாலும் அவைகளைக் கற்பனை செய்து பிறர்மீது கூறிப் பழி சுமத்தும் பழக்கம் கயவர்களிடம் உண்டு.

## கீழ்மக்களின் இழிவான தன்மைகள்

மற்றவர்கள் நன்றாக வாழ்வதையே கயவர்கள் விரும்பமாட்டார்கள். அழுக்காறு என்கின்ற பொறாமைக் குணம் கயவரிடத்தில் முழுமையாக எப்பொழுதும் இருந்து கொண்டிருக்கும். மற்றவர்கள் நன்றாக உடை உடுத்திக் கொண்டு போனாலும் அதைக் கண்டு கயவர்கள் பொறாமைப் படுவார்கள்.

பிறர் வயிறார உண்டு வாழ்வதையும் கண்டு கயவர்கள் அழுக்காறு கொள்வார்கள். கீழ் மக்களாகிய கயவர்களிடத்தில் இத்தகைய இழித்தன்மைகள் நிறைந்திருக்கும். இழிவான தன்மைகளில் முதன்மையாக வைத்துப் பேசப்படுவதை அழுக்காறு என்றும் சொல்லலாம்.

அவ்வளவு மிகக் கொடிய தீமையான குணம் அழுக்காறே யாகும். மற்றவர்கள் நன்றாக உடுத்தியும் உண்டும் இருப்பதைக் கயவர்கள் பார்த்தால், அப்படிப் பட்டவர்கள்மீது இல்லாத குற்றங்களைக் கற்பனை செய்து கயவர்கள் பேசுவார்கள்.

அவ்வாறே குற்றமே இல்லாதவர்கள் மீதும் குற்றங்கள் இருப்பது போல உண்டாக்கிப் பேசுவதில் கயவர்கள் வல்லவர்களாக இருப்பார்கள் என்று

ஆசிரியர் குறிப்பிடுகின்றார். 'வடுக்காண வற்றாகும் கீழ்'என்று ஒரு தொடரினைக் குறட்பாவில் அமைத்துக் காட்டுகின்றார்.

குற்றத்தினை உண்டாக்கிக் காட்டுவதில் வல்லவர்களாக இருப்பார்கள் என்பதே இதன் பொருளாகும். கீழ் மக்களுடைய இழிகுணமானபடியால்அக்குறட்பா 'கீழ்' என்று முடிந்தது. கீழ்மக்களின் உள்ளத்தினை வற்புறுத்தி எடுத்துக் காட்டினார்.

இருக்கின்ற குற்றத்தினை எடுத்துக் கூறுதல் என்கின்ற பழக்கம் கயவர்களிடம் உண்டு என்பதாகக் கூறாமல் இல்லாத குற்றத்தினைக் கற்பித்துக் கூறுகின்றவர்கள் கயவர்கள் என்கின்ற உண்மையினைச் சிந்தித்தல் வேண்டும்.

## கற்பனை செய்தே பேசுவார்கள்

மற்றவர்கள் உண்டும் உடுத்தியும் வாழ்வதே கயவர்களுக்குக் காணப் பொறுக்காததாகும். எனவே தான் பொறாமைக் காரணத்தினால் அப்படிப்பட்டவர்களைக் கண்டவுடனே அவர்கள்மீது குற்றங்களைக் கற்பிப்பது கயவர்களின் இயற்கையான கீழ்க் குணமாயிற்று.

கயவர்கள் நல்ல மக்களுக்கும் மாசு உண்டாகும்படிச் செய்வதையே தங்களின் குணமாகவும் பழக்கமாகவும் கொண்டிருப்பவர்களாவார்கள். இவ்வுண்மையினைக் குறட்பா மிக அழகாகக் கூறுகின்றது.

'உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல் வடுக்காண வற்றாகும் கீழ்'. மற்றவர்கள்மீது குற்றங்களைக் கற்பித்துக் கூறுவதையே தொழிலாகக் கொண்டு அத்தொழிலில் வன்மை பெற்றவர்கள் கயவர்களாவார்கள். நன் மக்களுக்குப் பிறர் மீது குற்றங்களைக் கற்பித்துக் கூறத் தெரியாது. கயவர்களுக்குத் தான் இச்செயல் முடியும்.

இல்லாத குற்றங்களைக் கயவர்கள் தாமே கண்டு பிடித்துக் கூறுவார்கள் என்பதனைக் 'காண' என்ற சொல் குறித்தது. 'வடு' என்பது குற்றமாகும். உடுப்பதையும் உண்ணுவதையும் கண்ட மாத்திரத்திலேயே கயவர்கள் மனம் பொறாதவர்களாக ஆகிவிடுவார்களென்றால் இன்னும் மற்றச் சிறப்புக்களுடனே பிறர் வாழ்ந்தால் கயவர்கள் எப்படி நடந்து கொள்வார்கள் என்பது சிந்தித்து உணர வேண்டியதாகும்.

## குற்றம் கற்பித்தல்

மக்களுக்கு இயல்பாக இருக்க வேண்டியவைகள் உடுப்பதும் உண்பதுமாகும். இவைகளைக் கண்டாலே அழுக்காறு கொள்ளுகின்ற கயவர்கள் மக்கள் கூட்டத்திற்கே எவ்வளவு ஆபத்தானவர்கள் என்பது கருதப்படவேண்டியதாகும்.

மற்றவர்களைக் கண்ட மாத்திரத்திலேயே கயவர்கள் பொறாமைப் படுவார்கள் என்கின்ற நுணுக்கத்தினைக் கூறவேண்டியே 'காணின்' என்று அமைத்தார். இல்லாத குற்றத்தைப் பிறர் மீது ஏற்றிக் கூறினால் எல்லோருமே நம்பி விடுவார்கள் என்று கூற முடியாது.

இருந்தாலும் நம்பி விடும்படி கயவர்கள் செய்து விடுவார்கள் என்பதற்காகவே அப்பழக்கத்தில் வன்மை பெற்றவர்கள் என்று கூறி, 'வற்றாகும் கீழ்' என்று அமைத்தார்.

பிறரிடத்தில் சிறிய செல்வமிருந்தாலும் கயவர்கள் பொறாமைப்படுவார்கள் என்பதை இக்குறட்பாவினால் உய்த்துணர வைத்தார். 'மக்களே போல்வர்' என்று கயவர்களை ஆசிரியர் குறிக்கின்றார். கயவர்களாகிய கீழ்மக்கள் வடிவத்தினால் மக்கள் போன்று இருப்பார்கள்.

## உவமை இல்லை

மனிதத் தன்மையினால் மக்களாக இருக்க மாட்டார்கள். எனவேதான் மக்களைப் போல இருப்பார் களென்று ஆசிரியர் கூறினார். அப்படிப்பட்ட கயவர் களுக்கு ஒப்புவமை கூற வேண்டுமென்றால் அக்கயவர் களையேதான் கூறவேண்டும். ஏனென்றால் அவர்களை ஒத்தவர்கள் வேறு யாருமே இல்லை என்பது ஆசிரியரின் கருத்தாகும்.

மக்கள் கூட்டத்திலிருந்து தனியாகவே பிரித்து வைத்துப் பார்க்கவேண்டியவர்கள் கயவர்களாவார்கள். கயவர்களைப் பற்றிக் குறிப்பிடும் போதெல்லாம் அவர்களை ஆசிரியர் வள்ளுவனார் கீழ்மக்கள் என்று கூறி அமைக்கின்றார்.

எல்லா வகையிலும் கீழானவர்கள் என்பதே குறிப்பாகும். அவர்களுக்கு ஒப்பாகக் கூறவேண்டிய வர்கள் யாருமே இல்லை. குறட்பாவில், 'யாம் கண்டதில்' என்பதாக வெளிப்படையாகவே கூறு கின்றார்.

மக்களும் கீழான மாக்களும்

எம்மால் அறிந்த வரையில் அப்படிப்பட்டவர்களைக் கண்டதே இல்லை என்று ஆசிரியர் வள்ளுவனார் வெளிப்படையாகவே கூறுவதற்கு நினைப்பாரேயானால் கயவர்களின் இழிநிலை—நன்கு புரிந்து கொள்ள வேண்டியதாகும். தோற்றத்தால் முழுவதும் மக்களையே ஒத்திருப்பவர்கள் கயவர்கள் ஆவார்கள்.

'அவர்களை ஒப்பானவர்களை யாம் கண்டதில்லை-' என்ற கருத்தினை மிகத் தெளிவாகக் குறட்பா ஒன்று கூறுகின்றது. 'மக்களே போல்வர் கயவர் அவரன்ன —ஒப்பாரி யாம் கண்டதில்'. இக்குறட்பாவில், 'அவரன்ன ஒப்பாரி' என்ற தொடர் ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய தொன்றாகும்.

உலகில் மிகவும் அளவு கடந்து இருக்கின்ற மக்கள் கூட்டத்தில் கயவர்களை ஒப்பவர்கள் யாருமே இருக்க முடியாது என்று குறிப்பிட்டுப் பேசுகின்ற கருத்தினை இக்குறட்பா வலியுறுத்துகின்றது.

ஆகையினால் மக்களையும் மக்கள் போன்றவர்களையும் வெவ்வேறாகப் பார்த்தல் வேண்டும். மனத்தின் தன்மையினைக் கொண்டே மக்களை அளந்து பார்த்தல் வேண்டும். மனித உணர்ச்சி இல்லாதவர்கள் மக்கள் கூட்டத்தில் சேர்க்கப்பட மாட்டார்கள்.

மன உணர்ச்சியின் தன்மையினை மக்களுக்கு உரிய சிறப்பான முறையில் பெற்றிருத்தல் வேண்டும்.

உண்ணுவதும் உடுப்பதும் இவை போன்றவைகளெல்லாம் மக்களுக்குப் பொதுவாக இருக்க முடியும். உண்ணுவதைக் கொண்டும் உடுத்திக் கொள்வதைக் கொண்டும் இவை போன்ற மற்ற செயல்களைக் கொண்டும் ஒருவனை மக்கள் கூட்டத்தில் வைத்துக் கணக்கிட்டுவிட முடியாது.

மக்களுக்கென்றே இருக்க வேண்டிய சிறப்பான குணம் இருந்தாக வேண்டும். குறிப்பாகச் சொல்ல வேண்டுமென்றால் 'நாணம்' என்பது மக்களுக்கேயுரிய உயர்ந்த பண்பாகும். அதாவது இழிவான தொழில்கள் செய்வதற்கு, பழிபாவச் செயல்கள் செய்வதற்கு அஞ்சுகின்ற பண்பாகும். அப்பண்பே ஆண்மைக்கு அடையாளமாகும்.

## இதுவே மாந்தர் சிறப்பு

இந்த நாணம் என்கிற குணம் இல்லாத மக்கள் மக்களாகக் கருதப்பட மாட்டார்கள். எல்லா மக்களுக்கும் உறக்கம், அச்சம், ஆசை, உண்ணுதல், உடுத்துதல் என்பவைகளெல்லாம் பொதுவாகத்தான் இருக்கச் செய்கின்றன. அப்படி யிருந்தாலும் மன உணர்ச்சியால் ஏற்படக் கூடிய மனிதப் பண்பாடுகள் இல்லையென்றால் மக்களாகக் கூறிக்கொள்ள உரிமை இல்லை.

'நாணுடைமை மாந்தர் சிறப்பு' என்று ஒரு குறட்பா முடிகின்றது. சிறப்பான பண்புகளில் ஒன்றாக அமைக்கப்பட்டு 'நாணம்' பேசப்படுகின்றது. அப்பண்பாடு மாந்தருக்கு இல்லையென்றால்

பொதுவாகக் கருதக் கூடிய ஏனைய தன்மைகள் இருந்தாலும் மக்கள் ஆகமாட்டார்கள் என்பதே யாகும்.

பழக்கத்தினால் ஏற்படக் கூடிய செயல்களைக் கொண்டு மக்கள் என்று கூறுதல் பொருந்தாது. 'ஊணுடை எச்சம் உயிர்க் கெல்லாம் வேறல்ல— நாணுடைமை மாந்தர் சிறப்பு'. இக்குறட்பா நாணுடைமையின் சிறப்பினைப் புலப்படுத்திற்று. உண்ணுவதும் உடுத்துவதும் கூறி இவை போன்ற மற்ற தன்மைகளெல்லாம் எச்சம் என்று அடக்கினார்.

### நாணத்தின் சிறப்பு

இப்படிப் பட்டவைகளெல்லாம் மக்களுக்குப் பொதுவானவை என்பதை விளக்க வேண்டி, 'வேறல்ல' என்றும் கூறினார். ஆதலால் வேறுபடுத்திக் காட்டுவது நாணுடைமை என்ற குணமே ஆயிற்று.

வாழ்க்கையில் இழிதொழில் புரிவதற்கு அஞ்சி, நாணம் கொள்ளுபவரை மக்கள் என்றும் அவ்வாறு நாணம் கொள்ளாமல் மனம்போன போக்கில் நடந்து கொண்டு வாழ்க்கை நடத்துபவர்களை மாக்கள் என்றும் குறிப்பால் உணர்த்தினார்.

பொதுப்படக் காணக்கூடிய தன்மைகளும் சிறப்பித்துக் காணக் கூடிய பண்பும் தெளிவு படுத்தப் பட்டன. மக்கள் கூட்டத்தில் ஒரு சிலரை மட்டும் சான்றோர்கள் என்று பேசப்படுவதுண்டு. அத்தகைய சான்றோர்கள் உயர்ந்த பண்பாடுகளைப் பெற்றிருப்பார்கள்.

சான்றோர்களினால் உலகம் நல்ல முறையில் நடந்து வருவதாகும். 'சால்பு' என்கின்ற பண்பாடு மிக உயர்ந்ததாகும். சான்றோர்களுக்கு முற்றிலும் மாறு பட்ட கீழ்மை நிலையுடைய தன்மைகளைப் பெற்றவர் களே கயவர்களாவார்கள்.

## சான்றோர்களின் பண்பு

பிறருக்கு என்றென்றும் உதவியாக இருப்பது சான்றோர்களின் பண்பாகும். துன்பம் செய்தவர் களுக்கும் இன்பம் செய்து அவர்களை நல்வழிப் படுத்துதல் சான்றோர்களின் கடமையாக இருக்கும்.

உள்ளத்தில் உள்ள கொள்கைகளை உறுதியுடன் என்றென்றும் நிலைத்து நிற்க வாழ்பவர்கள் சான்றோர்களாவர். மக்கட்பிறப்புக்குரிய அருமையான குணங்களெல்லாம் சான்றோர்களிடத்தில் காணப்படும். மற்றவர்களிடத்தில் அன்புடன் பழகுவார்கள். இழிவான செயல்களைச் செய்வதற்கு அஞ்சுவார்கள். நாணுடைமையினைக் கொண்டிருப்பார்கள்.

தக்கவர்களுக்குப் பேருதவி புரிய நாட்டங் கொள்வார்கள். அன்பும் நட்பும் நிறைந்தவர்களிடத்தில் இரக்கம் காட்டிக் கருணையுடன் நடந்து கொள்வார்கள். உண்மையே பேசுவார்கள். இத்தகைய பண்பாடு களெல்லாம் 'சால்பு' என்கின்ற சான்றாண்மையினைப் பெற்றிருப்பவர்களிடம் காணப்படுவனவாகும்.

சால்பு என்கின்ற பெருந்தன்மையான பண்பாட்டினை ஐந்து தூண்கள் தாங்கிக் கொண்டிருக்கின்றன என்பதாகக் குறட்பா ஒன்று பேசுகின்றது. 'அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மையோடு— ஐந்து சால்பூன்றிய தூண்'.

இக்குறட்பாவில் 'ஊன்றிய' என்றொரு அழகிய சொல்லினை ஆசிரியர் அமைத்திருக்கின்றார். தூண்கள் இல்லாவிட்டால் பாரத்தினைத் தாங்குவதற்கு வேறு வழியில்லை. அதுவே போல சால்பு என்கின்ற குணத்தினைத் தாங்கிக்கொண்டிருக்கும் குணங்கள் எனக் கூறப்பட்டன.

## புகழெய்தி வாழவேண்டும்

மேலோங்கிப் புகழெய்தி வாழவேண்டிய வாழ்க்கையே மனித வாழ்க்கையாகும் என்ற உண்மையினை இக்குறட்பா வற்புறுத்துகின்றது. மக்களோடு தொடர்பு கொண்டு, இணைந்து ஒன்றுபட்டு வாழ்கின்ற தன்மையினை நற்குணங்களே உண்டாக்கும் என்பதும் புலனாயிற்று.

பிற உயிர்களிடத்தில் சிறப்பாகக் காணமுடியாத பண்பு அன்பேயானபடியினால் சான்றாண்மைக் குணத்திற்கு அது இன்றியமையாததாகக் கூறப்பட்டது. சால்பு இல்லாத மக்கள் பயனற்றவர்கள் என்பது தெளிவான கருத்தாகும். பொருள் பெற்றிருந்தாலும் மனிதப் பண்பாடு இல்லாதவர்கள் உலகில் வாழ்ந்து வருவது தேவையற்றதேயாகும்.

அவர்களை இப்பூமிக்கு 'பாரம்' என்றே கூற வேண்டும். பொருள் சம்பாதிப்பதை விரும்ப வேண்டியது மக்களின் நற்பண்பேயாகும். ஈட்டிய பொருளினைத் தக்க முறையில் பயன்படுத்தாவிட்டால் அப்பொருள் பயனற்றதாகி விடுகின்றது. அவ்வாறு பயனற்றதாகச் செய்யும் பொருளாளனும் பயனற்றவனாகவே ஆகிவிடுகின்றான்.

## இசை வேண்டி வாழ்தலே மனித வாழ்க்கை

மக்கள் விரும்பித் தேடிக் கொள்ள வேண்டியது இசை யெனப்படும் புகழேயாகும். இப்புகழினை அனைவரும் நல்ல முறையில் அடைதல் வேண்டும். அப்புகழினைப் பெறுவதற்கு விருப்பம் கொள்ளுதலும் வேண்டும். அவ்வாறு விருப்பங் கொள்ளாத மக்கள் மக்களாகவே கருதப்படக் கூடாதவர்கள் ஆவார்கள். 'இசை வேண்டா ஆடவர்' என்று சுட்டிக் காட்டிக் குறட்பா அமைக்கின்றார்.

இவ்வாறு புகழினை விரும்பாத மக்கள் பூமியில் வாழ்வதே பாரமாகும். 'தோற்றம் நிலக்குப் பொறை' என்று குறட்பா முடிகின்றது. அவர்கள் வாழ்ந்து கொண்டிருப்பதே குற்றமாகும் என்கின்ற குறிப்பில் தோற்றம் என்பது குறிப்பிடப்பட்டது. 'ஈட்டம் இவறி இசை வேண்டா ஆடவர்—தோற்றம் நிலக்குப் பொறை'.

இக்குறட்பாவினால் பொருள் சம்பாதிப்பதை மட்டும் விரும்பிப் புகழ் சம்பாதிப்பதை விரும்பாத மக்களின் குறைபாடு தெள்ளத்தெளிய விளக்கப்

பட்டது. விரும்புகிறார்கள் என்பதைக் குறிப்பிட வேண்டியே 'இவறி' என்று அமைத்தார். 'ஈட்டம் இவறி' என்பதனால், 'மற்றவர்களை விடவும் அதிகமாகச் சம்பாதிப்போம்' என்கிற எண்ணம் கொண்ட மக்களின் ஆசை புலனாயிற்று.

அப்படிப்பட்டவர்கள் பொருளீட்டிச் சேகரிப்பதோடு நின்றுவிட்டு, புகழ் ஈட்ட விரும்பவில்லை யென்றால் மக்கட் பிறப்பினையே பயனற்றதாக்கி விட்டவர்களா வார்கள்.

பயனுடையவர்களாக வாழ்தலும் புகழ் விரும்பி வாழ்தலும் மக்கட் பிறவிக்கே சிறப்பான அரிய குணங்கள் என்பதை உணர்ந்து வாழ்வோமாக.



**செ. அரங்கநாயகம்,**

*மாண்புமிகு முன்னாள் கல்வித்துறை அமைச்சர்*

# மதிப்புரை

ஐம்பது ஆண்டுகட்கு முன்னால் திருக்குறள் பெரும் புலவர்களிடம் மட்டுமே அறிமுகமாகியிருந்தது. கொஞ்சம் கொஞ்சம் தெரிந்து வைத்த புலவர்களும் திருக்குறள் படித்தவர் என்று தம்மைக் கூறிக்கொண்டு பெருமை பெற்று வந்த நிலையை நாம் அறிகிறோம். புலவர்க்கெல்லாம் புலவராக விளங்கிய ஒரு சிலர் மட்டுமே திருக்குறளின் தெளிந்த அறிவை உணர்ந்தவராக விளங்கியிருக்கின்றனர். புலமை பெற்றவர்களுக்கே புலப்படாத திருக்குறளின் உண்மைக் கருத்துக்கள் பொதுமக்களுக்கு எட்டவே முடியாமல் இருந்தன.

உலகப் போக்கில் பல துறைகளிலும் "பொது மக்கள் காலம்" உருவாகியது. அரசியல், அறிவியல், வாழ்வியல், கல்வித்துறை, தொழில்துறை, கலைத்துறை எனும் அனைத்திலும் "பொது மக்களின் காலம்" உருவாயிற்று. இந்த இயற்கை போக்கை ஒட்டித் திருக்குறள் கருத்துக்களும் பொதுமக்களுக்கு உயர்த்தப்பெற்றது. அதற்கு ஒருவர் சிறப்பாகத் தோன்றியுள்ளார்: அன்னார் பெயர் **திருக்குறளார் வீ. முனிசாமி** என்பதாகும்.

திருக்குறளார் வீ. முனிசாமி அவர்கள் தமது இளம் வயதிலேயே திருக்குறளில் ஈடுபட்டுத் தாம் அறிந்து சுவைத்ததை மக்கள் எல்லோரும் அறிந்திட வேண்டும், என்று எண்ணமிட்டார். 'தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்னும் பெருநோக்குடன் திருக்குறளார், திருக்குறளை மக்கள் ஏற்கும் வகையில் விளக்கமாகக் கூறலானர்.

திருக்குறளையே வாழ்க்கையாகக் கொண்டு சிந்தனை, சொல், செயல் என முழுமையாக ஏற்று மக்களுக்குத் தினந்தோறும் திருக்குறள் கருத்துக்களை எடுத்துச் சொல்லி, பரவலாகத் திருக்குறளைப் பரப்பி வருகிற திருக்குறளார், தமிழறிஞர் அனைவராலும் பாராட்டப் பெறுகிறார்.

அரிய பெரிய தமிழ்த்தொண்டு புரியும் அறிஞர் திருக்குறளார் வீ. முனிசாமி அவர்கட்குத் தமிழுலகம் கடமைபட்டுள்ளது; அவர் தொண்டு மிகப் பெரியது; அவரைப் போற்றிப் பாராட்டுகிறேன்.